பட்ட வட மொழி வேதமானது ஓதி யுணரப்படுதற் கரி தென்று, வள்ளுவர் அவை உலகம் கொள்ளக் குறள் மொழிந்தார்—திரு வள்ளுவர் அவற்றை உலகத்தார் எளிதி னுணரும்படி திருக்குறளைக் கூறினர்.

முன் பறிய வெனவே, உற்சார்ப் பிணியாகலின், அக் காலத் தோர்க்கு உணர்தற் கேற்ற ஆயு ணீட்சியும் உணர்வு வலியும் இருந்தன வென்பதூ உம், அவசார்ப் பிணியாகலின் இக் காலத்தோர்க்கு அவை யில வென்பதூஉம் பெறப்பட்டன. இவ் விரண்டும் " அவா வறுத் தல் " முதற் பாட் டுரையிற் காண்க. தேய வழக்கிற் படாததும் வருந்திக் கற்போர்க்கு மாத்திரம் புலப்படுவதுமாய் எல்லா மொழி கட்கும் முற் பட்டுக் கடவுள் மொழியாய் நிற்றலின், முது மொழி யென்றார். அறம் முதலிய நான்கும் பிரிவுபட்டுத் தோன் றுமையை உடைத் தாகலின், உள்ள வரி தாயிற்று. பழைய வேதம் உளதாக வும் வே றிது சொல்லுதற்குக் காரணம் உணர்த்திய படி (௩௰௩)

மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்  
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு  
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்  
கறங்கிருண்மா லைக்கும் பெயர்.

இ—ள். பூமேல் புலவர் திருவள்ளுவ ரன்றிச் சிலவர் புலவ ரெனச் செப்பல்—பூவுலகின்கண்ணே புலவர் திருவள்ளுவரை யன்றி வேறு சிலரையும் புலவ ரென்று சொல்லுதல், மாலை நிலவு பிறங்கு ஒளி மாலைக்கும் பெயர் மற்றும் கறங்கு இருள் மாலைக் கும் பெயர் (செப்பல்)—மாலை யென்பது நிலவால் விளங்குகின்ற அந்திக்கும் பெயராக மற்றும் சூழ்கின்ற இருளை யுடைய அந்திக்கும் பெயராகச் சொல்லுதல் போலும்.

## சிறப்புப் பாயிரம்.



செப்ப லென்றது பின்னுங் கூட்டப்பட்டது. புலமையாவது பல வேறு வகைப்பட்ட நூலுணர்ச்சிகளை யெல்லாம் ஒருங்கே கொண்ட பேரறி வுடைமையாம். உயர் வொப்பற்ற இவரது புல மையைக் குறித்து நோக்குங்கால் ஏனையோர் புலமை புலமையன்றாய் முடிதலின், இவ்வாறு கூறினர். புலவ ரென்பது நாயனார்க்கே காரணப் பெயரா மென்றபடி. (௩௰௪)

### மதுரையறுவை வாணிகர் இளவேட்டனார்.

*இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு*
*மன்பதைக் கெல்லா மனமகிழ—வன்பொழியா*
*துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்*
*வள்ளுவர் வாயுறை வாழ்த்து.*

இ—ள். இன்பமும் துன்பமும் என்னும் இவை இரண்டும் உள்ளி உணர—பின் வரக்கடவனவாய சுகமுந் துக்கமு மென்னப் பட்ட இவற்றினுடைய இரு வகைக் காரணங்களையும் ஆராய்ந் தறியவும், அன்பு ஒழியாது மனம் மகிழ—தம்மே லன்பு நீங்காமல் உள்ளம் களி கூரவும், மன்பதைக் கெல்லாம் ஓது சீர் வள்ளுவர் வாயுறை வாழ்த்து உரைத்தார்—மக்கட் பரப்புக் கெல்லாம் புகழப் படுஞ் சீரை யுடைய திருவள்ளுவர் வாயுறை வாழ்த்தாகத் திருக் குறளைக் கூறினர்.

இன்பத்தின் காரணம் விதிக் குறளாலும், துன்பத்தின் காரணம் விலக்குக் குறளாலும் சொல்லப்பட்டன. முன்பு அறிதற்குப் பயன் அவற்றைச் செய்தலும் தவிர்தலுமாம். வேண்டுவன வெல்லாந் தொகுத் துணர்த்தலின், மன மகிழ்தல் சொல்லப்பட்டது. அவ் வேதம் போலாது பலர்க்கும் உபயோகியாகக் கூறலின், மன் பதைக் கெல்லா மென்றார். வாயுறை வாழ்த்தி னியல்பு " வாயுறை வாழ்த்தே வயங்க நாடின், வேம்புங் கடுவும் போல வெஞ்சொல், தாங்குத

லின்றி வழிநனி பயக்குமென், றோம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறிக. எதிர் கால விளை வுணர்ச்சி பயத்தல் சொல்லிய படி. (௩௰௫)

## கவிசாகரப் பெருந்தேவனார்.

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக் கமரரும்பற்
றேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

இ—ள். பூவிற்குத் தாமரை—மலர்களுக்குள்ளே தாமரை மலரும், பொன்னுக்குச் சாம்புனதம்—பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், ஆவிற்கு அருமுனி ஆ—பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைக்கு அமரர் உம்பல்—யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவில் திருமால் என—தேவர்களுக்குள்ளே திருமாலும் போல, பாவிற்கு வள்ளுவர் வெண்பாச் சிறந்த தென்ப—நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள்வெண்பாச் சிறந்த தென்று அறிவுடையோர் சொல்லுவர்.

'ஏ' அசை. 'பா' ஆகுபெயர். பொன் ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்புனதம் என நால் வகைப்படும். காமதேனு வசிட்ட முனியிடத் துள்ள தாகலின், அரு முனி யா வென்றார். உவமான முகத்தால் இஃது பல நூல்களினும் சிறந்து நிற்கின்ற மாட்சிமை சொல்லிய படி. (௩௰௬)

## மதுரைப் பெருமருதனார்.

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனா
ரோதவழுக் கற்ற துலகு.

## சிறப்புப் பாயிரம்.

இ—ள். *அறத் திறம் முப்பத் தெட்டால்—அறத்தின் கூறு பாடு முப்பத் தெட் டதிகாரங்களாலும், பொருட் டிறம் எழுபதால்—பொருட் கூறுபாடு எழுப ததிகாரங்களாலும், இன்பத் திறம் இருபத் தைந்தால்—காமத்தின் கூறுபாடு இருபத்தைந் ததிகாரங் களாலும், தெளிய—தெளியும்பொருட்டு, முறைமையால் வேத விழுப் பொருளை வெண் குறளால் வள்ளுவனார் ஓத—காரண காரிய வொழுங்கால் வேதத்தி னுயர்வாகிய பொருளைக் குறள் வெண் பாக்களாலே திருவள்ளுவனார் ஓதலால், உலகு வழுக்கு அற்றது—உலகமானது வழுவுதலினின்றும் நீங்கிற்று.*

*திறமும் ஆலும் முன்னுங் கூட்டப்பட்டன. உயர்வாகிய பொருள்—கரும காண்டம் பிரம காண்ட மிரண்டினுள்ளும் சிறந்த பொருள். வழுக்குதல்—விதியை விலக் கென்றும் விலக்கை விதி யென்றும் கோடல். 'உலகு' மக்களை யுணர்த்தி நின்றது. துணிவு பற்றி அற்ற தென இறந்த காலத்தாற் கூறினார். முன்னதின் வேறு பட்ட முப்பால்களின் அதிகாரத் தொகைகளோடு உலகிற்கு விளை யும் நன்மை சொல்லிய படி.* (கூஎ)

### கோவூர்க் கிழார்.

*அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந்*
*திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்*
*பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே*
*முன்னை முதுவோர் மொழி.*

இ—ள். *அறமுதல் நான்கும் அக லிடத்தோர் எல்லாம் திறம் உறத் தேர்ந்து தெளியக் குறள் வெண்பாப் பன்னிய வள்ளுவனார் பான் முறை—அறம் முதலிய நான்கு பொருள்களையும் மண்ணுலகத் துள்ளா ரெல்லாம் வகைப்பட ஆராய்ந்து தெளியும் பொருட்டுக்*

# திருவள்ளுவர் திருக்குறள்.

குறள் வெண்பாக்களாலே சொல்லப்பட்ட திருவள்ளுவ நாயனாரது முப் பால்களை யுடைய புத்தகத்தின்கண்ணே, முன்னை முதுவோர் மொழி நேர் ஒவ்வாது—முற் காலத்துள்ள பெரியோரது நூல் களுக்கு நேர்தல் பொருந்தாது.

'மொழி' ஆகுபெயர். பெரியோ ராவார்—வட மொழியி லும், தென் மொழியிலும், பிற மொழிகளிலும், நூல் செய்த முனி வரும், புலவரும், பிறரும். அந் நூல்களாவன—மனு முதலியோ ராலே செயப்பட்ட அற நூன் முதலியன. இதன் புத்தகத்தில் முன் னூல்களி லொன்றும் சேர்க்கப்படுதற்குத் தகுவ தன் றென்று சொல்லிய படி. (௩௰அ)

## உறையூர் முதுகூற்றனார்.

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு.

இ—ள். தேவிற் சிறந்த திருவள்ளுவர் குறள்வெண்பாவிற் சிறந்திடு முப் பால் பகரார்—தெய்வத் தன்மையாற் சிறந்த திருவள் ளுவரது குறள் வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றுகின்ற முப் பால்களையும் ஓதாரது, நாவிற்கு உயல் இல்லை—வாக்கிற்கு இன் சொற் சொல்லி வாழ்தல் உண்டாகாது; சொற் சுவை யோர் வில்லை—மனத்திற்குச் சொற்களின் சுவையை அறிதல் உண்டாகாது; மற்றும் செயல் இல்லை—இவையன்றியும் காயத்துக்கு நல்ல செய லுண்டா காது; என்னும் திரு—என்று நினைத்துத் திருமகள் அவரிடத்துச் சேரான்.

சுவை யோர்தற்கும் செயலுக்கும் உரிய மனமும், காயமும் வரு விக்கப்பட்டன. திருமகள் சேராமை யாகிய காரியத்தைக் காரண

மாக உபசரித்தார். ஓதார்க்கு உளவாகாமை கூறவே, ஓதுவோர்க்கு இவை உள. ஆகலின், வாக்கிற்குக் கடுஞ்சொல், பொய், கோள், புறங்கூறல்களும், மனத்திற்குப் பிறனில் விழைதல், பிறன் பொருள் விழைதல், பிறன் பொருட்குக் கேடெண்ணல், பிற வுயிர்க் கிறுதி யெண்ணல்களும், காயத்திற்குப் பிறன்மனை புணர்தல், உயிர்க் கொலை செய்தல், பழி யூ னுணல், பிறர் பொருள் வெளவல்களும், ஆகிய குற்றங்க ளெல்லாம் நீங்கு மென்பது பெறப்பட்டது. அற வின்பங் கட்குக் காரண மாதற் சிறப்புடைய பொருட் பேறு இஃ தோதலின் உளதா மென்ற படி. (௩௰௧)

## இழிகட் பெருங் கண்ணனார்.

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி னான்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா.

இ—ள். இம்மை மறுமை இரண்டும் எழுமைக்கும் செம்மை நெறியின் தெளிவு பெற—இக பரங்கட் காவன விரண்டையும் வினைப் பயன் றொடர்தற் குரிய வழு பிறப்பிற்குமாகச் செவ்வை யான வழியால் யாவரும் தெளிதல் பெறவும், மும்மையின் அவற் றின் வீடு நான்கின் விதி வழங்க—அறம் பொருள் இன்ப மென்னும் முப்பால்களுள் அம் முப்பாற் பொருள்களோடு வீடுமாகிய நாற் பொருள்களது விதிகளும் வழங்கவும், வள்ளுவனார் இன் குறள் வெண்பாப் பாடினர்—திருவள்ளுவ நாயனார் இனிய குறள் வெண் பாவைப் பாடினர்.

செவ்வையான வழி, விதியும் பத்தியும் ஞானமும், நோயாளிக்கு மருந்தும் அனுபானமும் பத்தியமும்போல், ஒன்றற் கொன்று முர

ஞாது கூடி நிற்கும் வழி. வீட்டு விதி துறவறத்திற் காண்க. இம்மை மறுமை வீடு மூன்றும் பயக்குமாறு சொல்லிய படி. (சம)

## செயிர்க் காவிரியார் மகனார் சாத்தனார்.

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார்.

இ—ள். ஆவனவும் ஆகாதனவும் அறிவுடையார் யாவரும் எடுத்தியம்ப வல்லார்—மக்களுக்கு ஆவனவற்றையும், ஆகாதவற்றையும் அறிவுடையார் யாவரும் இனி இதிலிருந்து எடுத்துச் சொல்லுதற்கு வல்லவராவார்; தேவர் திருவள்ளுவர் செப்பியவே பொருவில் ஒழுக்கம் பூண்டார் செய்வார்—ஆதலால், தேவராகிய திருவள்ளுவராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர் செய்வார்.

இங்ஙனங் கூறவே, அவ் வேதத்திலிருந்து உள்ளவா றெடுத்துச் சொல்லுதல் அறிவுடையார்க்கு முடியாமையால், ஒழுக்கம் பூண்டார்க்கு அதன்கண்ணே சொல்லப்பட்ட படி வழுவாமற் செய்தல் கூடாமை காட்டப்பட்டது. 'தாம்', 'உம்' அசைகள். ஆவன—இன்பத்தைத் தருவன. ஆகாதன—துன்பத்தைத் தருவன. ஒப்பில்லாத ஒழுக்கம்—கொல்லாமை முதலியன. போத காசிரியருக்கும், கேட் டொழுகுவோர்க்கும் வரும் நன்மை சொல்லிய படி. (சமக)

## செயலூர்க் கொடுஞ்செங் கண்ணனார்.

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா—ராதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

# சிறப்புப் பாயிரம்.

இ—ள். வேதப் பொருளை உலகோர் ஓத விரகால் விரித்துத் தமிழால் உரை செய்தார்—வேதத்தின் பொருளை உலகத்தார் ஓதி யுணரும் பொருட்டு உபாயத்தால் விரித்துத் தமிழ் மொழியினாலே சொல்லி யருளினார்; ஆதலால், உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் வள்ளுவர் வாய் மொழிமாட்டு உண்டு என்ப—ஆதலால், நினைப் பவர் நினைக்கும் பொருள்க ளெல்லாம் திருவள்ளுவர் திருவாயிற் பிறந்த திருக்குறளின்கண்ணே உண்டென்று அறிவுடையோர் சொல்லுவர்.

உபாயத்தால் விரித்தல், சொற் சுருக்கத்தால் ஓதற் கெளிதென மன வெழுச்சி யுண்டாக்கிக் கற்போராது அறி வளவிற் கேற்கப் பொரு ளளவு விரிய வைத்தல். நினைக்கப் படும் பொருள்க ளெல் லாம் இதன்கண்ணே இக் காரணத்தால் தோன்றுநின்றன வென்று கூறிய படி. (௪௰௨)

## வண்ணக்கஞ் சாத்தனார்.

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா—லாரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து.

இ—ள். ஆரியமும் செந் தமிழும் ஆராய்ந்து இதனின் இது சீரியது என்று ஒன்றைச் செப் பரிது—வடமொழியையுந் தென் மொழியையும் ஆராய்ந்து இதைக்காட்டினும் இது சிறப்புடைத் தென்று ஒன்றைத் தெரிந்து சொல்லுதல் கூடாது; ஆரியம் வேதம் உடைத்துத் தமிழ் திருவள்ளுவனார் ஓது குறட்பா உடைத்து—வட மொழி வேத முடைத்து; தமிழ்மொழி திருவள்ளுவ நாயனார் சொல்லிய குறட்பா வுடைத்து (ஆதலால்).

'ஆல்' அசை. வடமொழியும் தென்மொழியும் பிறமொழிகள் போலாது பாணினியாரும் அகத்தியனுரு முதலாகிய முனிவர்களாலே செய்யப்பட்ட இலக்கண நூல்களாலே சீர்திருந்தி நிற்றன் முதலிய குணங்க ளுடைமையாலும், அது பிராகிருத முதலியவற்றுக்குப் போல் இது ஆந்திரம் முதலியவற்றுக்கு முதலாய் நிற்றலாலும் ஒன்றற் கொன்று குறைபா டுடைத் தன்றேனும், வேதமுடைமை பற்றி வடமொழிக்குச் சொல்லப்பட்ட உயர்வு தென்மொழிக்கண்ணே திருக்குறள் உண்டாதலின் இனி இல்லையென்றற்கு, இதனி னிது சீரிய தென் றென்றைச் செப்பரி தென்றார். இத் திருக்குறளாலே வடமொழியோடு தென் மொழிக்கு ஒப்புமை நிறைவு சொல்லிய படி. (சயங)

களத்தூர்க் கிழார்.

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதனான்குஞ் சாலு—மருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

இ—ள். அரு மறைகள் ஐந்தும் சமய நூல் ஆறும் நம் வள்ளுவனார் புந்தி மொழிந்த பொருள்—இருக்கு முதற் பாரத மீறாகிய அரிய வேதங்க ளைந்தும் அவ் வேதத்தின் வழிப்பட்ட சமய நூல்களாறும் நம்முடைய திருவள்ளுவரால் உலகத்தார்க்குப் புத்தியாகச் சொல்லப்பட்ட நூலி லடங்கும்; ஒருவர் இரு குறளே முப்பாலின் ஓதும் தருமம் முதல் நான்கும் சாலும்—ஆதலால், ஒருவர் ஒரு விகற்பமும் இரு விகற்பமு மாகிய இருவகைக் குறள்களையுமே முப்பால்களில் அத்தியயனஞ் செய்து அறியப்படுகின்ற அறம் முதலிய நாற் பொருள்களும் அவருக்குப் போதும்.

ஒருவனுக்கே ஐந்தும் ஓதி யுணர முடிவு போகாது. வேறு

# சிறப்புப் பாயிரம்.

வேறான அதிகாரிக ளுடைமை பற்றி, அரு மறைகளைந்து மென்றார். சமய நூ லாறும் ஒன்றே பொரு ளென்னும் பாட்டுரையிற் காண்க. நமக் கெல்லாம் அறி வொழுக்கங் கொளுத்தி நல் வழிப் படுத்த வந்த பரமாசாரியர் இவரே யென்னு முரிமை தோன்றற்கு நம் வள்ளுவனு ரென்றார். மறைகளைந்துஞ் சமய நூ லாறும் நம் வள்ளுவனார் புந்தி மொழிந்த பொரு ளெனலால், அவை பலவற்றி னும் வேறு வேறு வகைப்பட்டுச் சிறந்துநின்ற கருத்துக்க ளெல் லாம் இவ் வொரு நூற்கண்ணே அடங்கி நிற்கின்றமை சொல்லப் பட்ட தாயிற்று. 'பொருள்' ஆகுபெயர். ஒருவ ரெனப் பொதுப் படக் கூறலால், இதனை ஓதுதற்குப் பெண்பாலாருக்கும் அதிகார முண்டென்பது கொள்ளப்பட்டது. இவ் வொரு நூலோதி யுணர்ந் தோர் அரு மறைகளைந்துஞ் சமய நூ லாறும் ஓதி யுணர்ந்தோ ராவ ரென்ற படி. (சமிச)

நச்சுமனார்.

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண—மிழுக்கின்றி
யென்றெவர் செய்தன வெல்லா மியம்பின
வின்றிவ ரின்குறள்வெண் பா.

இ—ள். எழுத்து அசை சீர் அடி சொல் பொருள் யாப்பு வழுக்கு இல் வனப்பு அணி வண்ணம் இழுக்கு இன்றி என்று எவர் செய்தன—எழுத்துமுதல் வண்ணமீறாகச் சொல்லப்பட்ட இவற் றுள் வழுவுத லில்லாமல் எக் காலத்தில் எவரால் அவை செய்யப் பட்டன, எல்லாம் இன்று இவர் இன் குறள் வெண்பா இயம்பின— அவை யெல்லாம் இக் காலத்து இத் திருவள்ளுவராலே செய்யப் பட்ட இவ் வினிய குறள் வெண்பாக்களிற் சொல்லப்பட்டன.

வனப்பு-அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு,

புலன், இழைபு. அணி—சொல்லணி, பொருளணி, ஒலியணி. வண்ணம்—குறிலகவற்றூங்கிசை, வண்ணம்; முதலியன. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு பாவலர் ஒவ்வொரு குணத்திஞலே சிறந்து விளங்க நூல் செய்தனர்; இவரோ வெனில் எல்லாக் குணங்களாலும் நிறைந்து சிறந்து விளங்கச் செய்தமையின், இவ்வாறு கூறினர். இதன் பாக்களின் சிறப்புச் சொல்லிய படி. (சமடு)

## அக்காரக்கனி நச்சுமனர்.

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்—தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ னயத்தின் பயன்.

இ—ள். கலை நிரம்பிக் காண்டற்கு இனிதாகிக் கண்ணி னிலை நிரம்பு நீர்மைத்து எனினும்—மதியமும் முப்பா னூலும் பதினறு கலைகளாலும் அறுபத்து நாலு கலைகளாலும் நிறைந்து, காண்டற்கு இனிதாகி—ஆராய்ச்சி செய்தற்கு இனிதாகி, கண்ணின் நிலை நிரம்பும் நீர் மைத்து எனினும்—முகக் கண்ணி னிலையில் அகக் கண்ணி னிலையில் நிரம்புகின்ற தன்மை யுடைத்தாயினும், குண முடைத் தாயினும், வள்ளுவர் முப்பா னூல் நயத்து இன் பயன் தொலைவு இலா வான் ஊர் மதியந் தனக்கு உண்டோ—திருவள்ளுவரது முப்பா னூலினது நயத்தால் விளைவதாகிய இனிய பயனது ஒழிவின்றி ஆகாசத்தின்கண்ணே திரிகின்ற மதியினிடத்து உண்டோ?

மதியந்தனக் கென்றது வேற்றுமை மயக்கம். 'ஓகாரம்' எதிர்மறை. ஆதாரமாகக் கொள்ளுதற்கு ஏற்புடைத் தல்லாத வானை ஆதாரமாகக் கோடலின், இழிவு தோன்றத் தொலை விலா வானூர் மதிய மென்றார். நயம்—மறுப்படாமை, மழுங்காமை, குறைவுறாமை முதலியன. பயன் இம்மை மறுமை வீட் டின்பங்கள்.

## சிறப்புப் பாயிரம்.

ஒப்புமை சொல்லுதற்கு நூல்களில் ஒன்றும் இன்மையால், ஏனைப் பொருள் பலவற்றினுஞ் சிறந்த மதியை யாயினும் சொல்லுது மெனப் புகின் அதுவும் இதனோற் றருவ தன் றென்ற படி. (சுகூ)

### நப்பாலத்தனார்.

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனு ரேற்றினர் வையத்து வாழ்வார்க
ளுள்ளிரு ணீக்கும் விளக்கு.

இ—ள். அறம் தகளி—தருமம் அகலும், பொருள் திரி—பொருள் திரியும், இன்பு நெய்—காமம் நெய்யும், செஞ் சொல் தீ—செவ்விய சொல் நெருப்பும், குறும் பாத் தண்டா—குறட் பாத் தண்டும் ஆக, வள்ளுவனார் வையத்து வாழ்வார்கள் உள் ளிருள் நீக்கும் விளக்கு ஏற்றினர்—திருவள்ளுவ நாயனார் பூமியின்கண் வாழ்வோரது அகத் திருளை ஒழிப்பதாகிய விளக்கு ஏற்றினர்.

ஆன்றல்—மேம்படுதல். அகத் திருள்—அஞ்ஞானம். தீச் சுடர், தகளி, முதலியவற்றோடு கூடிப் புறத் திருளை எப்படியோ, அப்படி நாயனாரது திருவாயிற் பிறந்த செஞ்சொல், அறம், முதலியவற்றோடு கூடி அகத் திருளைக் கெடுத்தலின், இங்ஙனம் உருவகஞ் செய லாயிற்று. மனையகத் தேற்றப்படுகிற விளக்கு அம் மனையகத் துள்ளார்க்கு மாத்திரமே உபயோகியாய் நிற்றலாலும், அகத் திருளைக் கெடுக்க வல்ல தன்மையாலும், இஃது உலகத்து வாழ்வோர் பலர்க்கும் உபயோகியாய் நிற்றலாலும், அகத்திருள் கெடுத்தலாலும், அதனின் இது பல கோடிமடங்கு மிக்குச் சிறந்து நிற்கின்றமை உணர்த்திய படி. (சுஎ)

### குலபதி நாயனார்.

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு டள்ளுதலால்—வள்ளுவனார்

# திருவள்ளுவர் திருக்குறள்.

வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

இ—ள். உள்ளக் கமலம் மலர்த்தி உளத்து உள்ள தள்ளற்கு அரிய இருள் தள்ளுதலால்—நெஞ்சமாகிய தாமரை மலரை மலர்த்தி மக்களது அகத்தி லுள்ள பிறி தொன்றனாலே நீக்கப்படாத அஞ் ஞான விருளை நீக்குதலால், வள்ளுவனார் வெள்ளைக் குறட்பாவும் வெங் கதிரும் குணத்தைக் கொண்டு ஒக்கும் எனக் கொள்ளத் தகும்—திருவள்ளுவரது குறள் வெண்பாவும் புறத்துத் தாமரை மலரை மலர்த்திப் புறத் திருளை நீக்குகின்ற சூரியனும் அச் செய் கையைக் கொண்டு ஒக்கு மென்று கொள்ளத் தகும்.

செயலும் தொழிற் பண் பெனப்படுதலின், குண மெனப் பட்டது; அது மலர்த்தலும் தள்ளுதலு மாம். குணத்தைக் கொண் டெனவே, செயப்படு பொருளைக் கொண்டு ஒக்கு மெனக் கொள் ளத் தகா தென்ற தாயிற்று. உலகுக் கெல்லாம் பே ரொளியாகிய சூரியனும் இதற்கு ஒரு புடை யொப்பா மென்ற படி. (சுல அ)

## தேனீக்குடிக் கீரனார்.

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலின்
றெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

இ—ள். தெய்வத் திருவள்ளுவர் முப்பாலிற் செப்பிய குற ளால்—தெய்வத் தன்மையை யுடைய திருவள்ளுவ நாயனார் மூன்று பால்களை யுடையதாகக் கூறிய குறணூலைக் கேட்டறிதலால், வையத்து வாழ்வார் மனத்துப் பொய்ப் பால பொய்யேயாய்ப் போயின;—உலகின்கண் வாழ்வாருடைய மனத்துப் பொய்யின் பகுதியிற்

## சிறப்புப் பாயிரம்.

பட்டவை யெல்லாம் பொய்யேயாய்ப் போயின; பொய் யல்லாத மெய்ப் பால மெய்யாய் விளங்கின—பொய்மை யல்லாத மெய்யின் பகுதியிற் பட்டவை யெல்லாம் மெய்யேயாய் விளங்கின.

குறளாற் பொய்ப் பால பொய்யேயாய்ப் போயின மெய்ப் பால மெய்யேயாய் விளங்கின எனவே, இதற்கு முன்னெல்லாம் உண்மை துணியப் படாமையின் பொய்ப் பால மெய்ப் பால போன் மேற் கொள்ளப் பட்டும், மெய்ப் பால பொய்ப் பால போற் கைவிடப் பட்டும் மயங்கிக் கிடந்தன வென்ற தாயிற்று. இதன் மெய்யுணர்வு பயத்தற் சிறப்புச் சொல்லிய படி. (சுமிக)

### கோடிஞாழன் பாணி பூதனார்.

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின்
றிறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு.

இ—ள். மறன் எறிந்த வாள் ஆர் நெடு மாற—பகைவரை யெறிந்த வாட்படை தங்கிய வீ ரேருங்கும் பாண்டிய ராசனே, வள்ளுவனார் தம் வாயாற் கேளாதன வெல்லாம் கேட்டு அறன் திறன் அறிந்தோம்—திருவள்ளுவ நாயனாரது வாக்கால் இதற்கு முன் கேட்கப்பட் டில்லாதவை யெல்லாம் இப்போது கேட்டு அறத்தின் றிறத்தை யறிந்தேம்; பொருட் டிறன் அறிந்தேம்—பொருளின் றிறத்தை அறிந்தேம்; இன்பின் திறன் அறிந்தேம்—இன்பத்தின் றிறத்தை அறிந்தேம்; வீட்டுத் திறன் தெளிந்தேம்—வீட்டின் றிறத்தை அறிந்தேம்.

திறன் அறம் முதலியவற்றோடுங் கூட்டப்பட்டது. 'மறன்' ஆகு பெயர். கேளாதன—பிற நூ லாசிரியர்க் கெல்லாம் அறிந்து சொல்லு

தற் கெட்டாதிருந்த அறம் முதலியவற்றி னுட்பங்கள். இம்மை மறுமை வீடுகளைக் குறித் துணர்தற் குரிய உறுதிப் பொரு ளன்கு முணர்தலின், இனி யாதொன்ருலுங் குறை வில்லை யென்ற படி. (௫௰)

கவுணியனுர்.

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனுர்
பன்னிய வின்குறள்வெண் பா.

இ—ள். முந்திய நன் னெறி நாம் அறிய நாப் புலமை வள்ளு வனுர் பன்னிய இன் குறள் வெண்பா—முற்பட்டதாகிய நல்ல வழியை நா மறியும் பொருட்டு நாவால் விளங்குகின்ற புலமையை யுடைய திருவள்ளுவ நாயனுராற் சொல்லப்பட்ட இனிய குறள் வெண்பாக்கள், சிந்தைக்கு இனிய—நினைத்தால் மனதிற்கு இன்பஞ் செய்வன; செவிக்கு இனிய—கேட்டாற் காதுக்கு இன்பஞ் செய்வன; வாய்க்கு இனிய—ஓதினுல் வாய்க்கு இன்பஞ் செய்வன; வந்த இரு வினைக்கு மா மருந்து—தொடர்ந்து வருகின்ற இரு வினைகளாகிய நோய்களுக்குப் பெரிய மருந்துக ளாவன.

குறட்பாவை மருந் தென்றமைக்கு ஏற்க வினையை நோயென் ருமையால், ஏக தேச ரூபகம். நல் வினையும் பிறவிக்கு ஏதுவாக லால், இருவினை யென்ருர். முற் பட்ட நல் வழி நன் மக்களுக்கு அநாதியா யமைந் துள்ளது; அது சமயத்தாரது பலவகைப்பட்ட கற்பனையினுலே மறைபட்டு நின்றமையின், நா மறிய வென்ருர். இந் நூலின் பாக்களைச் சிந்தித்தல் முதலியன செய்யுங்காலும் சொற் பொரு ணயங்களாலே இன்பம் விளைத்துத் தெய்வத் தன்மையால் வினைத் துயரும் ஒழிக்கு மென்ற படி. (௫௰௧)

# சிறப்புப் பாயிரம்.

## மதுரைப் பாலாசிரியனார்.

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோ
ருள்ளிரு ணீக்கு மொளி.

இ—ள். வெள்ளி வியாழம் விளங்கு இரவி வெண் டிங்கள் புற விருளைப் பொள்ளென நீக்கும்—சுக்கிரன் சுரகுரு சூரியன் சந்திரன் என்பன புறத்திருளை விரைவிலே நீக்கும் ஒளிகளாம்; தெள்ளிய வள்ளுவர் இன் குறள் வெண்பா அகிலத்தோர் உள் ளிருள் நீக்கும் ஒளி—முற்றுணர்ந்த திருவள்ளுவ நாயனாரது இனிய குறள் வெண்பா உலகத்தோரது உள்ளிருளை நீக்கும் ஒளியாம்.

இங்ஙனங் கூறவே, புறத் திருளுக்கு அவை பல வுள; அகத் திருளுக்கு இஃ தொன்றே உளதென்றதாயிற்று. அவற்றுள் ஒன் றாலும் நீக்கப்படாத அகத் திருளை நீக்க வல்ல தாகலின், இதற்கு எவ்வாற்றானும் ஒப்ப தொன் றின் றென்றபடி. (௩௰௨)

## ஆலங்குடி வங்கனார்.

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாதா—றெள்ளமுத
முண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து.

இ—ள். வள்ளுவர் பாட்டின் வளம் உரைக்கின் வாய் மடுக் கும் தெள் ளமுதின் தீஞ் சுவையும் ஒவ்வாது—திருவள்ளுவரது பாட்டினது தீஞ் சுவையைச் சொல்லுமிடத்து, உண்ணப் படுகின்ற

# திருவள்ளுவர் திருக்குறள்.

தெள்ளிய அமுதினது தித்திப்பாகிய சுவையும் ஒப்பாகாது; தெள்ளமுதம் உண்டு அறிவார் தேவர்—அத் தெள்ளிய அமுதை யுண்டு அதன் சுவையை அறிபவர் தேவர்கள்; வண் டமிழின் முப்பால் உலகடைய மகிழ்ந்து உண்ணும்—வளம் பொருந்திய தமிழின் கண்ணதாகிய முப்பாலாகிய அதின் மும் மடி சிறந்த பாலை எல்லா வுலகத்தாரும் மகிழ்ந்து உண்டு தீஞ் சுவை யறிவார்.

'வளம்' ஆகு பெயர். 'ஆல்' அசை. அவ் வமிர்தம் வாயுட் பெய்தவழி நாவிற் பட்ட சிறிது பொழு தளவே தீஞ் சுவை பயப்பது; இப் பாட்டு நெஞ்சின்க ணிலை பெற்று ஒழி வின்றித் தீஞ் சுவை பயத்தலின், ஒவ்வா தென்றார். 'முப்பால்' சிலிஷ்ட ரூபகம். இனி எவ் வுலகத்தாருக்குங் கரும பூமியாகிய இவ் வுலகத்துட் டோன்றி மெய்ப்பொரு ளுணர்ந்தன்றி வீட்டின்பம் பெறுதல் கூடாமையின், உல கடைய வுண்ணு மென்றார். அன்றி அவ் வுலகத்துத் தேவர்களும் தமது மேற்பட்ட வறிவினாலே இதனது உயர் வொப்பற்ற குணத்தை அறிந்து முக்கியப் பிரமாணமாகக் கொண்டு மகிழ் கூர்வ ரென்பது பற்றி, அங்ஙனங் கூறினா ரெனினும் அமையும். இஃது இவ் வுலகத்தார்க்கே யன்றி அவ் வுலகத்தார்க்கும் பயன் படுமாறு சொல்லிய படி.

(௫௰௧)

## இடைக்காடர்.

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

இ—ள். குறள்—நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், கடுகைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த—கடுகை அதன் நடுவே துளை செய்து ஏழு கட னீரையும் அத் துளையுட் பெய்து தன் னளவிற் குறுகும் வண்ணம் தறித்து வைத்தா லது போல்வன வாகும்.

## சிறப்புப் பாயிரம்.

மிக்க சிற்றளவிற்கு எடுத்துச் சொல்லப்படுவதொரு நுண் பொருளாகலின், கடுகு சொல்லப்பட்டது. இரண்டனுருபு தறித்த வென் வினை கொண்டது. துளைத்தல்—உள்ளீடு போக்குதல். புகவிடென்பது புகட்டென விகாரப்பட்டு முதனிலையாய் நிற்றலின் புகட்டி யென்றாயது. துளையினிடைவெளிக்கும் அதன் புற மூடிக் கும் கொள்ளப் பட்ட பங்கு சிறிதாக ஒழிந்த பங்கு பெரிதாகலின், குறுக வென்றார். தறித்தாலன்ன வெனற் பாலது தறித்த வென இடைக் குறைந்து நின்றது. இல்லாத பொருளை உவமானமாகக் கூறலின், இல் பொருளுவமை. குறட்பாக்களுள் ஒவ்வொன்றும் அது போறலின், தறித்த வெனப் பன்மையாற் கூற வாயிற்று. 'குறள்' பால் பகா வஃறிணைப் பெயராகலின், இங்கே பன்மைக்கா யது. இங்ஙனங் கூறவே, குறட்பாவின் சொற் சுருக்கமும் அதனுள் அடக்கப்பட்ட பொருள் விரிவும் நோக்கும் வழி, அக் கடுகும் எழ் கட னீரும் போலு மென்றதாயிற்று. பொருள் விரிவி னளவு படாமை சொல்லிய படி. (௵௪)

### ஔவையார்.

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

**பொருள்.** குறள் நாயனாரது நூலின் ஆயிரத்து மூந் நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், அணுவைத் துளைத்து எழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த—அணுவை அதன் நடுவே துளை செய்து எழு கடனீரையும் அத் துளையுட் பெய்து தன்னளவிற் குறுகும் வண்ணம்தறித்து வைத்தா லது போல்வன வாம்.

**விரிவு.** மிக மிகச் சிற்றளவிற்கு எடுத்துச் சொல்லப்படுவ தொரு நுண் பொருளாகலின், அணு சொல்லப்பட்டது. முந்திய குறளின் விரிவுரையை நோக்குக. சொற் சுருக்கத்தின் அளவு படா

மையும் பொருள் விரிவின் அளவு படாமையும் சொல்லிய படி. இது வ. உ. சி. உரை. (௫௰௫)

## மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

பொன்பூத்த மகரந்தப் புதுமதுவச் செழுங்கமலப் பொகுட்டு
வாழ்வோன், தென்பூத்த நான்முகத்தோ னலனுறவை
முகத்தோனே தெளிமி னென்னக், கொன்பூத்த தமிழ்
வழங்கு நிலத்தினற மினிதெழுந்து குதிகொண் டாட, மின்
பூத்த செங்கதிரின் வள்ளுவரென் றொருநாம மேவத் தோன்றி;

**பொருள்.** பொன் பூத்த மகரந்த புது மதுவ செழு கமல பொகுட்டு வாழ்வோன்—பொன்னிறம் பொருந்திய மகரந்தப் பொடியும் புதிய தேனும் கொண்ட செழுமையான தாமரையின் கொட்டையினிடத்து வாழ்வோனாகிய, தென் பூத்த நால் முகத்தோன்—அழகு பொருந்திய நான்கு முகத்தை யுடைய பிரம தேவன், நலன் ஐ முகத்தோன் தெளிமின் என்ன—நன்மை வாய்ந்த ஐந்து முகத்தோனாகிய சிவபிரான் தெளிப்பீர் என்று சொல்ல, கொன் பூத்த தமிழ் வழங்கும் நிலத்தின் அறம் இனிது எழுந்து குதி கொண்டாட—பெருமை பொருந்திய தமிழ் மொழி வழங்கும் நிலத்தின்கண் அறமானது இனிது எழுந்து பொலிந்து விளங்க, மின் பூத்த செங் கதிரின்—ஒளி பொருந்திய சூரியனைப்போல், வள்ளுவர் என்று ஒரு நாமம் மேவ தோன்றி—வள்ளுவர் என்று ஒரு பெயர் பொருந்தப் பிறந்து;

**விரிவு.** மதுவம்—தேன். இச் செய்யுள் குளகம். குளகம்—முற்றுப் பெறாத செய்யுள்.

**கருத்து.** பிரம தேவரைப் பார்த்துச் சிவபிரான் அறத்தைத் தெளிமின் என அவர் வள்ளுவராகப் பிறந்தார். (௫௰௬)

## சிறப்புப் பாயிரம்.

பொலிதரமுன் னுணர்ந்தமறை யகத்தமைந்த வறமுதனாற்
பொருளு மேன்மேல், ஒலிதரமற் றந்நான்கு மொருமூன்றி
னடக்கியின்றே றொழுக்கி யாங்கு, மெலிதரலில் வரை
முதற்பே ருருவொருசிற் றுடியகம் விளங்கன் மான,நலிதரறீர்
சிலசொல்லிற் பலபொருளுஞ் செறித்துநவை நண்ணு தாக;

பொருள். பொலிதர முன் உணர்ந்த மறை அகத்து அமைந்த அறம் முதல் நால் பொருளும்—விளக்கமாக முன் அறிந்த வேதத்தினுள்ளே நிரம்பிக் கிடந்த அறம் முதலிய நான்கு பொருள்களும், மேல் மேல் ஒலிதர—மேலும் மேலும் ஒலித்து விளங்க, அ நான்கும் ஒரு மூன்றின் அடக்கி இன் தேன் ஒழுக்கி ஆங்கு—அந் நான்கு பொருள்களையும் ஒப்பற்ற (அறம், பொருள், இன்பம் என்ற) மூன்று பொருள்களுள் அடக்கி இனிய தேனை ஒழுக்கினாற்போல, மெலிதரல் இல் வரை முதல் பெரு உரு ஒரு சிறு ஆடியகம் விளங்கல் மான—மெலிதல் இல்லாத மலை முதலிய பெரிய உருக்கள் ஒரு சிறிய கண்ணாடியினுள்ளே விளங்குதலைப் போல, நலிதரல் தீர் சில சொல்லில் பல பொருளும் செறித்து—அழிதல் இல்லாத சில சொற்களில் பல பொருள்களையும் நிறைத்து, நவை நண்ணாது ஆக—குற்றம் பொருந்தாமல் இருக்க;

அகலம். அறம் முதலிய நான்கு பொருள்கள்—அறம், பொருள், இன்பம், வீடு. மற்று என்பது அசை. பெரு+உரு=பேருரு. சிறு+ஆடி=சிற்றுடி. இச் செய்யுளும் குளகம்.

கருத்து. அவ் வள்ளுவர் அறம் முதலிய நான்கையும் அறம் முதலிய மூன்றில் அடக்கிக் கூறினர். (உ)

மொழிசுருங்கல் பொருள்விளங்கன் மொழியவினி தாத
னல மொழிபு ணர்த்தல், வழியமையோ சையிற்பொலித

வாழ்ந்திருத்தன் முறைநிறுவன் மலைவு தீர்தல், பொழிவிழுமி யதுபயத்தல் காட்டாத லிப்பத்தும் பொலிய வாய்ந்த, கழி பொருளுங் கருதணியு நோக்குமிடந் தொறுங்கிடந்து களிப்புச் செய்ய;

**பொருள்.** மொழி சுருங்கல்—சொற்கள் சுருங்கி நிற்றல், பொருள் விளங்கல்—பொருள்கள் (நன்கு) விளங்குதல், மொழிய இனிது ஆதல் —சொல்வதற்கு இன்பம் பயப்பதாதல், நல்ல மொழி புணர்த்தல்—நல்ல சொற்களை (த் தெரிந்தெடுத்து) ச் சேர்த்தல், வழி அமை ஓசையின் பொலிதல்—முன்னூல் வழியில் அமைத்த ஓசையோடு விளங்குதல், ஆழ்ந்து இருத்தல்—ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்டிருத்தல், முறை நிறுவல்—முறைப்படி அமைத்தல், மலைவு தீர்தல்—முன்னூல் வழக்கோடு மாறுபடாமல் கூறல், பொழி விழுமியது பயத்தல்—மிகச் சிறந்த பொருளைத் தருதல், காட்டு ஆதல்—உதாரண மாதல், இ பத்தும் பொலிய வாய்ந்த—இப் பத்தும் அழகுபட நிறைந்த, கழி பொருளும் கருது அணியும்—பெரும் பொருளும் மதிக்கும் அலங்கார மும், நோக்கும் இடந்தொறும் கிடந்து களிப்பு செய்ய—பார்க்கும் இடந்தோறும் இருந்து உவகையை யுண்டாக்க;

**அகலம்.** 'நல்ல' செய்யுள் விகாரத்தால் லகர வொற்றுக் கெட் டும், 'இன்' உருபு ஒடு என்னும் பொருள் தந்தும் நின்றன. 'கருது' வினைத்தொகை. வெண்பா ஓசை யாவன, ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச் செப்பல், ஒழுகிசைச் செப்பல். இதுவும் குளகம்.

**கருத்து.** வள்ளுவரால் இயற்றப் பெற்ற குறள் வெண்பாக் களில் இச் செய்யுளிற் கூறிய பத்து அழகும் நிறைந்து விளங்கு கின்றன. (கூ)

மையேறு பொழின்மதுரை மாநகரத் தருட்புலமை மாட்சி

யார்முன், கையேறு திருமூலா கமச்சோதி மறைமுளைத்த
கனிவாய் விண்டு, பையேறு மணிபொருமோர் துதிகவிசொற்
றிடப்பலரும் பரவிப் போற்ற, வையேறு திருக்குறளென்
றொருநூல்செய் துலகுவப்ப வளித்தா னாக;

பொருள். மை ஏறு பொழில் மதுரை மா நகரத்து—மேகங்கள் தங்கும் சோலைகள் சூழ்ந்த மதுரை என்னும் பெரிய நகரத்தின் கண், அருள் புலமை மாட்சியார் முன்—தெய்வ அருட் புலமையால் மாட்சிமைப்பட்டார் முன், கை ஏறு திரு மூல ஆகம சோதி—கையில் பொருந்திய அழகிய ஆதி ஆகமத்தை உடைய பரஞ்சோதியாகிய இறைவன், மறை முளைத்த கனிவாய் விண்டு—வேதங்கள் தோன்றிய இனிய வாயைத் திறந்து, பை ஏறு மணி பொரும் ஓர் துதி கவி சொற்றிட—(நாகத்தின்) படத்திலுள்ள நாக இரத்தினத்தை ஒத்த ஒரு துதி கவி சொல்ல, பலரும் பரவி போற்ற—பலரும் வணங்கி வாழ்த்த, ஐ ஏறு—அழகு பொருந்திய, திருக்குறள் என்று ஒரு நூல் செய்து உலகு உவப்ப அளித்தான் ஆக—திருக்குறள் என்று ஒரு நூல் இயற்றி உலகத்தார் உவக்கும்படியாகத் தந்தா னாக;

அகலம். ஏறு என்பது வினைத்தொகை. ஆதி ஆகமத்தைக் கையில் கொண்டுள்ள கடவுள்—சிவபிரான். இதுவும் குளகம்.

கருத்து. திருவள்ளுவர் தமது திருக் குறளை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றினார். (௪)

அன்னநூற் பெருமையுணர்ந் தான்றபா ணிநிபுரிந்த வரிய
நூலுக், கின்னநீர் பதஞ்சலிபோற் பலருரையும் வியாப்பியமா
யிருக்க நாளும், முன்னவாம் வியாபகமே யாகநூற் கருத்
துணர்ந்தே மொழிந்தா ரென்ன, நன்னர்வான் புகழ்ப்பரிமே
லழகருரை யியற்றவதை நாடி யாரும்;

## திருவள்ளுவர் திருக்குறள்.

**பொருள்.** *அன்ன நூல் பெருமை உணர்ந்து—அத்தகைய நூலின் பெருமையை உணர்ந்து. ஆன்ற பாணினி புரிந்த அரியநூலுக்கு —கல்வி யறிவால் நிறைந்த பாணினி முனிவர் இயற்றிய அரிய (பாணினியம் என்னும்) வடமொழி நூற்கு, இன்னல் தீர் பதஞ்சலி போல்—இடர் தீர்க்கும் பதஞ்சலி முனிவர் உரைத்த உரையைப் போல், பலர் உரையும் வியாப்பியமாய் இருக்க— பலருடைய உரை களும் நிறைந்தனவா யிருக்க, நாளும் முன் அவாவும் வியாபகமே ஆக—எந் நாளும் தலைமையை அவாவும் வியாபகமே யாக, நூல் கருத்து உணர்ந்தே மொழிந்தார் என்ன—நூலின் கருத்தை உணர் ந்தே உரைத்தார் என்று சொல்லும்படியாக, நன்னர் வான் புகழ் பரிமேலழகர் உரை இயற்ற—நல்ல உயர்ந்த புகழை யுடைய பரிமே லழகர் (ஓர்) உரை செய்ய, அதை நாடி யாரும்—அதனை விரும்பி யாரும்;*

**அகலம்.** *முன்—முதல்—தலைமை. அவாவும் என்பது செய் யுள் விகாரத்தால் வகர உகரம் கெட்டு நின்றது. வியாப்பியம்— வியாபித்தலை யுடையது. வியாபகம்—வியாபித்தல் தலைமை அவா வும் வியாபகம்—தலைமையை எய்துதற்கு வேண்டும் வியாபகத் தன்மை. இதுவும் குளகம்.*

**கருத்து.** *அத் திருக்குறளுக்குப் பரிமேலழகர் ஒரு சிறந்த உரை இயற்றினர்.* (௫)

*ஏட்டுவரைந் தெடுத்துணர்ந்து வருநாளி லெங்கணுஞ்சா லெழுத்துக் குற்றம், ஓட்டும்வகை யுணராராய்ப் பரம்பரை யொன் றேகருதி யொழிந்தா ரத்தோ, மாட்டுவலென் றுணர்ந்தனைய மூலமும்பே ருரையுமுனம் வகுத்த வாறே, தீட்டுதலி லாவெழுத்தி லியைவியென வுலகுபுகழ் செம்பி நாடன்;*

## சிறப்புப் பாயிரம்.

**பொருள்.** எட்டு வரைந்து எடுத்து உணர்ந்துவரும் அ நாளில் —(ஓலை)எட்டில் எழுதி (ப்பலரும்)எடுத்துக் கற்றுவரும் அக்காலத்தில், எங்கணும் சால் எழுத்து குற்றம் ஓட்டும் வகை அறியாராய் பரம் பரை ஒன்றே கருதி ஒழிந்தார்— எவ்விடத்தும் நிறைந்த பிழைகளைப் போக்கும் வழியை அறியாராய்த் தொன்றுதொட்டு வரும் வழக்கம் ஒன்றையே கருதி (அப் பிழைகளைத் திருத்தாது) ஒழிந்தார்; அ தோம் ஆட்டுவல் என்று—அக்குற்றத்தை யான் போக்குவேன் என்று நினை த்து, அனைய மூலமும் பெரு உரையும்— அத்தகைய மூலத்தையும் பெரிய உரையையும், முன் வகுத்த ஆறே—முன்னர் எழுதி யிருந்தபடியே, தீட்டுதல் இல்லாத எழுத்தால் இயைவி என்ன உலகு புகழ் செம்பி நாடன்—எழுதுதல் இல்லாத அச்செழுத்தில் பதித்திடுக என்று சொல்ல உலகம் (முழுவதும்) புகழ்கின்ற செம்பி நாடன்;

**அகலம்.** எட்டில் எழுதிப் படித்து வருங் காலத்தில் எங்கணும் எழுத்துக் குற்றங்கள் நிறைந்தன என்பது பெற்றாம். தொன்று தொட்டு வரும் வழக்கம்—முன் னேடுகளிற் கண்ட பிழைகளோடே எழுதிப் படித்துவரும் வழக்கம். எழுத்தாணியைத் தீட்டி அதனால் எழுத வேண்டாத அச்செழுத்தைத் தீட்டுதல் இலா எழுத்து என்றார். இயைவித்தல்—பொருத்துவித்தல்—பதிப்பித்தல். இச் செய் யுளும் குளகம்.

**கருத்து.** திருக்குறளை எட்டில் எழுதிப் படித்துவருங் காலத் தில் அதனுட் பல குற்றங்கள் புகுந்தன. அத்தகைய குற்றங்கள் மேலும் அதனுட் புகா திருக்குமாறு அதனை அச்சிடுக என்றனன் செம்பி நாடன். (கூ)

ஓதுபதி யாயவிரா மேசர்திரு வருளாணீ ருடுத்த வைப்பிற், கோதுபதி யாதகல வறந்தழைந்து விளங்கிடச்செங் கோல்

கைக் கொண்ட, சேதுபதி மானேச ரதிகார நடாத்துசெய
சிங்கஞ் செம்பூ, மாதுபதி யயர்வுயிர்ப்ப வுலகமுழு வதும்
புரக்கும் வள்ளற் கோமான்;

**பொருள்.** ஓது பதி ஆய இராமேசர் திருவருளால்—(வேதங்களெல்லாம்) ஓதுகின்ற இறைவராகிய இராமேச்சுரருடைய திருவருளால், நீர் உடுத்த வைப்பில்—கடல் சூழ்ந்த உலகின்கண், கோது பதியாது அகல—குற்றம் தங்காமல் ஒழிய, அறம் தழைந்து விளங்கிட—தருமம் செழித்து விளங்க, செங்கோல் கை கொண்ட—செங்கோலைக் கையிற் கொண்ட, சேதுபதி மானேசர் அதிகாரம் நடாத்து செய சிங்கம்—இராமநாதபுரம் அரசரின் மானேஜர் அதிகாரத்தை நடாத்துகின்ற வெற்றிச் சிங்கம், செம் பூ மாது பதி அயர்வு உயிர்ப்ப—செந்தாமரை மலரில் வாழும் இலக்குமியின் நாயகராகிய திருமால் வருத்தம் தீர, உலகம் முழுவதும் புரக்கும் வள்ளல் கோமான்—உலக மெல்லாம் காக்கும் வள்ளலாகிய அரசன்;

**அகலம்.** இராமேசர்—இராமர் தொழுத சிவபிரான். செங்கோல் கைக்கொள்ளல்—அரசாட்சி புரிதல். ‘மானேஜர்’ ஆங்கிலச் சொல். மானேஜர்—நிர்வாகி. இதுவும் குளகம்.

**கருத்து.** அச் செம்பி நாடன் சேதுபதியின் மானேஜராய் அரசாட்சி நடாத்தினன். (எ)

கற்பகத்தின் றளிரனைய மென்னிறமுஞ் சங்கினொடு கமல
ரேகை, உற்பவமு மொருசுரபிச் செருக்கன்முலை நிகர்விரலு
மொளிர்பொன் னாழி, யிற்பதியொண் சுடர்மணியு மெய்துத
லாற் றருநிதிய மிரண்டு தெய்வப், பொற்பமையா வருண்
மணியிவ் வைகுறுஞ்சேர்ந் தாயவெனும் புரவுக் கையான்;

**பொருள்.** கற்பகத்தின் தளிர் அனைய மென் நிறமும்—கற்பக மரத்தின் தளிரை யொத்த மெல்லிய நிறமும், சங்கினொடு கமல

# சிறப்புப் பாயிரம்.

ரேகை உற்பவமும்—சங்க ரேகை கமல ரேகை (அகங் கையில்) உற்பத்தியும், ஒரு சுரபி செருத்தல் முலை நிகர் விரலும்—ஒப்பற்ற காம தேனுவின் (பால்) நிறைதலுள்ள முலையை ஒத்த விரலும், ஒளிர் பொன் ஆழியில் பதி ஒண் சுடர் மணியும் எய்துதலான்-ஒளி வீசுகின்ற தங்க மோதிரத்தில் பதித்த ஒள்ளிய சுடரையுடைய மணியும் பொருந்துதலால், தரு நிதியம் இரண்டு பொற்பு அமை ஆ அருள் மணி—கற்பகமும் சங்க நிதி பதும நிதி யாகிய இரண்டும் தெய்வ அழகு அமைந்த காம தேனுவும் (வேண்டிய எல்லாம்) அளிக்கும் சிந்தா மணியும், இ ஐந்தும் சேர்ந்து ஆய எனும் புரவு கையான்—இவ் வைந்தும் சேர்ந்து உண்டாயவை என்னும் கொடைக் கைகளை யுடையவன்.

அகலம். நிகர், ஒளிர், பதி, அமை, அருள் என்பன வினைத் தொகைகள். இதுவும் குளகம்.

கருத்து. அக் கோமான் கற்பகம், சங்க நிதி, பதும நிதி, காம தேனு, சிந்தாமணி என்னும் ஐந்தும் சேர்ந்து ஆகியவை என்னும் கொடைக் கைகளை யுடையான். (அ)

பாருநெடு விசும்புமறு வெங்குளதென் றாராயப் பரந்த மார்பான், ஒருமுணர் வுடையார்பாற் பெருங்கருணை மடைதிறந்தா லொத்த கண்ணன், வாருமிள நகையரும்ப வினியமுக மலர்த்துமொழி மதுர வாயான், மேருவெனப் புடைபரந்து பகைவர்நிலை கலங்கவெழூஉ வீங்குந் தோளான்;

பொருள். பாரும் நெடு விசும்பும் மறு எங்கு உளது என்று ஆராய பரந்த மார்பான்—பூமியிலுள்ள மாந்தர்களும் அகன்ற வானிலுள்ள தேவர்களும் (ஸ்ரீவத்ஸம் என்னும்) மச்சம் எவ்விடத்தில் உள்ளது என்று தேடும்படியாக விரிந்த மார்பை யுடையவன், ஒரும்

உணர்வு உடையார்பால் பெரு கருணை மடை திறந்தால் ஒத்த கண்ணன்—ஆராயும் அறிவுடையாரிடத்துப் பெரிய கருணை மடை திறந்தா லன்ன கண்களை யுடையவன், வாரும் இள நகை அரும்ப இனியர் முகம் மலர்த்து மொழி மதுர வாயான்—(பார்த்தோர் கண்களைக்) கவரும் இளம் பற்கள் விளங்க இனியவர்பால் முகஞ் சிரித்துச் சொற்பகரும் மதுரமான வாயை யுடையவன்; மேரு என புடை பரந்து பகைவர் நிலை கலங்க எழூஉ வீங்கும் தோளான்—மேரு மலை யென்று சொல்லும்படியாகப் பக்கங்களில் விரிந்து பகை வருடைய நிலை கலங்கும்படியாக எழுந்து பருக்கும் தோள்களை யுடையவன்.

அகலம். 'பார்', 'விசும்பு' ஆகு பெயர்கள், அவை முறையே அவற்றில் வாழ்வோருக்கு ஆயினமையால். 'எழூஉ' செய்யூ என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இதுவும் குளகம்.

கருத்து. அக் கோமான் அழகிய உடம்பும், பெருங் கருணையும், இனிய சொல்லும், சிறந்த வீரமும் உடையவன். (௬)

சிவஞானத் தேவர்வரப் பிரசாத பாலனருள் செறிபூ பாலன்,
பவஞான முழுதொழியக் கோபால னென்ஞான்றும் பணிகா
பாலன், தவஞான நீற்றொளியே யொளிர்பாலன் பகைகாணத்
தகாப்பின் பாலன், அவஞான மறுத்துணர்ந்த மூப்பாலன்
போர்வையென வமைசீர்ப் பாலன்;

பொருள். சிவஞானத் தேவர் வர பிரசாத பாலன்—சிவ ஞானத் தேவருடைய வரப் பிரசாதமாய் வந்தவதரித்த பாலன், அருள் செறி பூ பாலன்—கருணை நிறைந்த காவலன், பவ ஞான முழுவதும் ஒழிய கோபாலன் எ ஞான்றும் பணி காபாலன்—பிறவி ஞானம் முழுவதும் ஒழிவதற்காகக் கோபாலன் என்றும் இறைஞ்சு கின்ற கபாலத்தானது, தவ ஞான நீற்று ஒளியே ஒளிர் பாலன்—தவ

## சிறப்புப் பாயிரம்.

ஞானத்தை நல்கும் திரு நீற் றொளியே ஒளிர்கின்ற நெற்றியை யுடையவன், பகை காண தகா பின் பாலன்—பகைவர்கள் காணத் தகாத முதுகினை யுடைய வீரன், அவஞானம் அறுத்து உணர்ந்த மு பாலன்—அவ ஞானத்தை ஒழித்து அறம், பொருள், இன்பம் என்னும் முப்பால்களையும் உணர்ந்த அறிவினன், போர்வை என்ன அமை சீர் பாலன்—போர்வை என்று சொல்லும்படியாகப் புகழினைக் கொண்டவன்;

அகலம். முழுதும் என்பதன் முற்றும்மை செய்யுள் விகாரத் தால் தொக்கது. செறி, பணி, ஒளிர், அமை, என்பன வினைத் தொகைகள். தகாத என்பது ஈறு கெட்டு நின்றது. அவஞானம்— பயனற்ற ஞானம்.

கருத்து. அக் கோமானாகிய சிவஞானத் தேவர் தவப் பயனால் பிறந்தவன் பின் சொல்லப் படுவோன். (ம)

ஒருகாவித் துவசத்தா னொளிர்தளவ மாலிகையா னுணர்வான் மீக்கூர்ந், தருகாவித் துவசத்தா னான்றபெருஞ் சிவஞான மடங்க வுய்க்குங், கருகாவித் துவசத்தான் பகைநோக்கி யுருமனமே கடைகா துஞ்சா, துருகாவித் துவசத்தான் புணர் யான்செய் காயமென வுரைக்கும் வாளான்;

பொருள். ஒரு காவி துவசத்தான்—ஒப்பற்ற காவிக் கொடியை யுடையவன், ஒளிர் தளவ மாலிகை யான்—விளங்குகின்ற முல்லை மாலையை உடையவன், உணர்வால் மீக் கூர்ந்து—அறிவினால் மிக்கு, அருகா—என்றும் குறையாத, வித்துவ சத்தான்—புலமையாகிய உண் மையை உடையான், ஆன்ற பெரு சிவஞானம் அடங்க உய்க்கும் கருகா வித்து வசத்தான்—நிறைந்த பெருமையை உடைய சிவ ஞானம் முழுவதையும் தோன்றச் செய்யும் கருகாத வித்தினைத் தன்

வசம் உடையவன், பகை நோக்கி உறு மனமே—பகைவர்களைக் கருதிச் செல்லாத மனமே! கடைகா—(இனி உன்னால் என்ன பயன்?) பகைவர்கள் வாயிலைக் காப்பாயாக; துஞ்சாது உருகு—தூங்காமல் உருகுவாயாக; ஆவித்து உவ—கொட்டாவி விட்டுச் சந்தோஷ மடைவாயாக; யான் செய் ச தான் புணர் காயம் என உரைக்கும் வாளான்—(இது) தான் யான் உனக்குச் செய்யும் சகாயம் என்று கூறும் வாளை உடையான்.

அகலம். பகைவர் மேற் செல்லாத தன் மனத்தைப் பார்த்து வாள் குறிப்பினால் இகழ்வதாக அமைக்கப்பட்டது இச் செய்யுள். இச் செய்யுள் திரிபு என்னும் அலங்காரம் அமைந்துள்ளது. 'ஒளிர்' வினைத்தொகை. அருகா, கருகா, உறு என்பன தகரம் கெட்டு நின்றன. 'தான்' அசை. ச புணர் காயம்—சகாயம். (இச் செய்யுளின் பொருளும் அகலமும், இதற்கு அடுத்த செய்யுளின் பொருளும் அகலமும் மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களின் மாணாக்கராகிய சென்னை மகா மகோபாத்தியாயர் தாக்ஷிணாத்ய கலா நிதி. டாக்டர். வே. சாமிநாத அய்யரவர்கள் எழுதித் தந்தவை.) இதுவும் குளகம்.

கருத்து. காவிக் கொடியும், முல்லை மாலையும், வாய்மையும், சிவ ஞானமும், பகைவர்களை வெல்லும் வாளும் உடையவன். (மக)

கந்துகத்தா னம்பரவு மாறுபொழிந் தெழுகளிற்றான் கருதார் மேற்பாய், கந்துகத்தா னம்பரவு குடியடி யான்வாயிற் கட்டித் தூங்குங், கந்துகத்தா னம்பரவு மாதாவென் றுயிர்கருதிக் கரிசெ லாமி, கந்துகத்தா னம்பரவு ரவமாறி நீங்கவரங் கைக்கொண் டுள்ளான்.

பொருள். கந்து உக—கட்டுத்தறி குலையும்படி, தானம் பரவு மாறு பொழிந்து எழு களிற்றான்—மதநீர் எங்கும் பரவும்படி சொரி

ந்து மேற் செல்கின்ற யானையை உடையவன்; கருதார்மேல் பாய் கந்துகத்தான்—பகைவர்கள்மேற் பாயும் குதிரையை யுடையவன்; அம்பு அரவு சூடி அடியான்—கங்கா ஜலத்தையும் பாம்பையும் திருமுடியி லணிந்த சிவபிரானுக்கு அடியான்; வாயிற் கட்டித் தூங்கும் கந்துகத்தான்—கோட்டை வாயிலில் பகைவரைக் குறித்துக் கட்டி நால விடப்பட்டிருக்கும் பந்தையுடையான்; பரவும் நம் மாதா என்று உயிர் கருதி—புகழப்படும் நம் தாயனையா னென்று உயிர்க்கூட்டம் எண்ணி, கரிசு எலாம் இகந்து உக—குற்ற மெல்லாம் நீங்கிக் கெடும் பொருட்டு, தாம் நம்ப—அவ் வுயிர்க்கூட்டம் தன்னை விரும்பவும், ரவுரவ மாதி நீங்க—(அவ் வுயிர்க்கூட்டம் தன்னைச் சேர்ந்து நன்னெறியில் நடப்பதனால்) ரவுரவ முதலிய நரக விளைவு அகலவும், வரம் கைக் கொண்டுள்ளான்—உயர்வைப் பெற்றுள்ளான்;

அகலம். வாயிற் கட்டித் தூங்கும் கந்துகம்: "வரிப்புனை பந்தொடு பாவை தூங்க" என்னும் **திருமுருகாற்றுப் படை** அடியையும் அதன் உரையையும் அடிக்குறிப்புக்களையும் பார்க்க. 'தாநம்ப' என்றது யமகம் நோக்கித் 'தானம்ப' என வந்தது. இதுவும் குளகம்.

கருத்து. மதம் பொழியும் யானையும், பகைவர்மேற் பாயும் குதிரையும், சிவ பத்தியும், கோட்டை வாயிலிற் கட்டிய பந்தும், ஜீவ காருண்ணியமும், நல்லொழுக்கமும், பெரும் புகழும் உடையவன்.

தரைசெய்தவப் பயனாகி யமைந்தபெரு வளப்புதுவைத்
தலைமை யோன்பொன், வரைசெய்நிதிப் பெருவாழ்க்கை மா
கனவான் பெரும்புலவர் மறவா தென்று, முறைசெய்பெரும்
புகழ்ப்பொன்னுச் சாமிநரேந் திரன்மகிழ்கூர்ந் துரைப்பக்
கேட்டு, நரைசெய்விடை யேறுயர்த்த நம்பிரா னடிக்கன்பே
நயக்கு நல்லோன்;

**பொருள்.** *தரை செய் தவ பயன் ஆகி அமைந்த பெரு வள புதுவை தலைமையோன்—நிலமகள் செய்த தவத்தின் பயனாகி அமைந்துள்ள பெரிய வளத்தையுடைய புதுவை நகரின் தலைவன், பொன் வரை செய் நிதி பெரு வாழ்க்கை மா கனவான்—தங்கத்தை மலையாக ஈட்டிய செல்வத்தையும் பெரிய வாழ்க்கையையு முடைய பெரிய கனவான், பெரும் புலவர் மறவாது என்றும் உரை செய்— பெரிய புலவர்கள் மறவாமல் எந் நாளும் துதி செய்கின்ற, புகழ் பொன்னுச்சாமி நர இந்திரன் மகிழ் கூர்ந்து உரைப்ப கேட்டு— புகழையுடைய பொன்னுச்சாமி என்னும் பெயரையுடைய மக்கட் கரசன் மகிழ்ச்சி மிக்குச் சொல்லக் கேட்டு, நரை செய் ஏறு விடை உயர்த்த நம்பிரான் அடிக்கு அன்பே நயக்கும் நல்லோன்— வெண்மை திகழ்கின்ற ஆண் இடபக் கொடியை உயர்த்திய நம் இறைவன் அடிகளுக்கே அன்பு செலுத்தும் நல்லவன்;*

**அகலம்.** *இதுவும் குளகம். 'செய்' நான்கும் வினைத்தொகைகள். இந்திரன் தேவர்க்கு அரசன் ஆயினாற்போல, இவன் மக்கட்கு அரசன் ஆயினான். 'அன்பே' என்பதன் ஏகாரத்தைப் பிரித்து, 'அடிக்கு' என்பதனுடன் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. கனவான்—மதிப்பை யுடையவன்.*

**கருத்து.** *புதுவை நகரின் அரசன், பெரிய செல்வவான், பெரிய மதிப்பை யுடையவன், பெரிய புகழை யுடையவன், பொன்னுச்சாமி என்னும் பெயரை யுடையவன் பின் வருகிற படி சொன்னான்.* (௰௩)

*மன்னுபெருந் தமிழ்ப்பாடை யிலக்கணமு மிலக்கியமும்*
*வரம்பு கண்டோன், பன்னுசிவ புராணங்கள் பலதெரிந்தோன்*
*சிவாகமநூற் பரவை மூழ்கி, உன்னுமனு நூதியெனும்*
*விலைவரம்பி லாமணிகை யுறக்கொண் டுள்ளான், இன்னுநய*

# சிறப்புப் பாயிரம்.

குணத்தினனாய்ச் சைவமெனும் பயிர்வளர்க்கு மெழிலி
போல்வான்.

**பொருள்.** மன்னு பெரு தமிழ் பாடை இலக்கணமும் இலக்கியமும் வரம்பு கண்டோன்—(என்றும்) நிலை பெற்று நிற்கும் பெரிய தமிழ் மொழியின் இலக்கணங்களையும் இலக்கியங்களையும் முற்றுறக் கற்றோன், பன்னு சிவ புராணங்கள் பல தெரிந்தோன்—(வீட்டு நெறியைச்) சொல்லும் சைவப் புராணங்கள் பலவற்றை அறிந்தோன், சிவ ஆகம நூல் பரவை மூழ்கி உன்னும் அனுபூதி என்னும் விலை வரம்பு இல்லா மணி கை உற கொண்டுள்ளான்—சிவஞான நூல்களாகிய கடலில் மூழ்கி அனுபவ அறிவு என்னும் விலை மதிப்பு இல்லாத மணியைக் கையில் பொருந்தக் கொண்டுள்ளவன், இன்னு நய குணத்தினனாய் சைவம் என்னும் பயிர் வளர்க்கும் எழிலி போல்வான்—இனிக்கும் நல்ல குணங்களை உடையவனாகிச் சைவம் என்னும் பயிரை வளர்க்கும் மழை போல்பவன்;

**அகலம்.** இலக்கணம்—தொல்காப்பியம் முதலாயின. இலக்கியம்—மேற் கணக்கு, கீழ்க் கணக்கு நூல்கள் முதலாயின. சிவ புராணம்—இலிங்கம், காந்தம், கூர்மம், சைவம், பிரமாண்டம், பௌடிகம், மச்சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமனம். சிவாகமம்—காமிகம் முதலிய இருபத்தெட்டு. அவற்றின் பெயர்களை அகராதியிற் கண்டு கொள்க. 'மன்னு', 'இன்னு' வினைத் தொகைகள். 'எழிலி' ஆகு பெயர்.

**கருத்து.** தமிழ் இலக்கண இலக்கியங்களும், சிவ புராணங்களும் ஆகமங்களும் கற்றுச் சிவப் பொருளுணர்ந்த அனுபூதிமான், நல்ல குணங்களை உடையவன், சைவம் வளர்க்குஞ் சீலன். (மச)

நீடுபுகழ்த் திருக்கேதீச் சரந்திருக்கோ ணேசலமிந் நிலவா நின்ற
நாடுபுகழ்த் தலம்பொலியாழ்ப் பாணத்து நல்லூர்வாழ் நகராக்

# திருவள்ளுவர் திருக்குறள்.

*கொண்டோன், றேடுபுக ழுருவமைந்த கந்தவே டவத்துதித்த செல்வன் யாரும், பாடுபுக ழாறுமுக நாவலனவ் வாறச்சிற் பதிப்பித் தானே.*

**பொருள்.** நீடு புகழ் திருக்கேதீச்சரம் திருக்கோணாசலம் இநிலவா நின்ற நாடு புகழ் தலம் பொலி யாழ்ப்பாணத்து நல்லூர் வாழ் நகரா(க) கொண்டோன்—நீடிய புகழைக் கொண்ட திருக்கேதீச்சரம் திருக்கோணாசலம் இவ் விளங்குகின்ற ஈழ நாட்டில் புகழ்பெற்ற நகரமாகிய அழகு பொருந்திய யாழ்ப்பாணத்து நல்லூரை (தான்) வாழும் நகராகக் கொண்டோன், தேடு புகழ் உருவு அமைந்த கந்தவேள் தவத்து உதித்த செல்வன்—(யாரும்) தேடும் புகழும் அழகும் நிறைந்த கந்தவேள் என்னும் பெயரை யுடையயவரது தவத்தினால் தோன்றிய அழகன், யாரும் பாடு புகழ் ஆறுமுக நாவலன் அவ்வாறு அச்சில் பதிப்பித்தான்—எப் புலவனும் பாடும் புகழை யுடைய ஆறுமுக நாவலன் அவ்வாறு அச்சில் பதிப்பித்தான்.

**அகலம்.** திருக்கேதீச்சரம், திருக்கோணாசலம் இவை யிரண்டும் பாடல் பெற்ற சிவ ஸ்தலங்கள். ஈழ நாடு இலங்கைத் தீவிலுள்ளது. யாழ்ப்பாணத்து நல்லூர், அவ் வீழ நாட்டில் ஒரு நகரம். அந் நகரத்தில் வாழ்வோர் பெரும் பண்டிதர்களும் புலவர்களுமே. நீடு, தேடு, பாடு என்பன வினைத்தொகைகள்.

**கருத்து.** யாழ்ப்பாணத்து நல்லூர் கந்தவேள் குமாரர் ஆறுமுக நாவலர் திருவள்ளுவர் திருக்குறளைப் பரிமேலழகர் உரையுடன் அச்சிற் பதிப்பித்தார். (௰௫)

## தியாகராஜச் செட்டியார்.

(நேரிசை யாசிரியப்பா)

*திருவளர் தெய்வச் செழுமறை யவர்த, முருவளர் செங்கை யுதக மவாவிக், கருங்கடன் முகட்டிற் செங்கேழ் பரப்பி,*

## சிறப்புப் பாயிரம்.

மரகதம் பழுத்த குரகத மோரேழ், சேர்தர யாத்த வோர்
கால் வையத், தமர்த்தினி தெழூஉ வகலிடம் புதைத்த,
செறியிருள் விழுங்குஞ் செஞ்சுடர் வானவ, னலங்கொளி
விரிக்கு நலங்கிளர் கரங்க, ளுண்டிடத் திறக்கு மாண்டகு புதவ,
மாயிரந் தாங்கி யவிர்நிலா வெறிக்குந், தாளங் குயிற்றிய
தமனியக் கோயி, லரசுவீற் றிருந்திவ் வகில மீன்ற, நான்
மறை முழங்குநன் னாவுடைக் கடவுள், பெருகுபே ரருளாற்
றிருவள் ளுவராய், மகிதலத் துதித்து மன்னுறு மக்க, ளறமுத
னான்குந் திறமுற வுணரவு, நன்மை யெங்கணு நனிசிறந்
தோங்கவும், புன்மை யண்டப் புறம்போ யொழியவுஞ்,
சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவ, னுள்ளம் பெருங்களி
கொள்ளை கொள்ளவுந், தவலரும் புகழ்சால் சங்கத் தமர்ந்த,
நுவலரும் புலவர்சொ லுண்பொரு ளாலெலாந், திருப்பெறு
கல்வி நிரப்புறு வோர்சொல், பருப்பொரு ளாலாய் விருப்பற்
றொழியவுஞ், சிற்றள வினதாய்ப் பெரும்பொரு ளடக்கி,
யுற்றவிந் நூலினி துணர்வோர் யாரு, நணுகுசொற் சுவை
பொடு நகுபொருட் சுவைகவர்ந், தணுவின்மா மேரு வடக்
கத் துணியவு, நற்றமிழ்ச் செல்வம் பெற்றநந் நாட்டின்முன்,
மற்றைய பன்மொழி யுற்றபுன் னாடெலா, மன்பொரு ளுடை
யார்முன் வறியவர் போல, வென்செய் வாமென் றேக்கற்று
நிற்கவு, மெழுத்து முதலாய விலக்கண மெல்லாம், பழுத்தினி
துறங்கும் பள்ளி யாகவு, மின்றி யமையா வின்னலம் பலவுந்,
துன்றின கிடந்து துதிபெறத் திகழவுந், திருவளத் துன்னித்
திருவாய் மலர்ந்து, பொருவறப் புகன்ற புகலருந் தெய்வத்,
திருக்குற ளென்னுஞ் செந்தமிழ் வேதம், பலருரை செய்ய
நிலவிய தெனினு, மொருவாப் புலமைத் தருமர்முன் னுய,

பாடல்சால் சிறப்பிற் பதின்மர் செய்த, நாடுறு முரைகளுட்
பீடமைந் தோங்கும், பரிமே லழகர் பண்ணிய வுரையொடு,
விரிகடல் சூழ்புவி மேவி விளங்கப், பரிவுறு மச்சிற் பதித்துத்
தருகெனக், கற்பகச் சோலை ககனத் துறுமென, பொற்புறு
புலவர் புகலுவ ரஃது, நம்போன் மாரு நல்வள முடைத்தெனி,
லம்பர்ச் சென்றினி தறிய லாமென, வெண்ணிச் சென்றுங்
கெழிலுற வளர்ந்து, விண்ணுற நிவந்த வியன்மாம் பொழிற்
கட், சிவந்தழை மனத்துச் செவ்வியோர்க் கிடமாய்க், கவின்
றிகழ் காரைக் காலவ தரித்த, வம்மைதிரு வுளங்களிந் தடியா
ர்க் களித்த, கனிக்கெதி ராகக் கண்ணுத லருளிய, யினித்
ததே மாங்கனி யிப்பொழிற் கனியே, யென்னக் கிளை
தொறுந் துன்னிக் கனிந்த, வெண்ணிலாக் கனிகளை யுண்ண
விரும்பி, வாவிப் புகுந்திள மந்திக ளெல்லா, மேவியத் தருக்
கண் டீமிசை யிருந்து, தாவிப் புகுந்தத் தருநனி யேறி,
யோவிலக் கனிகவர்ந் துணவலி யின்றிக், கூனடை வெரிநின்
மேன்மயி ரெலாமுதிர்ந், திருகண் குழியா வென்பெலாம்
வெளிப்பட், டகடுற வொட்டி யடுபசி வருத்த, வண்ணாந்து
நோக்கி நண்ணி யிருக்கு, முதுபெரு மந்திகண் முன்னர்முன்
னுகுத்து, வெறுத்திட வூட்டி விழைந்துபின் னுண்டு, தாமு
யன் றுண்ணுந் தகுவலி யில்லா, வுறவினர்க் கூட்டியுண் ணற
வரை நிகர்க்கு, நலமலி செம்பி நன்னா டுடையான், மேரு
வொன் றென்று விளம்புதல் பொய்யென், றுரு மியம்ப வள
வற வுயர்ந்து, செம்பொனா னியன்றபல் செழுமணி மாடத்,
தும்ப ருலாவு மொளியிழை மடவா, ரன்புறு மாடவ ரணுக
நோக்கி, யின்புற முயங்க வெண்ணுதங் காதல், குறிப்பிற்
புலப்படக் கொழுங்கனி யிதனைச், செவ்வாய்ப் பைஞ்சிறைச்

## சிறப்புப் பாயிரம்.

சிறுகிளி யூட்டப், புகுவே னென்று புதுமதி மழுங்கப்,
பளிங்கரிந் தமைத்து விளங்கறை புக்குப், பித்திகைத் தலத்தி
லொத்துத் தோன்று, நீழற் பஞ்சர நேர்சென்று திறத்தல்,
பின்படர் காதல ரன்புற நோக்க, வுறுநா ணொடுநகைத்
தோடித் தழுவும், வளமலி புதுவை மாநக ராளி, யவமே
லாஞ் சாரா தகலுற வகற்றிச், சிவமெலாம் புனைந்த சிவ
ஞானத் தேவர், பவமெலா முவந்து பண்ணிய மாப்பெருந்,
தவமெலாந் திரண்டொரு தனயனு யுதித்தோன், பூவிலுந்
திசையிலும் புகலுறு மற்றைய, தீவிலு மிருசுடர் திரிதரும்
பெரிய, கோவிலுந் தீஞ்சுவை கொழிக்குந் தமிழ்வலோர்,
நாவிலும் பாவிலு நடிக்கும் புகழா, னுண்மையு ணாலுணர்
நுண்மையும் வறுமைகொல், வண்மையுங் காட்சிக் கெண்
மையும் பகைதெறு, திண்மையுங் கதிரவா மொண்மையு
மதியவாந், தண்மையுங் கண்மையுந் தழைதரு செல்வன்,
வண்டினங் குழுமிக் கொண்டினி தேறிக், கிண்டிடப் பரு
முகை விண்டின் னறவ, மண்டிப் பெருக வுண்டு தெவிட்டுந்,
தண்டொடை புனையுந் திண்டோள் வலியா, லேர்திகழ்ந்
திலங்குங் கார்முடி புனைந்து, சீர்பெற வுயர்ந்து நேருறக்
கீழ்போய், நீர்நிறைந் தமைந்த வார்கடல் வளைந்த, பார்நடு
நின்ற மேருவை வென்றோ, னெற்று திரைப்புனல் சுற்
றிய வசுந்தரை, யுற்றநன் னூல்கண் முற்றுற வாய்ந்து,
கற்றநா வலர்கள் சொற்றபாக் களையிஃ, திற்றிஃ திற்றென
மற்றுணர் புலமையான், மலர்பொதுள் சோலை சுலவுற
வுடுத்தி, யுலகெலாம் புகழ நிலவுதென் கூட, லிலகுபொற்
சலச மலர்தட மமர்ந்த, நலமலி சங்கப் பலகையை வென்

றோன், கரவுறு பிறவியு மரணமு மொழித்து, வானுறு
மேன்மை விரவுமெய்ஞ் ஞானத், திரமுறு முத்தி தரவல
தாய, வரவுறு சடிலப் பரசிவ பத்தியால், விண்ணுறு மிமயப்
பெண்ணமர் பாகத், தண்ணலை யருச்சனை பண்ணுற வொரு
நாட், டண்ணறுங் கமலமொன் றெண்ணுறக் குறைதலிற்,
கண்ணிடந் திட்டகார் வண்ணனை வென்றோ, னெவ்வெந்
நலங்கட் கெலைதெலை துரித்தோ, வவ்வந் நலங்களா லதை
யதை வென்றோன், சிந்தா மணியோ நந்தாச் சுரபியோ,
தெய்வத் தருவோ பெய்யுமா முகிலோ, யிருநிதி யோவிவ்
வுருவெடுத் ததுதா, னலம்புனை யிதுவெனப் புலந்துணி
விலமெனத், தலம்புகல் பொன்னுச் சாமி நரேந்திர, னனியுள
மகிழ்ந்து நவின்றன னாக, வினிதினி தென்று முனிவற
நயப்புற், றிவணிடை நிறைந்த நுவலரு மறனெலாந், தன்
னுறு காட்டா மன்னுறக் கொளுநூன், முதுபே ருலகி
லிதுவே யாதலி, னறைந்தது சால வமையுமென் றுன்னி,
நிறைந்தி யாங்கணு நிலவுறப் பதித்தனன், விடையத்திற்
பரக்குந் தடையறு மனத்தை, நடையறச் சுருக்கி யடியிணை
வைக்குந், தன்மை யுயிர்க்குத் தானறி வுறுத்தப், பாரிட
மெங்கும் படர்பா கீரதிப், பெரும்புனல் சுருக்கிச் சிறுதுளி
யாக்கி, யொளியுறு சடைமுடி மிளிர்தர வைக்கு, மூவா
முதல்வ னேவா தமருந், தாவாப் பெருந்தவ மேவா விளங்
கிக், கவின்மலி தன்னைக் கண்டவர் கொடும்பவங், காணு
தருடிருக் கோணு சலமுங், குலவுறு நலமுயிர் கலவுற மல
வலி, காதும் பெருந்திருக் கேதீச் சரமு, மிருநிதி யாக
மருவுறப் பெற்று, மன்னுறு மீழ நன்னா டென்னும், பொரு

## சிறப்புப் பாயிரம்.

விலாத் தனதற் கொருசிர மாயது, மாணமர் பொழில்யாழ்ப் பாணமச் சிரத்திற், கணிபெறக் கவிக்கு மணிமுடி நிகர்க்கும், பன்னூ லுணர்ந்த நன்னு வலர்க, ளுடொறுங் கூடி நவி லுத லுற்ற, பீடுயர்ந் தோங்கு பெருவள னெல்லாந், தன் னுதன் பெயராந் தொகைநிலைத் தொடர்சொலின், மன்னு முன் மொழியின் வயங்குபொரு ளாக்கி, யின்னும் பற்பல ரிசைப்ப விடங்கொடுக்குஞ், செல்லூ ரெயில்சூழ் நல்லூ ரென்ப, திகழுமம் முடிக்கோர் சிகாமணி யென்னப், புகலா ஞாலம் புகலவந் துதித்தோன், செந்தமி ழென்னுஞ் சுந்தர மங்கை, கந்தரத் தழகு சுளிமங் கலநா, ணிலக்கண மனை த்து நலக்க விளக்குந், துலக்க மிகுந்த தூண்டா விளக்குப், புணர்தரு மின்ப மணவுறு புராண, முணர்வோர் யார்க்கு மொளியுறு நேத்திர, நல்லறி வுறுத்தித் தொல்பவந் தொலைக் கும், பல்கலை கட்கெலாம் புல்லுமோ ரில்லம், பொய் தெரித் தகற்றி மெய்யிது வென்னுஞ், சைவசித்தாந்தத் தெய்வ வைப்புக், கண்ணுபுண் ணியங்கட் கண்ணிய வுயிராந், தண் ணிய மாசிவ புண்ணியப் பிழம்பு, சிவனடி யவரைச் சிவ மென மதிக்குந், தவமது வளர்க்கு மவமறு சீல, னென் னுளங் குடிகொண் டிருக்கு, முன்னுசீ ராறு முகநா வலனே.

பொருள். திருவளர்...அவாவி—அழகு வளரும் தெய்வ வள முடைய மறையவர் தம் உருவால் நீண்ட நல்ல கைகளின் (மந்திர) நீரை விரும்பி, கருங் கடல்...வானவன்—கரிய கடலின்மேல் செவ்விய ஒளியைவீசி, மரகதத்தை ஒத்த (பச்சை நிறமுடைய) குதிரைகள் ஓர் எழ் சேரக் கட்டிய ஒருகால் தேரின்மேல் இருந்து இனிது எழுந்து, அகன்ற பூவுலகை மூடிய நெருங்கிய இருளை உட்

# திருவள்ளுவர் திருக்குறள்.

கொள்ளும் செவ்விய ஒளியையுடைய சூரியனது, அலங்கொளி... திறக்கும்—விளங்குகின்ற ஒளியைப் பரப்பும் நன்மை தருகின்ற கிரணங்கள் தொடவே திறக்கும், மாண்டகு...கடவுள்—மாட்சிமைப் பட்ட தகுதியான கதவுகள் ஆயிரம் கொண்டு விரிந்த ஒளியை வீசும் முத்துக்கள் பதித்த பொன்னாற் செய்த கோவிலின்கண் அரசனாய்ச் சிறந் தமர்ந்து இவ் வுலகினைச் சிருட்டித்த, நான்கு வேதங்களையும் ஓதும் நான்கு முகங்களையுடைய பிரம தேவனுடைய, பெருகு... உதித்து—(நாள் தோறும்) வளரும் பெரிய அருளால் திருவள்ளுவராய்ப் புவியின்கண்ணே தோன்றி, மன்னுறு...உணரவும்—நிலை பெறும் மக்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் திறம்பட அறியவும், நன்மை...ஓங்கவும்—நன்மையானது எவ்விடத்தும் மிகச் சிறந்து வளரவும், புன்மை...ஒழியவும் —தீமையானது ஆகாயத்துக்கு அப்பாற் போய்த் தொலையவும், சந்தன...கொள்ளவும்—சந்தன மரங்கள் அடர்ந்த பொதிய மலையில் வாழும் செந்தமிழ் ஆசிரியனான அகத்திய முனிவனது உள்ளம் பெருங் களிப்பைக் கொள்ளையாகக் கொள்ளவும், தவலரும்...ஒழியவும்—கெடுதற்கு அரிய புகழ் நிறைந்த தமிழ்ச் சங்கத்தில் வீற்றிருந்த புகழ்தற்கு அரிய புலவர்கள் சொல்லிய நுட்பமான பொருள்கள் அடங்கிய நூல்க ளெல்லாம் அழகு பொருந்திய கல்விப் பொருள் இல்லாதார் சொல்லும் பருப் பொருள் நூல்களாய் விருப்பமற்று ஒழியவும், சிற்றளவினதாய்...துணியவும்—சிறிய உருவை உடையதாய்ப் பெரிய பொருள்களை அடக்கி நிற்கின்ற இந் நூலினை இனிது கற்றுணர்வோர் யாரும், பொருந்திய சொற் சுவையுடன் விளங்கிய பொருட் சுவையையும் கொண்டு, அணுவில் மகாமேரு மலையை அடக்கத் துணியவும், நற் றமிழ்...நிற்கவும்—நல்ல தமிழ்ச் செல்வத்தைப் பெற்ற நமது நாட்டின்முன் மற்றைய பல மொழிகள் பொருந்திய பல்லிய நாடுக ளெல்லாம் நிலையான செல்வ முடையவர்

## சிறப்புப் பாயிரம்.

முன் தரித்திரர் போல என் செய்வோம் என்று தாழ்ந்து நிற்கவும், எழுத்து...ஆகவும்—எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி இவற்றின் இலக்கணங்க ளெல்லாம் முதிர்ந்து இன்பத்தோடு உறங்குகின்ற அரங்காகவும், இன்றி...திகழவும்—இல்லாமல் அமையாத இனிய கலங்கள் பலவும் நெருங்கினவாய்க் கிடந்து புகழ் பெற்று விளங்கவும், திருவள...வேதம்—அழகிய மனத்தின்கண் நினைந்து அழகிய வாய் திறந்து ஒப்பற்றதாகச் சொல்லிய, சொல்லுதற்கு அரிய தெய்வத் தன்மை வாய்ந்த திருக்குறள் என்னும் செந்தமிழ்வேதம், பலருரை...எனினும்—பலர் உரை செய்ய நிலவிய தென்றாலும், ஒருவா...உரையொடு—குறையாத புலமையை யுடைய தருமர் முதலாய பாடல் சான்ற சிறப்பை யுடைய பதின்மர் செய்த விரும்பத் தகும் உரைகளுள் பெருமை நிறைந்து விளங்கும் பரிமே லழகர் இயற்றிய உரையுடன், விரிகடல்...தருகென—அகன்ற கடல் சூழ்ந்த பூமியில் நிலவி விளங்கும்படியாக இன்புறும் அச்சில் பதித்துத் தருவா யென, கற்பக...பொழிற்கண்—கற்பக விருக்ஷச் சோலை ஆகாயத்தில் உள்ள தெனச் சிறப்புப் பொருந்திய புலவர் சொல்லுவர்; 'அது நம்போல் மாறாத நல்ல வளத்தை உடைய தென்றால் (நாம்) அங்குச் சென்று நன்றாகக் காணலாம்' என்று நினைத்து சென்றாற் போல, அழகு பொருந்த வளர்ந்து ஆகாயத்தைத் தொடும்படியாக உயர்ந்த அகன்ற மாமரச் சோலையின்கண், சிவந்தழை...விரும்பி—சிவந் தழைக்கின்ற தவத்தினர்க்கு இடமாய் அழகு ஒளிர்கின்ற காரைக்கால் நகரில் அவதரித்த காரைக்காலம்மையார் மனம் கனிந்து (தமது இல்லத்தில் விருந்துண்ட) சிவனடியார்க்கு அளித்த மாங்கனிக்கு ஈடாக முக் கண்ணராகிய சிவபெருமான் தந்த, இனித்த மதுரமான மாங்கனி இச் சோலையின் கனியே யென்று சொல்லும்படியாக (ஒவ்வொரு மரத்தின்) ஒவ்வொரு கொம்பிலும் நெருங்கிப் பழுத்த எண்ணில்லாத பழங்களை உண்ண விரும்பி, வாவிப்

புகுந்து...நன்ன டுடையான்—தாவிப் புகுந்து கருங் குரங்குக் குட்டிகளெல்லாம் (அம் மரங்களை) அடைந்து, அம் மரங்கள் மேல் இருந்து தாவிச் சென்று அம் மரங்களின் நுனிகளில் ஏறி, ஒழிதல் இல்லாத அப் பழங்களைப் பறித்து உண்ண வலிமை யின்றிக், கூன் கொண்ட முதுகின்மே லுள்ள மயிரெல்லாம் உதிர்ந்து, இரு கண் களும் குழிகளாகி, எலும்புக ளெல்லாம் வெளித் தோன்றி, வயிறுகள் மிக ஒட்டி, மிகு பசி வருத்த வாய் திறந்து பார்த்துக் கொண்டு நெருங்கி யிருக்கும் வயது முதிர்ந்த பெரிய கருங் குரங்குகள் முன்பு (அப் பழங்களை) முதலில் உகுத்து, வெறுக்கும்படியாக ஊட்டி, பின் விரும்பித் தாம் உண்டு, தாமாக முயன்று உண்ணத் தக்க வலியில்லாத உறவினர்களுக்கு ஊட்டிப் (பின்) உண்ணும் இல்வாழ்வாரை ஒக்கும் நலம் நிறைந்த செம்பி நாடு என்னும் நல்ல நாட்டை உடையவன், மேருவொன் றென்று...மாநகராளி—மேரு மலை யென்று ஒன்று உண்டெனச் சொல்லுதல் பொய் யென்று எவரும் சொல்லும்படியாக அளவு கடந்து உயர்ந்து, நல்ல பொன்னால் கட்டப்பட்ட, பலவகை உயர்ந்த மணிகள் பதிக்கப் பெற்ற மாடங்களின்மேல் உலாவும் ஒளி யுடைய ஆபரணங்களை அணிந்த பெண்கள் அன்பு நிறைந்த ஆடவர் கள் நெருங்கிவரப் பார்த்து, இன்ப முறக் கூட எண்ணும் தமது காதலானது குறிப்பால் வெளிப்பட 'நல்ல பழமாகிய இதனைச் சிவந்த வாயையும் பச்சைச் சிறகுகளையு முடைய இளங் கிளிக்கு ஊட்ட உள்ளே போகிறேன்' என்று சொல்லிப் பூரணச் சந்திரனது ஒளி குறையும்படியாகக், கண்ணாடிகளை வெட்டி (அவற்றால்) கட்டி ஒளிரும் அரங்குட் புகுந்து, சுவரிடத்து உருவால் ஒத்துத் தோன்றும் பிரதி பிம்பக் கிளிக் கூட்டின் நேரே சென்று (அதனைத்) திறத்தலை, பின்னே சென்ற காதலர் அன்போடு பார்க்க, மிக்க நாணத்தோடு சிரித்து ஓடித் தழுவுகின்ற வளம் நிறைந்த புதுவை என்னும் பெரிய நகரை ஆள்கின்றவன், அவமெலாம்...தேவர்—பயனற்ற ஆபரணங்க

# சிறப்புப் பாயிரம்.

ளெல்லாம் அணுகாது சேண் நீங்கச் சிவச் சின்னங்க ளெல்லாவற்றை யும் அணிந்த சிவ ஞானத் தேவர், பவமெலாம்...உதித்தோன்—முந் திய பிறப்புக்களி லெல்லாம் மகிழ்ந்து செய்த மிகப் பெரிய தவத் தின் பயன்க ளெல்லாம் திரண்டு ஒரு மகனு யுதித்தோன், பூவிலும் ...புகழான்—பூமியிலும் (எண்) திசைகளிலு முள்ள மற்றைய தீவுகளிலும் சூரிய சந்திரர் சுற்றும் பெரிய ஆகாயத்திலும், இனிய சுவையை நல்கும் தமிழ்ப்புலவர் நாவிலும் பாவிலும் நடிக்கும் புகழை யுடையவன், உண்மையும்...செல்வன்—வாய்மையும், உயர்ந்த நூல் களை அறியும் நுண்ணிய அறிவும், வறுமையை ஒழிக்கும் கொடை யும், (குடிகள்) காண்டற்கு எளிமையும், பகைவரை வெல்லும் வலி மையும், சூரியன் விரும்பும் ஒளியும், சந்திரன் விரும்பும் தண்மையும், கண்ணோட்டமும் வளரப் பெற்ற சிறப்புடையவன், வண்டினம்... வென்றோன்—வண்டுக் கூட்டங்கள் கூடி இன்பமுடன் ஏறித் தோண்டப் பெரிய அரும்புகள் மலர்ந்து, இனிய தேன் நிறைந்து பெருக உண்டு களிக்கும் குளிர்ந்த மலர் மாலையைச் சூடும் திண்ணிய தோள்களின் வலிமையால், அழகு நிறைந்து விளங்கும் மேகத்தை முடியாக அணிந்து புகழ் பெற உயர்ந்து, நேராகக் கீழே போய், நீர் நிறைந்து அமைந்த பெரிய கடல்கள் சூழ்ந்த பூமியின் மத்தியில் நின்ற மேரு மலையை வென்றோன், எற்றுப் திரை புனல்...புலமை யான்—எறியும் அலைகளை யுடைய கடல்கள் சூழ்ந்த பூவுலகைப் பொருந்திய நல்ல நூல்களை முடிவுற ஆராய்ந்து, பல நூல்களையும் கற்ற கவிவாணர்கள் சொல்லிய பாக்களை இஃது இத் தன்மையது, இஃது இத் தன்மையது என்று அறியும் புலமையை யுடையவன், மலர் பொதுள்...வென்றோன்—மலர்கள் நெருங்கிய சோலையைச் சுற்றுற உடுத்தி, உலகமெல்லாம் புகழும்படியாக நிற்கின்ற தென் மதுரையின்கண், விளங்கும் பொற்றாமரை மலர்கள் நிறைந்த தடா கத்தில் அமைந்திருந்த, நலங்கள் நிறைந்த சங்கப் பலகையை வென்

றேன், கரவுறு...வென்றேன், வஞ்சகப் பிறப்பையும் இறப்பையும் ஒழித்து, சிவனுடைய மேம்பா டுற்ற மெய்ஞ் ஞானத்தின் வலியை யுற்ற, முத்தியை அளிக்க வல்லதாகிய பாம்பு பொருந்தியுள்ள சடையையுடைய பரசிவ பத்தியால் ஆகாயத்தை அளாவுகின்ற இமய மலையின் அரசனுடைய மகள் தங்குகின்ற இடப் பாகத்தை யுடைய சிவபிரானை அருச்சனை செய்ய, ஒரு நாள் குளிர்ச்சி பொருந்திய நன் மணமுள்ள தாமரை மலர்களை எண்ணியபோது ஒன்று குறைந் ததனால், தன் கண்ணைத் தோண்டி அளித்த கார் நிறத்தோனாகிய திருமாலை வென்றேன், எவ்வெந் நலங்கட்கு...வென்றேன்—எந் தெந்த நலங்களுக்கு எந்தெந்த நலம் உரித்தோ அந்தந்த நலங் களால் அந்தந்த நலத்தை வென்றேன், சிந்தாமணியோ ... நவின்றனனாக—(வேண்டியவற்றை யெல்லாம் அளிக்கும்) சிந்தா மணியோ, கெடாத காமதேனுவோ, தெய்வத் தன்மை பொருந்திய கற்பகத் தருவோ, மழையைப் பெய்யும் மாட்சிமைப்பட்ட மேகமோ, சங்க நிதியோ, பதும நிதியோ, இவ் வுருவினை எடுத்தது, நன்மை யமைந்த இவ் வுருவு என்ன வென்று அறிவால் உணர்ந்திலம் எனப் புவியிலுள்ளோர் சொல்லுகின்ற பொன்னுச்சாமி என்னும் மக்கட் கரசன் மிக மனம் மகிழ்ந்து சொல்லினன் ஆக, இனி தினிது...பதித்தனன்—நல்லது நல்லது என்று வெறுப்பற்று விருப்ப முற்று, 'இவனிடத்து நிறைந்த சொல்லுதற் கரிய அற மெல்லாம் தனக்கு உற்ற காட்டாக நிலைபெறக் கொண்டிருக்கும் நூல், பழமையான (இப்) பெரிய உலகத்தில் இந் நூலே யாகலின், சொல்லியது மிகப் பொருந்தும்' என்று நினைந்து, எவ்விடத்தும் நிறைந்து நில்வுறும்படியாக அச்சில் பதிப்பித்தனன், விடையத்தில்—உதித்தோன்—புலங்களிற் செல்லும் தடையற்ற மனத்தை நடை யற்றுப் போகும்படியாக அடக்கி (ச் சிவபிரான்) திருவடிக ளிரண் டில் வைக்கும் தன்மையை உயிர்கட்கு அறிவிக்கப் பூமி யெங்கும்

## சிறப்புப் பாயிரம்.

விரிந்து செல்கின்ற கங்கை நதியின் பெரிய நீரை யெல்லாம் சுருக்கிச் சிறிய துளியாக்கி, ஒளி பொருந்திய சடை முடியில் ஒளிரும் படி வைக்கும் அந்தமற்ற முதற் கடவுளாகிய சிவ பெருமான் இடைவிடாது தங்கும், கெடாத பெரிய தவத்தைப் பொருந்தி விளங்கி அழகு நிறைந்த, (தன்னைத்) தரிசித்தவர்களது கொடிய பிறப்பானது காணமற் போக அருள் புரிகின்ற திருக்கோணசலமும், விளங்குகின்ற நலங்களை உயிர்கள் அடையும்படியாக மும் மலத்தின் வலிமையைக் கொல்லும் பெரிய திருக்கேதீச்சரமும் இரண்டு நிதிகளாகப் பொருந்தப் பெற்று நிலவுறும் நல்ல ஈழ நாடு என்னும் ஒப்பில்லாத குபேர னுக்கு ஒப்பற்ற தலையாயது மாட்சிமை தங்கிய சோலைகள் நிறைந்த யாழ்ப்பாணம்; அத் தலைக்கு அழகுறச் சூடும் மணிகள் பதித்த கிரீடத்தை ஒக்கும் பல நூல்களையும் கற்றுணர்ந்த நல்ல நாவலர்கள் நாள்தோறும் கூடி ஆராய்தல் பொருந்திய பெருமை உயர்ந்து வளரும் பெரிய வளமெல்லாம் சேர்ந்த, தன் பெயராகிய தொகைநிலைத் தொடரைச் சொல்லின் நிலை பெற்று நிற்கும் (அம்) முற் சொல்லால் விளங்குகின்ற பொருள்களை உண்டாக்கி, இன்னமும் பற்பலர் உரைக்க இடம் கொடுக்கின்ற, மேகங்கள் தவழ்கின்ற மதில்கள் சூழ்ந்த நல்லூர் என்பர்; விளங்கும் அக் கிரீடத்திற்கு ஒப்பற்ற சிரோரத்தினம் என்ன (முன்) சொல்லாத உலகம் சொல்லும் படியாக வந்து தோன்றினேன், செந்தமிழ்...பிழம்பு—செந்தமிழ் என்னும் அழகிய நங்கையின் கழுத்திற்கு அழகாம் களிப்பினை நல்கும் மங்கல நாண் போன்றவன், இலக்கணங்களை யெல்லாம் நன்றாக விளக்கும் ஒளி மிகுந்த தூண்டா விளக்குப் போன்றவன், அடையக்கூடிய இன்பங்களை யெல்லாம் பொருந்திய புராணங்களைக் கற்பவர் யாவர்க்கும் ஒளிதரும் கண் போன்றவன், மெய் யறிவைக் கொடுத்துத் தொன்று தொட்டு வருகின்ற பிறப்பை ஒழிக்கும் பல நூல்களுக்கும் பொருந்தும் ஓர் இல்லம் போன்றவன், பொய்

களைக் கண்டு நீக்கி மெய் இதுவே யென்னும் சைவ சித்தாந் தத் தெய்வக் கருவூலம் போன்றவன், எண்ணும் அறங்கட்கு நெருங் கிய உயிராகிய குளிர்ந்த பெரிய சிவ புண்ணியச் சுடர் போன்றவன், சிவனடியவரை...நாவலன் —சிவபிரானது அடியாரைச் சிவம் எனக் கருதும் தவமே வளர்க்கும் பயனுற் சீலன், என் உள்ளத்தின்கண் (நிலையாகக்) குடிகொண்டிருக்கின்ற, எண்ணும் சிறப்பெல்லாம் உடைய ஆறுமுக நாவலன்.

அகலம். வளர், செழு, அகல், செறி, அலங்கு, கிளர், அவிர், பெருகு, சால், பெறு, சொல், நணுகு, நகு, விரி, சூழ், தழை, திகழ், அடு, தகு, உண், எண்ணு, விளங்கு, படர், மலி, தெறு, தழைதரு, எற்று, உணர், நிலவு, இலகு, உறு, புனை, புகல், அறு, அமர், வயங்கு, கண்ணு, முன்னு என்பன வினைத்தொகைகள். 'எழூஉ' செய்யூ என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். 'மேவா' செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இன்றியமையாத, ஒருவாத, மாறாத, குழியாகி, காட்டாது, மூவாத, தாவாத, தூண்டாத என்பன ஈறு கெட்டு நின்றன. உதகம்—நீர். குர கதம்—குதிரை. வையம்—தேர். புதவம் —கதவு. தமனி யம்—தங்கம். மகிதலம்—உலகம். ஒருவாத—நீங்காத. ககனம்— ஆகாயம். அம்பர்—அங்கு. நிவந்த—உயர்ந்த. கவின்—அழகு. வாவி—தாவி. வெரிந்—முதுகு. செம்பி நாடு— முன் இராம நாதபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்ததா யிருந்த ஒரு நாடு. பித் திகை—சுவர். பஞ்சரம்—கூடு. புதுவை—செம்பி நாட்டின் தலைநகர். கண்மை—கண்ணோட்டம். வசுந்தரை—பூமி. பொதுள்—நெருங்கு. தென் கூடல்—தென் மதுரை. சலசம்—தாமரை. வீரன்—சிவன். இடந்து—தோண்டி. சுரபி—காமதேனு. பாகீரதி—கங்கை நதி. அந் நதியைப் பகீரதன் கொண்டுவந்தமையால், அது பாகீரதி யென்று பெயர் பெற்றது. திருக்கோணசலம்—இலங்கையிலுள்ள

## சிறப்புப் பாயிரம்.

*பாடல்பெற்ற ஒரு சிவஸ்தலம். திருக்கேதீச்சரம்—இலங்கையி லுள்ள பாடல் பெற்ற மற்றொரு சிவஸ்தலம். தனதன்—குபேரன். கவித்தல்—சூடுதல். கந்தரம்—கழுத்து.*

*இவ் வாசிரியப் பாவை இயற்றினோர் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை மாணாக்கரும் சிதம்பரச் செட்டியார் குமாரரு மாவர்.*

கருத்து. *ஒப்புயர்வற்ற திருவள்ளுவர் திருக்குறளைப் பரிமே லழகர் உரையுடன் அச்சிற் பதிப்பிக்கும்படியாகச் செம்பிநாட்டு மன் னர் குமாரரும், சேதுபதி யவர்களின் மானேஜருமான பொன்னுச் சாமித் தேவரவர்கள் சொல்ல, அவ்வாறு பதிப்பித்தனர் யாழ்ப்பா ணத்து நல்லூர்த் தமிழாசிரியர் ஆறுமுக நாவலர்.*

### தெய்வ நாயகப் பிள்ளை.

(*நேரிசை யாசிரியப்பா.*)

*திருவளர் மருமத் தருவளர் பெருமா, னுந்தியந் தாமரை யந்தி லமர்ந்து, புரிமுறுக் குடைந்து முருகு கொப்புளிப்ப, வள்ளித ழவிழ்க்கும் வெள்ளிதழ்க் கமலத், திருமனை யவாவு மொரு மனைக் கிழத்தியை, மன்னுற நாளுந் தன்னுறு நாவிற், செந் நிறந் திரிந்து வெண்ணிறம் பயப்ப, மருவுற வைத்த வொரு பெருந் தேவ, னருமறைப் பொருளைப் பெருநிலத் துதித்த, மன்பதை கட்கெலா மின்புற வுணர்த்த, வுள்ளத் துள்ளிக் கொள்ளுந் தெய்வ, வுருவங் கரந்து திருவள் ளுவராய், மாநி லத் துற்று மேனிலத் தவரு, மவாவுற வென்றுந் தவாநல மமைத்துப், பன்மலை யுள்ளுயர் பொன்மலை யென்னப், பன்னா லுள்ளுயர் நன்னூ லாகப், புரிவுற வருளிய விரிவுறு பொருள்சேர், தெய்வத் திருக்குறண் மெய்மலி நூலைப்,*

# திருவள்ளுவர் திருக்குறள்.

பொற்பமர் தருக்களுட் கற்பக மென்னப், பலருரை யுள்ளு நிலவுற விளங்கும், பரிமே லழகர் புரியுரை யோடு, நயக்குறு மச்சில் வயக்கித் தருகென, வானினங் களினுயர் தேனு வென்ன, முற்றுற வாய்ந்து கற்றவர் குழுமிக், கற்பம் புக லினு மற்பமுங் குறையாப், பெருவள னமைந்து மருவுமிப் புவியிற், பம்புபன் னாட்டுயர் செம்பிநன் னாட, னந்தா மணிக ளுட் சிந்தா மணியெனப், பொன்னியல் புரிசை தென்னுற வுடுத்து, நன்னகர் பலவினுட் டுன்னுசீர் பெற்று, முது புகழ் சுமந்துயர் புதுவைமா நகரான், சலஞ்சலத் துதித்த நலம்புரி முத்தெனத், தவஞாலம் புகழுஞ் சிவஞானத் தேவர், பிறக்குமா தவத்திற் சிறக்கவந் துதித்தோன், பெருநிதி களி னுய ரிருநிதி யென்ன, *விரவலர்க் கெல்லாம் வரையாது கொடுக்கும், வள்ளற் குழாங்க ளுள்ளுயர் வள்ளல், பன்னக் கேட்க வுன்னத் தெவிட்டாச், செந்தமிழ்ச் சுவை தெரி சுந்தரக் குரிசில், கற்றூர்க் கெல்லா நற்று யில்லந், தூய்மை மிகுக்கும் வாய்மைப் பௌவந், தெருட்குரித் தாய வருட்பெருங் குன்ற, முத்தி தருஞ்சிவ பத்திப் பிண்ட, நன் னலம் பலவுந் துன்னுறு முறையுள், பெரும்புயா சலத்திற் சுரும்பமர்ந் துண்ணுந், தாமமார் பொன்னுச் சாமி மகிபன், கழிந்தபே ருவகையின் மொழிந்தன ளுகக், களங்கமற வாய் ந்து விளங்குறப் பதித்தன, னம்பரத் திலங்கு செம்பொன் னுட்டைத், தோழ னெனக்கொளு மீழநன் னாட்டி, னேண மர்ந் தொளிர்யாழ்ப் பாணத் துற்ற, வளமலி செல்வ வளகை நிகர்க்கும், வில்லூர் மாட நல்லூர் வாண, னெழுத்து முதலாக வழுத்திலக் கணமெலாங், கடைபோக வுணர்ந்த

## சிறப்புப் பாயிரம்.

*தடையறு மறிஞன், றாதலம் புகழ்சிவ புராணச் செல்வஞ்,
சமையங் களினுயர்ந் தமைவுபெற் றோங்கித், தெய்வத் திறம்
பொலி சைவ மென்னப், பலபல கலைபெலா நிலவுற வுணர்ந்த,
புலவரி னுயர்ந்தொளிர் நலமலி பெருமான், புகலருஞ் சீர்த்தி
பொருந்துஞ், சகமகி ழாறு முகநா வலனே.*

**பொருள்.** *திருவளர்...தேவன்—இலக்குமி தங்கும் மார்பை
யுடைய, உருவம் வளர்கின்ற திருமாலின் கொப்பூழாகிய அழகிய
தாமரை மலரிடத்தில் தங்கி, புரியினது முறுக்கு உடைந்து தேனைச்
சொரிய, வளமுள்ள இதழ்களை விரிக்கும் வெண்டாமரை மலரா
கிய அழகிய இல்லத்தை விரும்பும், ஒப்பற்ற மனையாளை நிலையாக எந்
நாளும் தன்னை யுற்ற நாவில் சிவந்த நிறம் மாறி வெள்ளை நிறம்
உண்டாக, சேர்வுற வைத்த ஒப்பற்ற பெரிய பிரம தேவன், அரு
மறை...கரந்து—அரிய வேதங்களின் பொருள்களைப் பெரிய புவி
யின்கண் தோன்றிய மக்களுக் கெல்லாம் இன்பமுற உணர்த்து
வதற்காக மனத்தில் நினைத்து (த்தான்) கொண்டுள்ள தெய்வ உரு
வத்தை ஒளித்து, திருவள்ளுவராய்...மெய்மலி நூலை—திருவள்ளுவ
ராய்ப் பெரிய நிலவுலகின்கண் வந்து, தேவலோகத்தவரும் விரும்பும்
படியாக, என்றும் கெடாத நலங்களை அமைத்து, பல மலைகளுள்ளும்
மேரு மலை யென்று சொல்லும்படியாக, பல நூல்களிலும் உயர்ந்த
நல்ல நூலாக, விருப்பமுற அருளிய விரியுந் தன்மையுள்ள பொருள்
கள் சேர்ந்த தெய்வத்தன்மைவாய்ந்த திருக்குறளாகிய உண்மை நிறை
ந்த நூலை, பொற்பமர்...புரியுரையோடு—அழகு பொருந்திய மரங்
களுள் கற்பக மரமென்று சொல்லும்படியாக, பலருடைய உரைக
ளுள்ளும் ஒளிபெற்று விளங்கும் பரிமேலழகர் இயற்றிய உரையுடன்,
நயக்குறும்...தருகென—விருப்புறும் அச்சில் பதித்துத் தருக என்று
சொல்ல, ஆனினங்களின்...செம்பிநன்றுடன்—பசுக் கூட்டங்களில்*

உயர்ந்த காமதேனு என்று சொல்லும்படியாக, முழுவதும் ஆராய்ந்து கற்றவர்கள் கூடி, ஆயிரங்கோடி ஆண்டு சொல்லினும் சிறிதும் குறையாத, பெரிய வளங்கள் நிறைந்துள்ள இப் பூமியில் பரந்த பல நாடுகளில் உயர்ந்த செம்பி நாடு என்னும் நல்ல நாட்டை யுடையவன், நந்தாமணிகளுள்...புதுவை மா நகரான்—கெடாத மணிகளுள் சிந்தாமணியைப் போன்ற பொன்னால் இயற்றப்பட்ட மதில்களை அழகுற உடுத்து நல்ல நகர்கள் பலவற்றுள்ளும் பொருந்திய சீர்களைப் பெற்று, பழமையான புகழைத் தாங்கி உயர்ந்த புதுவை என்னும் தலை நகரை யுடையவன், சலஞ்சல... உதித்தோன்—வலம்புரிச் சங்கில் தோன்றிய நலங்கள் அமைந்த முத்து என்று சொல்லும்படியாக, தவத்தினர்கள் புகழும் சிவஞானத் தேவர் (செய்து) விளங்குகின்ற பெருந் தவத்தினால் சிறப்புற வந்து பிறந்தவன், பெரு நிதி...வள்ளல் —பெரிய நிதிகளி லெல்லாம் உயர்ந்த (சங்க நிதி பதும நிதி என்னும்) இரண்டு நிதிகளைப்போல இரந்தவர்களுக் கெல்லாம் அளவுபடுத்தாது கொடுக்கும் வள்ளல் கூட்டங்களுள் உயர்ந்த வள்ளல், பன்ன ...குரிசில்—சொல்லக் கேட்கச் சிந்திக்கத் தெவிட்டாத செந்தமிழின் சுவையைத் தெரிந்த அழகிய அரசன், கற்றோர்...இல்லம்—கற்றவர்களுக் கெல்லாம் நல்ல தாய் வீடு போன்றவன், தூய்மை...பௌவம் —தூய்மை மிகுந்த வாய்மைக் கடல் போன்றவன், தெருட்குரி... குன்றம்—தெருட்சிக்குச் சொந்தமாய அருள் என்னும் பெரிய மலை போன்றவன், முத்தி...பிண்டம்—வீட்டினை அளிக்கும் சிவ பத்தியை யுடைய உடம்பினன், நன்னலம்...உறையுள்—நல்ல நலங்கள் பலவும் பொருந்தியிருக்கும் இல்லம் போன்றவன், பெரும்புயா... மொழிந்தனனாக—பெரிய மார்பாகிய மலையில் வண்டுகள் இருந்து உண்ணும் மலர்மாலை பொருந்திய பொன்னுச்சாமி என்னும் மன்னன் மிகுந்த பெரிய மகிழ்ச்சியுடன் கூறினன் ஆக, களங்கமற...பதித்தனன்—குற்றமற ஆராய்ந்து விளக்கமுற (அச்சில்) பதிப்பித்தனன்,

## சிறப்புப் பாயிரம்.

அம்பரத் திலங்கும்...வாணன்—ஆகாயத்திின்கண் விளங்கும் செவ்விய தேவ ருலகத்தைத் தோழன் என்று கொள்ளத் தக்க (இன்ப மெல்லாம் உடைய) ஈழ நாடு என்னும் நல்ல நாட்டின், பெருமை பொருந்தி விளங்கும் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வளமெல்லாம் நிறைந்த செல்வ அளகை நகரை ஒக்கும் மேகம் தவழ்கின்ற மாடங்களை யுடைய நல்லூரில் வாழ்கின்றவன், எழுத்து...அறிஞன்—எழுத்து முதலாகச் சொல்லுகின்ற இலக்கணங்க ளெல்லாம் முற்றுறக் கற்ற குற்றமற்ற அறிஞன், தராதலம்...செல்வம்—உலகம் புகழும் சிவ புராணங்களாகிய செல்வம் (உடையவன்), சமயங்களின்...பெருமான்—சமயங்களிலெல்லாம் உயர்ந்து நிறைவு பெற்று விளங்கித் தெய்வத் தன்மை பொருந்திய சைவ சமயம்போலப் பல பல கலைகளெல்லாம் ஒளி பெற அறிந்த புலவர்களில் உயர்ந்து விளங்கும் நலங்கள் நிறைந்த பெருமான், புகலரும்...நாவலன்—சொல்லுதற்கு அரிய கீர்த்தி வாய்ந்த, உலகத்தை யெல்லாம் (தமது கல்வியால்) மகிழ்விக்கும் ஆறுமுக நாவலன்.

அகலம். இப்பா வியற்றியவர் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை மாணாக்கர்; சங்கரலிங்கப் பிள்ளை குமாரர். வளர், உறு, உயர், மலி, பம்பு, அமர், புரி, இயல், துன்னு, தெரி, ஊர், புகழ், பொலி, ஒளிர், ஆர், மகிழ் என்பன வினைத்தொகைகள். 'ஏகாரம்' ஈற்றசை. தவாத, குறையாத, நந்தாத, தெவிட்டாத, என்பன செய்யுள் விகாரத்தால் ஈறு கெட்டு நின்றன. மருமம்—மார்பு. உந்தி—கொப்பூழ். அந்தில்—அவ்விடம். புரி—திரி; வைக் கோல் புரி, கயிற்றுப் புரி என வருதல் காண்க. முருகு—தேன். பயத்தல்—உண்டாதல். நயக்கு—விருப்பு. வயக்கி—வசப்படுத்தி—பதிப்பித்து. ஆன்—பசு. தேனு—காமதேனு என்னும் தேவர் நாட்டுப் பசு. கற்பம்—ஆயிரங் கோடி. குறையாத—மேல்மேல்

வளர்ந்து கொண்டிருக்கிற. புரிசை—மதில். தென்—அழகு. சலஞ் சலம்—வலம்புரி யாயிரம் சூழ்ந்த சங்கு தெவிட்டாத—தேக்கிடாத —வெறுக்காத. குரிசில்—அரசன். பௌவம்—கடல். பிண்டம்— உடல். உறையுள்—உயிர் தங்கும் உடல்; இல்லம். புய+அசலம் =புயாசலம்=மார்பாகிய மலை. மகிபன்—அரசன். அம்பரம்— ஆகாயம். பொன்னாடு—தேவருலகம். ஒண்—பெருமை. அளகை— குபேரன் பட்டணம். தராதலம்—பூமி. சீர்த்தி—மிகு புகழ். பொத் தும்—போர்க்கும். பம்புதல்—பரவுதல்.

### சோடசாவதானம் சுப்பராயச் செட்டியார்.

(நேரிசை யாசிரியப்பா.)

மலர்தலை யுலகிற் குலவுயிர்த் தொகைக, டுன்னிய வினைவழி மன்னிய போகந், தனைவிழைந் தருந்த நனைமலர்க் கோதை, மலைமக ளொருபா னிலைதர வைத்த, சிவபிரா னருளின் றவலரு வலியாற், பாற்படு மண்டப் பரப்பினை நொடியினுள், வீற்று வீற்றாக விழுத்தக வகுத்த, தேன்முகப் பதும நான் முகப் புத்தேள், வன்பட ரகன்று மன்பதை யனைத்தும், விதிவிலக் குணர்ந்து கதிபெறற் குவந்து, சீரிய தெய்வ வாரிய மொழியா, னல்கிய வளமை மல்கிய சிறப்பிற், பாயிர நான் மறை மாயிரு ஞாலத், தடுபகை கரக்கப் படுபொரு ளாதலி, னுலையா மரபி னிலைபெற வம்மறைப், பருப்பொரு ளொருவி விழுப்பொரு ளொருங்கு, மமிழ்தினு மினிய தமிழினிற் றரு வான், பவர்சடைப் பனவர் நுவலருஞ் சீர்சா, லிகலறு தவத் திறற் பகவமா முனிவரன், செய்தவப் பயனுன் மைதப வந்து, மாண்டநல் லருட்கொடை பூண்டகா ரணத்தாற், றெய்வப் புலமைத் திருவள் ளுவனெனு, நிகரில்பேர் மேற்கொண் டக

## சிறப்புப் பாயிரம்.

விடு முய்யத், துன்பக லறம்பொரு ளின்பம்வீ டென்னு,
நாற்பொருள் பயக்கு மேற்புடைத் தாகத், தப்பா தருளிய
முப்பான் மருவிய, திருக்குற ளென்னுந் தெய்வமா மறை
யொடு, தருமர் முதலிய சால்பினர் வகுத்த, திருகில்லே
ருரைகளுட் சிறந்து நிலைஇய, வரிமே லியல்புகழ்ப் பரிமே
லழக, ருளங்கனிந் தியற்றிய வளங்கனி யுரையினைத், தேர்ச்சி
யின் மிக்கோர் சிந்தைநன் குவப்பக், கரலிகி தங்களான்
விரவிய வழுக்களைந், துருவிய லச்சிற் றருகெனப் பஃறலைப்,
பன்னகஞ் சுமந்த பன்னக வரைப்பிற், குணங்குளைப் புரவி
வணங்கல ரேறு, வெதுப்பற வுலகம் பொதுக்கடிந் தளிக்கும்,
வலமுறு மிராச குலசூ டாமணி, கலைசுளி புகர்முகக் கட
வுணல் வேழம், விழைதரு கற்பக மென்குழை நொடித்து,
வான்றோய் நறுஞ்சுவைத் தேன்றோய்த் தருந்தப், புழைக்கர
நீட்டப் பழிப்பறு தேனிரு, றுறுமிய சந்தனச் சூழல்வாய்க்
குலவுஞ், செறுபுல னுடைய குறுமுனி தன்பா, லரந்தைகெட
நுவன்று வரம்பெறு பாக்குக், குண்டுபடு மீர்ஞ்சுனை குடைந்
தர மகளி, ரரக்கலர் கரம்விரித் திரப்பதை நிகர்ப்ப, வடுப்
படாக் காந்தட் டுடுப்பலர் கஞலிய, முதியசெந் தமிழ்கமழ்
பொதியமால் வரையான், விரவிய விண்ணவர் பரவவீ ரடியான்,
மூவுல களந்த மேவரு நெடுமால், வன்றிறற் பகுவாய் வன்
றியி னுருக்கொளீஇ, யுருவமண் புகுந்து துருவியுங் காணு,
வருளார் பசுங்கொடி யொருபாற் படர்ந்த, முக்கட் கரும்பின்
செக்கம லத்தாள், கரையினிற் றோய்ந்து புரைதப மணக்க,
நலத்தகு கவுணியக் குலக்கொழுந் திட்ட, பழமறை தன்னகத்
தளவளாய் மணக்குந், தெய்வவெண் டிரையெறி வையைமா

நதியான், வரியளி மிதிப்பப் புரிமுறுக் கவிழ்ந்த, மணங்கம ழம்புய மணங்கயர் குநர்க்கு, மகனமர்ந் தூதவுந் தகவினர் கடுப்ப, முகனமர்ந் தொழுக்குந் தூகளறு செந்தே, னுவட் டெறிந் தின்கழைப் படப்பையிற் புகுந்து, சுரிமுகச் சங்குழல் வரிமடை யுடைப்ப, மட்டியல் பூந்துகள் கொட்டிச் சிறை செயுங், கவிழ்துணர்த் தேமாம் பொழில்புடை யுடுத்த, பம்பிய வளம்பொலி செம்பிநன் னுடன், பூநத முளரி மானதத் தட மெனத், தேவரு மயிர்ப்பப் பூவளை யங்களை, வெண்ணிறச் சிறக ரண்ணிய மாரள, மருந்திட வென்றும் விருந்திடு மணித் தடந், துறைதரு செல்வப் புதுவைமா நகரா, னுலப்பொரு மறுவில் வலம்படு புயத்தி, லுறைதரு கொற்றவை யுவகை யொடு குறுநகை, யரும்பிய தொப்ப விரும்பிய வனைந்த, வளி யடை கிடக்குந் தளவமா லிகையான், மாவுரி யந்தணன் மறுத்துமுட் சினப்பிற், றகைக்குந் திறனலன் சிகைக்கனல் கொழிக்குங், குலிசவாட் படையுடைக் குரிசிலென் றுணர் குற், றன்னவன் றனைநீத் திந்நகர்ப் போந்த, துச்சைச் சிரவமீ துண்மையே யாமெனக், கண்டவர் பலரும்வாய் விண்டிடச் சிறந்து, விழிகவர் வனப்பிற் சுழிகொள்வாம் பரியான், றன் னுட னுடன்றமர் தாக்கிய தெய்வக், கொன்னுறை வயிர வாட் கோட்டுமா னினங்க, ளகைப்பொடு வாய்வெரீஇத் திகைத்தோட் டெடுத்துச், செல்வுழி யின்றித் திசைதொறு மிமையா, நாட்டமொடு வட்கி வாட்டமொடு நிற்ப, வயங் கொடிறு மாந்து தயங்கிமதங் கவிழ்த்து, நிகரிகந் தலவும் புகர்முகக் களிற்றுன், கடையுகத் தெழுந்த கருங்கட லென் னப், படையொடு துவன்றிய வடையல ருடையா, நெஞ்சு

## சிறப்புப் பாயிரம்.

பறை கொட்ட வஞ்சிவிழி விளர்ப்ப, வேற்றிடி போல விடை யரு திரட்டுங், கூற்றுற மெழுறழ்வலி யேற்றுரி முரசினன், பலப் பல வரசர் நலப்பமே லுயர்த்த, பைங்கொடி யடங்கலும் பணி செயூ நிற்பத், திகழ்ந்துமே லோங்கிச் சிறந்தெழிற் சயமக, ளாவிக் கிணையதாங் காவிக் கொடியினோன், பீடா ருலகங் கோடா நெறியினிற், குலவுற நடாத்து நில்வு செங் கோலினன், றண்ணிய நலங்கெழு புண்ணிய மேரு, நிறைதரு கருணைக் குறையுணல் லின்பத், திரையெறி கல்விக் கரைபொரு கடனறுங், தண்ணளி யரும்பிப் புண்ணிய மலர்ந்து, நன்றிபல பழுத்து நின்றகுண தாரு, நித்திய வருட்சிவ பத்தியின் பைங்கூழ், புகழ்தரு மிரவலர் நிகழ்தரு குறிப்பறிந், துதவிடு சீர்சா லதுலசிந் தாமணி, விளங்குறு முயிரெனு மிளங்கோ தனங்கள், கூட்டமிட் டருந்தி யேப்பமிட் டுவப்பக், கண்ணிய வின்சுவை நண்ணிய வருட்பா, லேமமொடு சுரக்குங் காம தேனு, பொய்வகைச் சமயப் புதையிருள் புதைபட, மெய்வகை யொளிவிரி சைவ சிகாமணி, யென்றுபற் பலரு மெடுத்தினி தியம்பக், குன்றலி னிலமகள் குதுகலிப் பெய்தத், தவஞா னம்பெறு சிவஞான தேவ, ரியற்றிய தவத்தா னயக்கத் தோன்றியோன், பொதியவிழ் கடுக்கை யொடு மதிதவழ் சடில, மன்னு சாமிதன் மலர்க்கழல் பழிச் சும், பொன்னு சாமிமால் புகன்றன ஞுக, வடங்கிய தழனு வடங்கலு நிமிர்த்தெனத், தளிர்த்தளி மொய்ப்பத் துளித் தலர் தேமாங், கனிசிறு வளியாற் கமலமென் பொகுட்டிற், ருக்குறீஇ யுடைந்து வாக்குறு பைந்தே, னீர்ந்தட நிரப்பு மீழ நன் ஞட்டி, னிலமகண் முகமெனக் குலவும்யாழ்ப் பாணத்,

நதிவளஞ் செறிந்து பொதிதலிற் பலகலை, வல்லோர் புகழு நல்லு ராளி, நந்தலி னலங்கெழு கந்தவேட் குரிசில், பெரிது வந் துளுற்றிய வரியமெய்த் தவத்தாற், பொறையருள் சுரந்த நிறைகொடை வாய்மையென், றின்னநற் குணங்க ளோர் மன்னிய வுருக்கொடு, வந்ததென் றியாவரும் வழுங் கிட வந்தோன், கல்வியங் கடலைக் கடப்பவர் தமக்கோர், சொல்லியன் புணையெனத் துரிசற நிற்போ, னிருவகைப் பிரம சரியநன் னெறியின், மயற்றலை புகுத்தா நயிட்டிக நிலையி னன், கற்பனை கடந்த சிற்பரஞ் சுடர்தாள், கனவினு நனவி னுங் கழலாக் கருத்தினன், பழிதரு முத்திப் பகுப்பெலா மொருவி, யழிவில்பே ரின்ப மளிக்குறு முத்தியை, யெளி தினிற் றெரித்துப் பளகிலின் புறுத்துஞ், சைவசித் தாந்த மெய்தரு பனுவலை, யையந் திரிபற வகத்தினன் குணர்ந் தோன், கையற விகந்த கருணையங் கடலோன், கூறுசீர் புனையு மாறுமுக நாவலன், பரவிய வுவப்பிற் பதித்தனன், விரவிய வுலகம் விளங்குதற் பொருட்டே.

**பொருள்.** மலர்தலை...புத்தேள்—அகன்ற இடத்தையுடைய பூவுலகில் பொருந்திய உயிர்க்கூட்டங்கள் செய்த வினைகளின் வழி யாக எய்திய போகத்தை விரும்பி அனுபவிக்க, குளிர்ந்த பூமாலையை அணிந்த இமய மலையரசன் மகளை ஒரு பக்கத்தில் நிலைபெற வைத்த சிவபிரானது கிருபையின், கெடுதற்கு அரிய வலிமையால் எட்டுத் திக்குகளிலும் படர்ந்த உலகப் பரப்பை நொடிப் பொழுதில் தனித் தனியாக மேம்பட வகுத்த, தேனைக் கொண்ட முகப்பை யுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் நான்கு முகங்களையுடைய பிரம தேவன், வன்படரகன்று...தருவான்—வலிய துன்பம் நீங்கி மக்கட் பரப்பெல்

லாம் விதிகளையும் விலக்குகளையும் அறிந்து முத்தி பெறுவதற்கு விரு ம்பி, உயர்ந்த தெய்வத் தன்மை வாய்ந்த ஆரிய பாடையால் அருளிய வளப்பம் நிறைந்த சீர்களையுடைய முறையாகவருகின்ற நான்கு வேதங் கள் மிகப் பெரிய உலகத்தின்கண் நெருங்கும் பகைவரால் மறைக்கப் படும் பொருள்க ளாதலால், கெடாததன்மையில் நிலைபெறும்படியாக அவ் வேதங்களின் தாழ்ந்த பொருள்களை நீக்கி, உயர்ந்த பொருள்கள் அடங்கலும் அமிழ்தினும் இனிய தமிழ் மொழியில் நல்கக் கருதி, பவர் சடை...முனிவரன்—நெருங்கிய சடையையுடைய பார்ப்பாரது சொல்லுதற்கு அரிய புகழ் நிறைந்த குற்றமற்ற தவத் திறத்தையுடைய பகவன் என்னும் பெரிய முனிவன், செய்தவ...மறையொடு—செய்த தவத்தின் பயனால் குற்றம் நீங்கும்படியாகப் பிறந்து, மாட்சிமைப் பட்ட நல்ல அருட்கொடையைக் கைக்கொண்ட காரணத்தால் 'தெய் வப் புலமைத் திருவள்ளுவர்' என்னும் ஒப்பில்லாத பெயரை மேற் கொண்டு, அகன்ற உலகம் உய்யும்படியாகத் துன்பத்தை நீக்கி, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் அளிக்கும் பொருத்தம் உடையதாகப் பிழையாது (இயற்றி) அருளிய அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று பகுதிகளும் பொருந்திய திருக் குறள் என்னும் தெய்வத்தன்மை வாய்ந்த பெரிய வேதத்தோடு, தருமர்...உரையினை—தருமர் முதலிய சான்றோர் (பதின்மர்) இயற் றிய மாறுபாடு இல்லாத பெரிய உரைகளுள் சிறந்து நிலைத்த, செய் யுளிற் பொருந்திய புகழையுடைய பரிமேலழகர் மனமுவந்து இயற் றிய வளம் நிறைந்த உரையை, தேர்ச்சியின்...தருகென—நூலாராய் ச்சியில் மிகுந்தோர் மனம் நன்கு மகிழக் கையெழுத்து ஏடுகளால் புகுந்த பிழைகளை நீக்கி, அழகு பொருந்திய அச்சில் (ஏற்றித்) தருவாய் என்று சொல்ல, பணிறலை...வணங்கல ரேறு—பல தலைகளை யுடைய ஆதி சேடன் என்னும் பாம்பு சுமந்த பல மலைகளையுடைய பூமியில் மடிந்த பிடரி மயிரைக் கொண்ட குதிரையை யுடைய

பகைவர்களுக்கு ஆண் சிங்கம் போன்றவன், வெதுப்பற...சூடாமணி —துன்பம் நீங்க உலகம் பொது வென்பது ஒழித்துத் தனியாகக் காக்கும் வலிமையுள்ள அரசர் குலத்தின் சிரோரத்தினம் போன்றவன், கழைசுளி...வரை யான்—கரும்புகளை வெகுண்டு அழிக்கும் புள்ளிகள் பொருந்திய முகத்தையுடைய தேவேந்திரனது நல்ல (ஐராவதம்) என்னும் யானைவிரும்பும் கற்பக மரத்தின் மெல்லிய குழைகளை யொடித்து, பெருமை பொருந்திய நல்ல சுவையை யுடைய தேனில் தோய்த்து உண்ண, துதிக்கையை நீட்டக் குற்றமற்ற தேன் கூடுகள் நெருங்கிய சந்தனச் சோலையிடத்து விளங்கும், வென்ற புலன்களையுடைய குறிய முனிவனாகிய அகத்தியன் தன்னிடத்து, துன்பம் கெடுவதற்குச் சொல்லி வரம் பெறுவதற்காக ஆழமுடைய குளிர்ந்த சுனையின் கண்ணே மூழ்கித் தேவ மகளிர் அரக்குப் போன்ற சிவந்த நிறத்தை யுடைய தமது கைகளை விரித்து இரப்பதை ஒப்ப வடுப் படாத காந்தட் பூங் கொத்துப் போலப் பொலிந்த அழகிய பழைய செந்தமிழ் மணக்கும் பொதிகை என்னும் பெரிய மலையை யுடையவன், விரவிய...நதியான்—கூடிய தேவர்கள் துதிக்க இரண்டு அடிகளால் மூவுலகங்களையும் அளந்த அடைதற்கு அரிய நெடிய திருமால், வலிய திறனையும் பிளந்த வாயையும் உடைய பன்றியின் உருவத்தைக் கொண்டு, அழகிய பூமியுட் புகுந்து தேடியும் காணாத அருள் நிறைந்த உமாதேவியாகிய பச்சைக் கொடியானது ஒரு பக்கத்தில் படர்ந்துள்ள மூன்று கண்களையுடைய கரும்பைப்போல் இனிக்கும் சிவபிரானது சிவந்த தாமரை போன்ற அடிகளைக் கரையினிடத்தே பொருந்திக் குற்றம் நீங்க மணம் வீச, நன்மை வாய்ந்த கௌணியர் குலத்தில் அவதரித்த திருஞானசம்பந்த நாயனார் எழுதியிட்ட பழைய வேதத்தைத் தன்னிடத்தே கொண்டு மணக்கும் தெய்வத் தன்மை பொருந்திய வெள்ளிய அலைகளை எறிகின்ற வைகை என்னும் பெரிய நதியை யுடையவன், வரியளி...செம்பிநன் னுடன்—புள்ளிகளை

யுடைய வண்டுகள் மிதிப்பதனால் புரிமுறுக்கு அவிழ்ந்த மணம் கமழ்கின்ற தாமரை மலர்கள் துன்பம் செய்கிறவர்களுக்கும் மன மகிழ்ச்சியோடு உதவும் தகுதியுடையாரைப் போல முக மலர்ந்து சொரியும் குற்றமற்ற செந்தேன் பெருகி, இனிய கரும்புத் தோட்டத்துட் சென்று, சுருண்ட முகத்தையுடைய சங்குகள் தவழ்கின்ற அழகிய மடைகளை உடைக்க, வாசனை பொருந்திய பூந் தாதுக்களைச் சொரிந்து அணை செய்யும், கீழ் நோக்கித் தொங்கும் பூங் கொத்துக்களையுடைய இனிய மாஞ் சோலையைப் பக்கத்தே கொண்ட நெருங்கிய வளத்தால் விளங்குகின்ற செம்பி நாடு என்னும் நல்ல நாட்டை உடையவன், பூநத முளரி...நகரான்—ஆண்யாற்றின் தாமரைகளையுடைய மானதத் தடாகம் என்று தேவரும் சந்தேகிக்கும் வண்ணம் பூவளையங்களை வெண்மை பொருந்திய சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் உண்ண எக்காலத்தும் விருந்தளிக்கின்ற அழகிய தடாகங்கள் நெருங்கிய செல்வத்தையுடைய புதுவை என்னும் பெரிய நகரத்தை யுடையவன், உலம் பொரும்.. மாலிகையான்—துணை ஒக்கும் குற்றம் இல்லாத வெற்றி பொருந்திய தோள்களில் தங்குகின்ற வீர இலக்குமி மகிழ்ச்சியோடு புன்னகை பூத்ததுபோல யாரும் விரும்பும்படியாகத் தரித்த வண்டுகள் நீங்காதிருக்கும் முல்லை மாலையை யுடையவன், மரவுரி அந்தணன்...பரியான்—மரவுரி தரித்த (துருவாச) முனிவன் மீண்டும் உள்ளத்தில் வெகுளின் தடுக்கும் வலிமையனல்லன் சடையையுடைய நெருப்பைக் கக்குகின்ற வயிர வாளாகிய படைக்கலத்தையுடைய தேவேந்திரன் என்று அறிந்து, அவனை விட்டு நீங்கி இந் நகரத்தில் வந்தது உச்சைச் சிரவம் என்னும் குதிரை, இஃது உண்மைதான் என்று பார்த்தோ ரெல்லாம் வாய் திறந்து சொல்லும்படியாகச் சிறந்து, கண்களைக் கவரும் அழகுடனே சுழியையும் கொண்ட தாவுகின்ற குதிரையை யுடையவன், தன்னுடன்...களிற்றான்—தன்னோடு வெகுண்டு போர் செய்த தெய்வத்

தன்மையும் பெருமையும் பொருந்திய வைர வாள் போன்ற கொம்பு களை யுடைய யானைக் கூட்டங்கள் வேதனையோடு வாய் விட்டு அலறித் திகைத்து ஓட்டம் எடுத்துச் செல்வதற்கு இடமின்றித் திசைகள் தோறும் இமையாத கண்களுடன் வெட்கித் தளர்வோடு நிற்க, வெற்றியுடன் இறுமாப் படைந்து விளங்கி மதத்தைச் சொரி ந்து, ஒப்பற்று உலாவுகின்ற புள்ளி முகத்தைக் கொண்ட யானைகளை உடையவன், கடையுகத்து...முரசினன்—ஊழி காலத்தில் கரை கடந்து பொங்கிய பெரிய கடலென்று சொல்லும்படியாகப் படைகள் பொருந்திய பகைவர்கள் தோல்வி யுற்று நெஞ்சு பறையடிக்கப் பயந்து கண்கள் வெளிர்க்க இடியேறுபோல இடைவிடாது முழங்கு கின்ற எமனை ஒத்த மிக்க வலியையுடைய எருதின் தோலாலாகிய முரசினை யுடையவன், பலப்பல...கொடியினேன்—பலபல அரசர்கள் நன்மையாக மேலே தூக்கிய பச்சைக் கொடிகளெல்லாம் பணி செய்து நிற்க விளங்கி மேலே உயர்ந்து சிறந்து, அழகிய வீர இலக்குமியின் உயிருக்கு ஒப்பாகும் காவிக் கொடியை யுடையவன், பீடா ருலகம் ...செங்கோலினன்—பெருமை நிறைந்த உலகத்தைக் கோணுத வழி யில் மகிழ்வுற நடாத்தி நிலவுகின்ற செங்கோலை யுடையவன், தண் ணிய...மேரு—அருளோடு கூடிய நன்மைகள் மிகுந்த புண்ணியங் களைப் புரிந்து மேரு மலைபோல் விளங்குகின்றவன், நிறைதரு...தாரு —நிறைந்த கருணை தங்குதற்கு ஓர் உடல்போன்றவன், நல்ல இன்ப அலைகளை வீசுகின்ற கல்வி யென்னும் கரையை மோதுகின்ற கடல் போன்றவன், நல்ல கிருபை அரும்பிப் புண்ணியங்கள் மலர்ந்து நன் மைகள் பல பழுத்து நின்ற நற்குண விருக்ஷம் போன்றவன், நித்திய... சிந்தாமணி—அழியாத அருளையுடைய சிவ பத்தியாகிய பசும் பயிர் போன்றவன், (தன்னைப்) புகழும் இரவலரது குறிப்பை அறிந்து உதவுகின்ற சிறப்பு நிறைந்த நிகரற்ற சிந்தாமணி போன்றவன், விளங் குறும்...காம தேனு—விளங்குகின்ற உயிர்களாகிய இளம் பசுக்

# சிறப்புப் பாயிரம்.

கன்றுகள் கூட்ட மிட்டுக் குடித்து ஏப்பமிட்டுக் களிக்க விரும்பிய இனிய சுவை பொருந்திய அருளாகிய பாலை உவப்போடு சுரக்கின்ற காமதேனு போன்றவன், பொய்வகை...தோன்றியோன்—பொய் வகைச் சமயங்களாகிய கரிய இருள் ஒழிந்துபோக மெய் வகை ஒளியை விரிக்கின்ற சைவ சிகாமணி யென்று பலரும் எடுத்து இனி மையாகச் சொல்லக் குறைதல் இல்லாத பூமா தேவி களிப்படையத் தவ ஞானத்தைப் பெற்ற சிவஞானத் தேவர் செய்த தவத்தால் (யாவரும்) விரும்பும்படியாக அவதரித்தவன், பொதியவிழ்...நல்லூ ராளி—கட்டவிழ்ந்த கொன்றை மலரோடு சந்திரன் தவழ்கின்ற சடை யையுடைய என்றுமுள்ள சிவபெருமானது மலர்ப் பாதங்களைப் போற் றும் பொன்னுச்சாமிப் பெரியோன் சொன்னுகை, அடங்கியிருந்த நெருப்பு (த்தனது) நாவை யெல்லாம் நீட்டினுற்போல தளிர்களை விட்டு வண்டுகள் மொய்க்கத் தேன் துளிகளைச் சொரிந்து மலர்கின்ற தித்திப்பான மாமரக் கனிகள் இளங் காற்றால் தாமரையின் மெல்லிய கொட்டையில் தாக்கி உடைந்து ஒழுக்குகின்ற பசுந் தேன் குளிர்ந்த குளங்களை நிரப்புகின்ற ஈழ நாடு என்னும் நல்ல நாட்டில், பூமாதேவி யின் முகம்போல் விளங்குகின்ற யாழ்ப்பாணத்தில், அதிக வளம் நிறைந்து, மறைதல் இல்லாத பல நூல்களிலும் வல்லவர்கள் புகழ் கின்ற நல்லூரை ஆள்கின்றவன், நந்தலில்...வந்தோன்—கெடுதல் இல்லாத அழகு பொருந்திய கந்த வேள் என்னும் பெரியோன் பெரி தும் மகிழ்ந்து இயற்றிய அருமையான மெய்த் தவத்தால் பொறுமை, தண்ணளி, சாந்தம், திண்மை, ஈகை, வாய்மை என்ற இந் நற் குணங்கள் ஒரு நிலையான உருவத்தை எடுத்து வந்தன வென்று யாவரும் போற்றும்படியாக வந்தவன், கல்வியங் கடலை...கருத்தினன் —கல்வியாகிய கடலைக் கடக்கக் கருதியவர்களுக்கு ஒப்பற்ற புகழ் பொருந்திய பெரிய தெப்பம்போலக் குற்றமற நிற்பவன், இரண்டு வகை பிரமச்சரியங்களில் மயக்கத்தில் செலுத்தாத நயிட்டிக பிரமச்

# திருவள்ளுவர் திருக்குறள்.

சரியநிலையை யுடையவன், கற்பனைக்கு அப்பாற்பட்ட சிற்பரஞ் சுடரினது தாள்களைக் கனவிலும் நனவிலும் நீங்காத மனத்தை யுடையவன், பழிதரு...பொருட்டு—பழியைத் தருகின்ற முத்தி வகைகளையெல்லாம் விடுத்து, அழிவில்லாத பேரின்பத்தைத் தரும் முத்தியை எளிதில் யாவர்க்கும் தெரிவித்து, குற்றமற்ற இன்பத்தைச் செய்கின்ற சைவ சித்தாந்த உண்மையை உணர்த்தும் நூல்களைச் சந்தேக விபரீதங்கள் நீங்க மனத்தில் நன்கு உணர்ந்தோன், செயலற்ற தன்மையி லிருந்து நீங்கிய கருணையாகிய அழகிய கடல்போன்றவன், சொல்லும் புகழை யெல்லாம் கொள்ளும் ஆறுமுக நாவலன் விரிந்த மகிழ்ச்சியோடு அச்சிற் பதிப்பித்தனன், விரிந்த உலகத்தில் விளங்குதல் நிமித்தம்.

அகலம். ஏகாரம் ஈற்றசை. மலர், குலவு, நனை, அடு, பவர், சால், அறு, செய், அகல், இயல், கனி, உறு, விழைதரு, தோய், செறு, அலர், கமழ், எறி, கவிழ், பொலி, துதைதரு, கவர், உறழ், ஆர், நிலவு, கெழு, நிறைதரு, பொரு, நிகழ்தரு, உதவிடு, புதை, விரி, மன்னு என்பன வினைத் தொகைகள். குலவுதல்—பொருந்தல். கோதை—(பூ) மாலை. வீற்று வீற்றாக—தனித்தனியாக. விழுத்தக—சிறப்புற. புத்தேள்—தேவன். வளமை—வளப்பம். பாயிரம்—வரலாறு—முறையாக வருகின்ற. பருப் பொருள்—நுட்பமற்ற பொருள். மை—குற்றம். தப—நீங்க. பவர்—நெருங்கிய. பனவர்—பார்ப்பார். ஏற்பு—பொருத்தம். திருகு—மாறுபாடு. காலிகிதம்—கையால் எழுதப்பட்ட ஏடு. துருவுதல்-தேடுதல். வணங்கலர்—பகைவர். பன்னகம்—பாம்பு. நகம்—மலை. சூடாமணி—முடிமணி. புழைக்கரம்—துதிக்கை. இறால்—கூடு. துறுமிய—நெருங்கிய. அரந்தை—துன்பம். பாக்கு—பொருட்டு. அர மகளிர்—தேவ மகளிர். துடுப்பு—(பூங்) கொத்து. பரவ—தொழ. வன்றி—பன்றி. கடுப்ப—ஒப்ப. உவட்டு—பெருக்கு.

# சிறப்புப் பாயிரம்.

படப்பை—கொல்லை. துணர்—கொத்து. சிறகர்—சிறகுகள். துதைதல்—நெருங்கல். உலம்—திரண்ட. கல்—மலை. வாவும்—தாவும். கொற்றவை—வீர இலக்குமி. தகைக்கும்—தடுக்கும். உச்சைச்சிரவம்—தேவேந்திரன் குதிரை. கொன்—அச்சம். அகைப்பு—வருத்தம். வாய் வெரீஇ—வாயலறி. வட்கி—வெட்கி. துவன்றிய—நெருங்கிய. அடையலர்—பகைவர். இரட்டுதல்—ஒலித்தல். நலத்தல்—சிந்தித்தல். பீடு—பெருமை. குலவுதல்—மகிழ்தல். தாரு—தரு; 'தரு' என்பது முதல் நீண்டு 'தாரு' என நின்றது. அதுலம்—உவமையின்மை. அதுல—ஒப்பற்ற. எறுழ்—வலி; எறுழ்வலி-மிக்க வலி. கோதனங்கள்...பசுக்கன்றுகள். புதை இருள்—மறைக்கும் இருள். புதை பட—மறைக்கப்பட. குது கலிப்பு—உவகை. நயக்க—விரும்ப. பொதி—மலரரும்பு. சடிலம்—சடை. பழிச்சல்—துதித்தல். பொருட்டு—கொட்டை. வாக்குதல்—வார்த்தல். துரிசு—குற்றம். பளகு—குற்றம். கையறவு—செயலறல்; ஒழுக்க மின்மை. உஞற்றல்—செய்தல். கஞறல்—பொலிதல். கஞலிய—பொலிந்த. கௌணியர்—பிராமணரில் ஒரு கோத்திரத்தார். இமையாத, கோடாத, கழலாத என்பன ஈறு கெட்டு நின்றன. 'கொண்டு+இறுமாந்து' என்பதில் 'கொண்டு' என்பதன் இடை கெட்டுக் 'கொடு' என்றாகி, அதன் உகரம் கெட்டுக் 'கொடிறுமாந்து' என்றாயது. பன்றி என்பது வன்றி என மருவி நின்றது. இப்பா வியற்றியவர் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் மாணாக்கரும், வீரச் செட்டியார் குமாரரும் ஆவர்.

கருத்து. முந்திய செய்யுளின் கருத்தையே இதன் கருத்தாகவும் கொள்க.

சிறப்புப் பாயிரம் முற்றிற்று.

# திருவள்ளுவர் திருக்குறள்.

## இடைப் பாயிரம்.

### முதல் அதிகாரம்....கடவுள் வாழ்த்து.

*அஃதாவது, கடவுளை வாழ்த்துதல். வாழ்த்து என்பது முதனிலைத் தொழிற்பெயர்.*

க. *அகர முதல வெழுத்தெல்லா மாதி*
*பகவன் முதற்றே யுலகு.*

பொருள். *எழுத்தெல்லாம் அகரம் முதல—எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதலாக வுடையன; (அது போல) உலகு ஆதி பகவன் முதற்று—அது போல, உலகம் முதற் கடவுளை முதலாக வுடைத்து.*

அகலம். *ஏகாரம் அசை. அசை என்பது இசையை நிறைப்பதற்காக நிற்கும் எழுத்து அல்லது சொல். அது போல என்பது எஞ்சி நிற்றலை 'எடுத்துக்காட்டுவமை' என்பர் பரிமேலழகர்; 'இசையெச்சம்' என்பர் சேனாவரையர். முதற் கடவுள்—ஒரு பெயரோ, ஓர் உருவோ, பெறாது நிற்கும் மெய்ப்பொருள். முதல்—முதற் காரணம். கடத்திற்கு முதற்காரணம் மண். எல்லாவித ஒலியெழுத்துக்களுக்கும் அகர வொலியெழுத்து முதற்காரண மாதல் போல, எல்லா உலகப்பொருள்களுக்கும் மெய்ப்பொருள் முதற் காரணம் என்ற வாறு.*

கருத்து. *உலகத்திற்கு முதற் காரணம் மெய்ப் பொருள்.*

உ. *கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ*
*னற்றா டொழாஅ ரெனின்.*

பொருள். *வால் அறிவன் நல் தாள் தொழார் எனின்—தூய அறிவினனது நல்ல அடிகளை வணங்கார் என்றால், கற்றதனால் ஆய பயன் என்—(மாந்தர் பல நூல்களையும்) கற்றதனால் உண்டாய பயன்*

யாது? (ஒன்றும் இல்லை.)

அகலம். அகரம் இசை நிறைக்க வந்த அளபெடை. 'கொல்' அசை. 'தாள்' சாதி ஒருமைப்பெயர். என்னின் என்பது செய்யுள் விகாரத்தால் னகர வொற்றுக் கெட்டு நின்றது. எவன் என்னும் வினாக் குறிப்பு வினைமுற்று என் என்று நின்றது.

கருத்து. கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல். 2.

௩. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

பொருள். மலர்மிசை ஏகினான் மாண் அடி சேர்ந்தார்—பூமேல் சென்றவனது மாட்சிமைப்பட்ட அடிகளைச் சேர்ந்தவர், நிலமிசை நீடு வாழ்வார்—நிலவுலகின்கண் நெடுங்காலம் வாழ்வர்

அகலம். அடி என்பது சாதி ஒருமைப்பெயர். 'பூமிசை நடந்தான்' என்பது ஒரு மதக் கடவுளின் பெயர். மலர் என்பதற்கு உள்ளக் கமலம் என்று உரைப்பாரும் உளர். அவ்வாறு உரைப்பது வலிந்து பொருள் கோடலாகும்.

கருத்து. கடவுளை உணர்ந்தோர் நில வுலகில் நெடுங் காலம் வாழ்வர். 3.

௪. வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில.

பொருள். வேண்டுதல் வேண்டாமை இல்லான் அடி சேர்ந்தார்க்கு—விருப்பு வெறுப்பு இல்லாதானுடைய அடிகளைச் சேர்ந்தவர்க்கு, யாண்டும் இடும்பை இல—எவ்விடத்தும் துன்பங்கள் இல.

அகலம். அடி, இடும்பை என்பன சாதி ஒருமைப் பெயர்கள். இல்லான் என்பது செய்யுள் விகாரத்தால், லகர வொற்றுக் கெட்டு

நின்றது. மணக்குடவர் பாடம் 'இல்லா னடிசேர்ந்தார்'; 'இடும்பை யிலர்'. நச்சர் பாடம் 'இல்லான்

கருத்து. கடவுளை உணர்ந்தார்க்கு யாண்டும் துன்பம் இல்லை. 4.

௫. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

பொருள். இறைவன் பொருள் சேர் புகழ் புரிந்தார் மாட்டு—இறைவனது அருளைச் சேர்ந்த (வர் என்ற) புகழைச் செய்தாரிடத்து, இருள் சேர் இரு வினையும் சேரா—அறியாமையால் உண்டாய (நல்வினை தீவினை என்னும்) இரண்டு வினைகளின் பயன்களும் பொருந்தா.

அகலம். 'சேர்' இரண்டும் வினைத்தொகைகள். இறைவனுக்குப் பொருள் அருளே யாம். வினை என்பது ஆகுபெயர், அதன் பயனுக்கு ஆயினமையால். 'இருள்' மூன்றும் வேற்றுமைத் தொகை. தாமத்தர் பாடம் 'இருவினையும் சேரா திறைவன்'. இருவினைப் பயன்களாவன, பிறப் பிறப்புக்கள். 'இருவினை' நல்வினை தீவினை யென்றும், அவற்றில் நல்வினை பொன் விலங்கையும், தீவினை இரும்பு விலங்கையும் ஒக்கு மென்றும் உரைப்பாரும் உளர். நல்வினையே அற மென்றும், அது வீட்டையும் அளிக்கு மென்றும் இந் நூலாசிரியரும் பிற பன்னூலாசிரியர்களும் கூறுகின்றமையால், நல்வினையைப் பொன் விலங்கிற்கு ஒப்பிடுவது பொருத்த மன்று.

கருத்து. கடவுள் அருளைப் பெற்றாரை இருவினைப் பயன்களும் சேரா. 5.

௬. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

**பொருள்.** *பொறி வாயில் ஐந்தும் அவித்தான்—பொறிவாயில் (ஐந்தின் புலன்) ஐந்தும் ஒழித்தவனது, பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்—குற்றமற்ற நெறியின்கண் (நிலையாக) நின்றவர், நீடு வாழ் வார்—(வீட்டுலகின்கண்) நெடுங்காலம் வாழ்வர்.*

**அகலம்.** *பொறி வாயில் ஐந்தாவன:—மெய், வாய், கண், மூக்கு, செவி. புலன் ஐந்தாவன:—ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை. தீர் என்பது வினைத்தொகை. ஐந்தும் என்பதன் உம்மை செய்யுள் விகாரத்தால் கெட்டது.*

**கருத்து.** *கடவுளை உணர்ந்தார் வீட்டினை அடைவர்.* 6.

*எ. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்*
*மனக்கவலை மாற்ற லரிது.*

**பொருள்.** *தனக்கு உவமை இல்லாதான்—தனக்கு ஒப்பு இல் லாதவனது, தாள் சேர்ந்தார்க்கு அல்லால் (ஏனையோர்க்கு)—அடி களைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல் மற்றையோர்க்கு, மனக் கவலை மாற் றல் அரிது—உள்ளக் கவலையை நீக்குதல் அரிது.*

**அகலம்.** *'ஏனையோர்க்கு' என்பது சொல்லெச்சம். 'சொல் லெச்சம்' என்பது சொல் குறைந்து நிற்றல். அரிது என்பது இய லாது என்னும் பொருட்டு.* நச்சர் பாடம் *'தாள் சேர்ந்தா ரல்லார்.'*

**கருத்து.** *கடவுளை உணர்ந்தவர்க்குக் கவலை இல்லை.* 7.

*அ. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்*
*பிறவாழி நீந்த லரிது.*

**பொருள்.** *அற ஆழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கு அல்லால் (ஏனையோர்க்கு)—அறக் கடலின் அழகிய தண்மையை யுடையவனது அடிகளைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல் மற்றையோர்க்கு, பிற ஆழி நீந்தல் அரிது—மறக் கடலைக் கடத்தல் அரிது.*

அகலம். தண்மை—தண்ணளி—அருள். முன்னர் அற ஆழியைக் கூறிப் பின்னர்ப் 'பிற ஆழி' என்றமையால், 'பிற ஆழி' என்பதற்கு மறக் கடல் என்று பொருள் உரைக்கப்பட்டது. மறங்கள் பல திறத்தன வாகலான் 'பிற' ஆழி என்றார். 'பிற ஆழி' என்பதற்குப் பொருளும் இன்பமுமாகிய ஆழிகள் என்று உரைப்பாரும் உளர். நச்சர் பாடம் 'தாள்சேர்ந்தா ரல்லார்'.

கருத்து. கடவுளை உணர்ந்தவர் பாவக் கடலைக் கடப்பர். 8.

௯. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

பொருள். எண் குணத்தான் தாளை வணங்கா (த) தலை—எட்டுக் குணங்களை உடையவனது அடிகளைத் தொழாத தலைகள், கோள் இல் பொறியின் குணம் இல—(தத்தம் புலன்களைக்) கொள்ளுதல் இல்லாத பொறிகளைப் போலப் பயன் இல்லாதவை.

அகலம். 'இன்' உருபு உவமைப் பொருளில் வந்தது. ஏகாரம் அசை. 'கோள்' முதனிலை திரிந்த தொழிற் பெயர். வணங்காத என்பது ஈறு கெட்டு நின்றது. பொறி, குணம், தாள், தலை என்பன சாதி ஒருமைப் பெயர்கள். எட்டுக் குணங்களை யுடையவன் ஒரு மதக் கடவுள். எண் குணத்தான் என்பதற்குச் சைவாகமத்தில் கூறியுள்ள தன் வயத்தனாதல் முதலிய எட்டுக் குணங்களை உடையவன் எனவும், ஆருகத நூலில் கூறியுள்ள கடையிலா வறிவு முதலிய எட்டுக் குணங்களை உடையவன் எனவும், அணிமா முதலிய எட்டுக் குணங்களை உடையவன் எனவும் உரைப்பாரும் உளர். 'எண் குணத்தான்' என்பதற்கு ஒருவன் எண்ணும் குணங்களை யெல்லாம் உடையவன் என்று உரைப்பினும் அமையும்.

கருத்து. கடவுளை வணங்காத தலைகள் பயனில்லாதவை. 9.

ய. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

பொருள். *பிறவிப் பெருங் கடல் நீந்துவர் (இறைவனடி சேர்ந்தார்)—பிறவியாகிய பெரிய கடலைக் கடப்பர் தலைவனது அடிகளைச் சேர்ந்தவர்; நீந்தார் இறைவன் அடி சேராதார்—கடவார் இறைவனது அடிகளைச் சேராதவர்.*

அகலம். *'இறைவனடி சேர்ந்தார்' என்பது சொல்லெச்சம். பிறவிக் கடலைக் கடப்பதற்குத் துணையாகும் புணைக்கு இறைவன் அடியை உவமித்தார்.* மணக்குடவர், தாமத்தர் *பாடம் 'சேராதவர்'.*

கருத்து. *கடவுளைச் சேர்ந்தவர்க்குப் பிறப்பு இல்லை.* 10.

## இரண்டாவது அதிகாரம்—வான் சிறப்பு.

*அஃதாவது, மழையினது பெருமை.*

க. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

பொருள். *வான் நின்று உலகம் வழங்கி வருதலான்—மழையினின்று உலகம் நிலவி வருதலால், தான் அமிழ்தம் என்று உணரல் பாற்று—அஃது அமிழ்தம் என்று அறிதல் பான்மைத்து.*

அகலம். *பான்மைத்து—தன்மைத்து. 'தான்' என்பது அது என்னும் பொருள் தந்து நின்றது. அமிழ்தம்—சாவாமையை நல்கும் மருந்து. 'வான் நின்று' என்பதற்கு 'மழை இடையறாது நிற்ப' என்றும், 'நிற்ப' என்பது 'நின்று' எனத் திரிந்து நின்றது என்றும் உரைப்பாரும் உளர்.* தருமர் *பாடம் 'தானமுத மென்*

றுரைக்கும் பாற்று'. மணக்குடவர் பாடம் 'உணரும் பாற்று'. நச்சர் பாடம் 'தானமிர்த மென்றுரைப் பார்'.

கருத்து. மழை அமிழ்தத்தை ஒக்கும். 11.

உ. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

பொருள். துப்பார்க்கு துப்பு ஆய துப்பு ஆக்கி—உண்பார்க்குத் தூய்மையான உணவை உண்டாக்கி, துப்பார்க்கு துப்பாயதும்—உண்பார்க்கு உணவாயதும், மழை—மழை நீர்.

அகலம். உகர அளபெடை இசை நிறைக்க வந்தது. மணக்குடவர், தாமத்தர் பாடம் 'துப்பாவதூஉம்'. மற்றைய மூவர் பாடம் 'துப்பாய தூஉம்'.

கருத்து. உணவை அளிப்பதும் உணவாவதும் மழை. 12.

ங. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

பொருள். விண் நின்று பொய்ப்பின்—மேகம் (மழையைப் பெய்யாது) நிலைத்துப் பொய்ப்பின், பசி விரி நீர் வியன் உலகத்துள் நின்று உடற்றும்—பசி கடல் சூழ்ந்த பெரிய உலகத்து உயிர்கள் மாட்டு நிலைத்து வருத்தும்.

அகலம். விரி என்பது வினைத்தொகை. விரி நீர் என்பது ஆகுபெயர், விரிந்த நீரையுடைய கடலுக்கு ஆயினமையால். உலகம் என்பது ஆகுபெயர், உலகத்திலுள்ள உயிர்களுக்கு ஆயினமையால்.

கருத்து. மழை இல்லையேல் உயிர்கள் பசியால் வருந்தும். 13.

ச. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

**பொருள்.** *புயல் என்னும் வாரி வளம் குன்றி(ய)க்கால்—புயல் என்னும் வருவாய் வளம் குறைந்தக்கால், உழவர் ஏரின் உழார்—உழவு தொழிலைச் செய்வோர் ஏரால் உழமாட்டார்.*

**அகலம்.** *அவர் உழாதபடியால் உணவுப் பொருள்கள் உளவாகா என்ற வாறு. குன்றியக்கால் என்பது செய்யுள் விகாரத்தால் யகரம் கெட்டு நின்றது. அகர அளபெடை இசை நிறைக்க வந்தது.* **மணக்குடவர், தாமத்தர்** *பாடம் 'குன்றுங்கால்'.*

**கருத்து.** *மழை இல்லையேல், மாந்தர் உழவு தொழிலைச் செய்யார்.* 14.

௫. *கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே*
*யெடுப்பதூஉ மெல்லா மழை.*

**பொருள்.** *கெடுப்பதும்—(பெய்ய வேண்டிய காலத்துப் பெய்யாதும், பெய்ய வேண்டாத காலத்துப் பெய்தும் மாந்தரைக்) கெடுப்பதும், கெட்டார்க்கு சார்வாய் எடுப்பதும்—கெட்டவருக்குத் துணையாகி (ப் பெய்யவேண்டிய காலத்துப் பெய்தும், பெய்ய வேண்டாத காலத்துப் பெய்யாதும் அவரை) ஆக்குவதும், எல்லாம் மழை(யே)—(இவை) எல்லாம் (செய்ய வல்லது) மழையே.*

**அகலம்.** *பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத்தால் கெட்டது. மற்று, ஆங்கு, ஏ, என்பன அசைகள்.* **மணக்குடவர்** *பாடம் 'கெடுப்பதும்', 'எடுப்பதும்'.* **தாமத்தர்** *பாடம் 'வல்ல மழை'. மற்றை மூவர் பாடம் 'எல்லா மழை'.*

**கருத்து.** *ஒருவனைக் கெடுப்பதும் எடுப்பதும் மழை.* 15.

௬. *விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே*
*பசும்புற் றலைகாண் பரிது.*

**பொருள்.** *விசும்பின் துளி வீழின் அல்லால்—விண்ணி னின்று (மழைத்) துளி வீழின் அல்லாமல், பசும் புல் தலை காண்பு அரிது—(இவ் வுலகின்கண் ஓர் அறி வுயிராகிய) பச்சைப் புல்லின் தலையைக் காணுதல் அரிது.*

**அகலம்.** *மழை இன்றேல் ஓர் அறி வுயிரையும் காணமுடியா தென்ற வாறு. மற்று, ஆங்கு, எ என்பன அசைகள். அரிது என்பது இன்மைப் பொருள் குறித்து நின்றது.* நருமர் பாடம் '*மற்றெங் கும்*'. தாமத்தர் பாடம் '*தளிர்காண் பரிது*'.

**கருத்து.** *மழை இல்லையேல், பசும் புல்லும் இல்லை யாம்.* 16.

எ. *நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி*
*தானல்கா தாகி விடின்.*

**பொருள்.** *எழிலி தடிந்து நல்கா(த)து ஆகிவிடின்—மேகம் மின்னி (மழையினை) வழங்காதது ஆகிவிடின், நெடுங் கடலும் தன் நீர்மை குன்றும்—நெடிய கடலும் தனது பெருமையிற் குறையும்.*

**அகலம்.** *நல்காதது என்பதன் தகரம் செய்யுள் விகாரத்தால் கெட்டது. தான் என்பது அசை. மழை இல்லையாயின், முத்து, பவளம், முதலியன உண்டாகா வாகலான், நெடுங் கடலும் தன்னீர்மை குன்றும் என்றார்.*

**கருத்து.** *மழை இல்லையேல், பெருங் கடலும் பெருமை குன்றும்.* 17.

அ. *சிறப்பொடு பூசனை செல்லாது வானம்*
*வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.*

**பொருள்.** *வானம் வறக்குமேல்—மேகம் வறளுமேல், ஈண்டு வானோர்க்கும் சிறப்பொடு பூசனை செல்லாது—இவ் வுலகின்கண்*

தேவர்களுக்கும் விழாவோடு பூசை நடவாது.

அகலம். பூசை—நாள் தோறும் நடக்கும் பூசை. சிறப்பு—காரணம் பற்றி நடக்கும் திரு விழா. வறளல்—காய்தல். உம்மை இறந்தது தழீய எச்சம்.

கருத்து. மழை இல்லையேல் தேவர் வழிபாடும் இல்லை. 18.

௧௯. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

பொருள். வானம் வழங்காது என்னின்—மேகம் (மழையை) நல்காது என்றால், வியன் உலகம் தானம் தவம் இரண்டும் தங்கா—பெரிய உலகத்தின்கண் தானம் தவம் (என்னும்) இரண்டும் (நிலை) நில்லா.

அகலம். தானம்—நல்லார்க்கு ஈதல். ஈகை—இல்லார்க்கு ஈதல். இல்வாழ்வார் அறங்களில் சிறந்தது தானம். துறந்தார் ஒழுக்கங்களில் சிறந்தது தவம். நச்சர் பாடம் 'வியனுலகம் வானம் வழங்காவிடின்'.

கருத்து. மழை இல்லையேல் இல்லறமும் துறவறமும் நடவா.

௨௦. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

பொருள். நீர் இன்று உலகம் அமையாது எ(ன்)னின்—நீர் இல்லாமல் உலகத்து உயிர்கள் (நிலை) நில்லா என்றால், வான் இன்று யார் யார்க்கும் ஒழுக்கு அமையாது—மழை இல்லாமல் இல்வாழ்வார்க்கும் துறந்தார்க்கும் (அவர்) ஒழுக்கம் (நிலை) நில்லாது.

அகலம். நீர் இல்லாமல் உலகம் நிலை நில்லா தென்பது யாவர்க்கும் உடன்பா டென்றால், மழை இல்லாமல் யாரிடத்தும் ஒழுக்கம்

நிலை நில்லா தென்பதும் யாவர்க்கும் உடன்பாடாம் என்ற வாறு. 'ஒழுக்கு வானின்றி யமையாது' என்பதற்கு 'மழை நீ ரொழுக்கு வானை யின்றி யமையாது' என்று உரைப்பாரும் உளர். அவ் வுண்மை எடுத்துக் கூறப்பட வேண்டாத தொன் றாகலான், அவர் உரை பொருந் தாமை அறிக. உலகு என்பது ஆகு பெயர், உலகத்து வாழும் உயிர் களுக்கு ஆயினமையால். உலகு என்றமையால், அதற்கு ஏற்ப அதன் பயனிலையை அமையாது என்றார். யார் யார்க்கும்—யார்க்கும் யார்க்கும். யார்க்கும் யார்க்கும் என்று இரட்டித்து மொழிந்தமை யால், இல்வாழ்வார்க்கும் துறந்தார்க்கும் என்று பொருள் உரைக்கப் பட்டது.

**கருத்து.** மழை இல்லையேல், ஒழுக்கமும் இல்லையாம். 20.

## மூன்றும் அதிகாரம்—நீத்தார் பெருமை.

அஃதாவது, துறந்தாரது பெருமை.

க. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

**பொருள்.** ஒழுக்கத்து நீத்தார் பெருமை—துற வொழுக்கத் தில் நிற்கும் துறந்தாரது பெருமையை, பனுவல் துணிவு விழுப்பத்து வேண்டும்—நூல்களின் முடிவு சிறப்பாக விரும்பும்.

**அகலம்.** தருமர் பாடம் 'துணிபு'. துற வொழுக்கத்தில் நிற் கும்—துறவு நிலைக்குரிய ஒழுக்கங்களை விடாது பற்றி ஒழுகும். நிற் கும் என்பது அவாய்நிலையான் வந்தது.

**கருத்து.** ஒழுக்கத்தோடு கூடிய துறவிகளது பெருமையை நூல்கள் உயர்த்திக் கூறும். 21.

உ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

பொருள். துறந்தார் பெருமை துணை கூறின்—(இல் வாழ்க்கையை) நீத்தாரது பெருமைக்கு அளவு சொல்லின், வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டு அற்று—(அஃது) உலகத்தில் இறந்தவர்களை எண்ணிக் கொண்டாற் போலும்.

அகலம். இறந்தவர்களை எண்ணித் தொகை காண்டலும், துறந்தவர்களது பெருமைக்கு அளவு கூறலும் இயலா என்றபடி. கொண்டற்று என்பது வினையெச்சத் தொகை. அது கொண்டால் அற்று என விரியும். தாமத்தர் பாடம் ' துணைக் கூறல்

கருத்து. துறவிகள் பெருமைக்கு அளவு கூற முடியாது. 22.

௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

பொருள். இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார் பெருமை—இம்மை மறுமைகளின் கூறுபாட்டை அறிந்து இவ்வுலகின்கண் துறவறத்தைக் கைக்கொண்டவரது பெருமை, உலகு பிறங்கிற்று—உலகின்கண் (மற்றைய எல்லாவற்றினும்) உயர்ந்தது.

அகலம். இம்மை மறுமைகள்—இவ்வுலக வானுலக இன்பங்கள். இவற்றின் கூறுபாடு—இவற்றின் நிலையற்ற தன்மை. துறவு நிலையான பேரின்பத்தை நல்குவது.

கருத்து. துறவிகள் பெருமை உலகில் உயர்ந்தது. 23.

௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

பொருள். உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான்—அறிவு என்னும் தோறட்டால் ஒப்பற்ற (பொறிகளாகிய) ஐந்து

யானைகளையும் (தீய புலன்களில் செல்லாது) காப்பவன், ஓர் வரன் என்னும் வைப்பிற்கு வித்து—ஒப்பற்ற வரன் என்னும் கனிக்கு வித்து.

அகலம். தோட்டி என்றதனால், ஐந்து என்பதற்கு ஐந்து யானைகள் என்று பொருள் உரைக்கப் பெற்றது. வரன்—முத்தரில் உயர்ந்த நிலையிலுள்ளவன்; வித்து அவனுக்குத் தாழ்ந்த நிலையிலுள்ளவன். வித்து என்றமையால் வைப்பு என்பதற்குக் கனி என்றும், வரனது நிலை ஒப்பற்றதாகலான் ஓர் என்பதை 'வரன்' பின் சேர்த்தும் பொருள்கள் உரைக்கப்பட்டன. தாமத்தர் பாடம் 'தோட்டியால்'. தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் 'வைப்புக்கோர்'. 'வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' என்பதற்கு 'எல்லா நிலங்களிலும் உயர்ந்த வீட்டு நிலத்திற்கு ஓர் வித்து' என்று உரைப்பாரும் உளர்.

கருத்து. ஐம்பொறிகளையும் காப்பவன் வீட்டினை அடைவன்.

ரு. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

பொருள். ஐந்து அவித்தான் ஆற்றற்கு—ஐம்புலன்களையும் ஒழித்தவனது வலிமைக்கு; அகல் விசும்பு உளார் கோமான் இந்திரனே சாலும் கரி—அகன்ற வானின்கண் உள்ள அமரரது வேந்தனாகிய இந்திரனே அமையும் சான்று.

அகலம். ஐந்தும் என்பதன் முற்றும்மையும் ஆற்றற்கு என்பதன் நான்கனுருபும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. புலனைந்தும் அவித்த முனிவன் ஒருவனால் சாப மேற்றுத் தான் வருந்தின தன்மையை இந்திரன் பகர்வனாதலால், அவன் அமையும் சான்று

என்றார். அமையும்—போதும். தருமர் பாடம். 'விசும்பிலார்.' தாமத்தர் பாடம் ' ஆற்றற் ககல்'.

கருத்து. துறவியின் வலிமை மிக மிகப் பெரிது. 25.

சு. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

பொருள். செயற்கு அரிய செய்வார் பெரியர்—செய்தற்கு அரியனவற்றைச் செய்வார் பெரியர்; செயற்கு அரிய செய்கலாதார் சிறியர்—செய்தற்கு அரியனவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர்.

அகலம். செயற்கு அரியன:—உற்ற நோய் நோன்றல், உயிர்க்கு உறுகண் செய்யாமை. ' யான் ', ' எனது ' விடுத்தல் முதலியன. செயற்குரிய செய்க லாதார்' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

கருத்து. செய்தற்கு அரியன செய்வார் பெரியர். 26.

எ. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

பொருள். உலகு—உலகியல், சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் ஐந்தின் வகை தெரிவான் கட்டே—சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் (இவ்) ஐந்தின் கூறுபாடுகளை அறிபவன் கண்ணதே.

அகலம். கூறுபாடு—தன்மை. மேற் கூறிய ஐம்புலன்களையும் முறையே இரசம், ரூபம், பரிசம், சத்தம், கந்தம் என்பர் வட நூலார். கூறுபாடுகளாவன, நல்ல பயன்களை அளிக்கும் நல்ல புலன்களும், தீய பயன்களை அளிக்கும் தீய புலன்களு மாம். அறிதலாவது, அக் கூறுபாடுகளை அறிந்து மனத்தைத் தீயனவற்றிற் செலுத்தாது, நல்லனவற்றிற் செலுத்துத லாம். கட்டே என்பதற்குக் கட்டுதலே, அஃதாவது சிருட்டியே என்று உரைப்பினும் அமையும். என்று

என்பது எண்ணிடைச் சொல். தருமர் பாடம் 'வகை தெரிவான் கண்ணே யுயர்வு'.

கருத்து. ஐம் புலன்களையும் நீத்தவன் வழியிலே உலகினர் நடப்பர். 27.

அ. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

பொருள். நிறைமொழி மாந்தர் பெருமை—நிறைவுறும் சொற்களைச் சொல்லும் மாந்தரது பெருமையை, நிலத்து மறை மொழி காட்டி விடும்—உலகத்தின்கண் மறைந்து நிலவும் (மந்திர) மொழிகள் (கண்கூடாகக்) காட்டிவிடும்.

அகலம். நிறை என்பது வினைத்தொகை. அது நிறைந்த, நிறைகிற, நிறையும் என விரியும். மறை என்பதும் வினைத் தொகை. அதுவும் அவ்வாறே காலங் காட்டி விரியும். மறைத்து வைத்துப் போற்றுவதால், மந்திரத்தை மறைமொழி என்றார்.

கருத்து. துறவிகள் பெருமைக்கு அவர் உரைத்த மந்திரங்களே சான்று. 28.

௯. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

பொருள். குணம் என்னும் குன்று ஏறி நின்றார்—ஒழுக்கம் என்னும் மலையின் மீது ஏறி நின்றவர், வெகுளி கணமேயும் காத்தல் அரிது—சினத்தை (ஒரு) கணப்பொழுதேனும் தாங்கி நிற்றல் இன்று.

அகலம். ஒழுக்கம்—துறவிக்குரிய ஒழுக்கம். அவ் வொழுக்கம் விளக்கத்தைத் தருதலால், குன்றிற்கு உவமிக்கப் பெற்றது.

சினத்தைக் கொள்ளுதல் துறவை இழத்தலாம். கணம்—நொடிப் பொழுது. குணமென்னும் குன்றேறி நின்றாரது வெகுளியால் நேரும் கேட்டை ஒரு கணமேனும் பிறர் தாங்குதல் அரிது என்று உரைப்பாரும் உளர்.

**கருத்து.** துறவிகள் ஒரு கணமேனும் வெகுளியைக் கொள்ளலாகாது. 29.

ம. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

**பொருள்.** அந்தணர் என்போர் அறவோரே — அந்தணர் என்று சொல்லப்படுவோர் துறவறம் புரிபவரே, எவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்—(அவர்) எவ் வுயிர்மாட்டும் தண்ணளி புரிந்து நடத்தலால்.

**அகலம்.** பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத்தால் கெட்டது. நச்சர் பாடம் 'அந்தண ரென்பர்'. தண்ணளி—அருள்.

**கருத்து.** துறவிகளே மெய்யான அந்தணர். 30.

இடைப் பாயிரம் முற்றிற்று.

# திருவள்ளுவர் திருக்குறள்.

## அறப்பால்.

அஃதாவது, அறத்தின் பகுதி.

### பாயிரம்.

பாயிரம்—முகவுரை.

### முதல் அதிகாரம்—அறன் வலி யுறுத்தல்.

அஃதாவது, அறத்ினது வலிமையை வற்புறுத்துதல்.

க. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

பொருள். சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊங்கு ஆக்கம்—வீட்டினைக் கொடுக்கும் செல்வத்தையும் கொடுக்கும் அறத்தின் மேற்பட்ட நல்வினை, உயிர்க்கு எவன்—மனித உயிர்க்கு யாது? (ஒன்றும் இல்லை.)

அகலம். 'ஓகாரம்' அசை. ஆக்கம்—செல்வம். அஃது ஈண்டு ஆகுபெயர், அதனைத் தரும் நல் வினைக்கு ஆயினமையால். இன்பத்தையும் புகழையும் தரும் செல்வத்தையும் தழுவி நிற்றலால், செல்வமும் என்பதன் உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை. உம்மையைச் செல்வம் என்பதனோடு மாத்திரம் சேர்த்திருத்தலானும், ஈனும் என்னும் சொல்லைச் சிறப்பு என்பதனோடும் செல்வம் என்பதனோடும் சேர்த்திருத்தலானும், மேற்கண்டவாறு பொருள் உரைத்தலே பொருத்தம். சிறப்பீனுஞ் செல்வமாவது, ஞானம்.

கருத்து. இன்பமும் புகழும் தரும் செல்வத்தோடு வீட்டைத் தரும் செல்வத்தையும் அறம் கொடுக்கும். 1.

உ. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலினூஉங் கில்லை கேடு.

பொருள். *அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை—அறத்தின் மிக்க நல்வினையும் இல்லை; அதனை மறத்தலின் ஊங்கு கேடும் இல்லை—அதனை மறத்தலின் மிக்க தீவினையும் இல்லை.*

அகலம். கேடும் என்பதன் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. ஆக்கம், கேடு என்பன ஆகுபெயர்கள், அவற்றைத் தரும் வினைகளுக்கு ஆயினமையால். மணக்குடவர், தாமத்தர் பாடம் 'மறத்தலினூங் கில்லையாம்.'

கருத்து. அறத்தின் மேம்பட்ட நல்வினை இல்லை; அதனைச் செய்யாது விடுதலிற் கீழ்ப்பட்ட தீவினை இல்லை. 2.

ங. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

பொருள். செல்லும் வாய் எல்லாம்—செய்யக் கூடும் இடத்திலெல்லாம், ஒல்லும் வகையான்—(தனக்கு) இயலும் அளவினால், ஓவாது அறவினை செயல்—(ஒருவன்) இடைவிடாது அறவினையைச் செய்க.

அகலம். ஏகாரம் ஈற்றசை. அறவினை—நல்வினை. "ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிது."—இனியவை நாற்பது. தாமத்தர் பாடம் 'ஒல்லும்வா யெல்லாம்'.

கருத்து. செய்யக்கூடிய இடங்களிலெல்லாம் அறவினையை இடை விடாது செய்க. 3.

ச. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற.

**பொருள்.** *மனத்துக்கண் மாசு இலன் ஆவது அனைத்து(ம்) அறன்—உள்ளத்தின்கண் குற்றம் இல்லாதவனுய்ச் செய்யப்படுவது அனைத்தும் அறமாம்; பிற ஆகுல நீர—மனத்துக்கண் குற்ற முள்ள வனுய்ச் செய்யப்படுவன துன்பம் தருவன (வாகிய மறங்களாம்).*

**அகலம்.** *அனைத்தும் என்பதன் முற்றும்மை செய்யுள் விகாரத் தால் தொக்கது.* தாமத்தர் *பாடம் 'நீர்மை'. மற்றை உரையாசிரி யர்கள் நால்வர் பாடம் 'மனத்துக்கண் மாசில னுத லனைத்தறன்'. அதற்கு அவர்களுரை, (அறஞ் செய்வான்) தன் மனத்தின்கண் குற்ற முடையன் அல்லன் ஆகுக; அவ்வளவே அறம். (ஒருவன் தன்) மனத்தின்கண் குற்ற முடையன் அல்லன் ஆதல் ஓர் ஒழுக்கம் ஆகுமே யன்றி அற மாகாது. என்னை? அறம் என்பது ஓர் உயிர்க்கு நன்மை பயக்கும் ஒரு* செயல். *அதுபற்றியே, ஆசிரியர் "அறவினை* யோவாதே செல்லும் வாயெல்லாஞ் செயல்," "*அன்றறிவா* மென்னு *தறஞ்* செய்க", "*வீழ்நாள் படாஅமை நன்று ஆற்றின்*", "செயற்பால தோரும் *அறனே" என்று கூறியுள்ளார். அன்றியும், மனத்தின்கண் மாசில னுதலே அறம் என்று கூறின், பற்றுள்ள முடையார் ஈகை முதலிய அறங்களைச் செய்யாது விடுதற்கு அக் கூற்றை ஒரு மேற்கோளாக எடுத்துக் காட்ட முற்படுவர். நன்று புரியாமைக்கு மேற்கோளாக எடுத்துக் காட்ட உதவும் ஒரு வகை மனோ நிலையை அறம் என்று ஆசிரியர் கூருர். ஆகலான், மாசில னுத லனைத்தறன்' என்பது ஏடு பெயர்த் தெழுதியோனல், அல்லது கால அளவில் சிதைந்துபோய்ப் பின்னர் ஊகித்து எழுதப் பட்ட வாற்ருல் நேர்ந்த பிழை எனக் கொள்க.*

**கருத்து.** *குற்றம் அற்ற மனத்தோடு செய்யப்பட்ட வினைக ளெல்லாம் அறமாம்.* 4.

ரு. *அழுக்கா றவாவெகுளி யின்னுச்சொல் நான்கு*
*மிழுக்கா வியன்ற தறம்.*

பொருள். *அழுக்காறு அவா வெகுளி இன்னா சொல் நான்கும் இழுக்கா இயன்றது—பொறாமை ஆசை வெகுளி இன்னாச் சொல் (இந்) நான்கையும் நீக்கிச் செய்யப் பெற்ற வினை, அறம்—அறமாம்.*

அகலம். *வெகுளி—கோபம். இன்னாச் சொல்—துன்பந் தருஞ் சொல். ' இழுக்கா ' என்பது ' செய்யா ' என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். இயன்றது—நிகழ்ந்தது—செய்யப்பட்ட வினை. இழுக்கி—நீக்கி.*

கருத்து. *இந் நான்கு குற்றங்களோடு சேராத வினை அறமாம்.*

௬. *அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது*
*பொன்றுங்காற் பொன்றாத் துணை.*

பொருள். *அன்று அறிவாம் என்னாது அறம் செய்க—இறக்கும் ஞான்று செய்வாம் என்று கருதாது (இற்றை ஞான்றே ஒவ்வொருவரும்) நல் வினையைச் செய்க; பொன்றுங்கால் அது பொன்றா(த) துணை—(அவர்) இறக்குங்காலத்தில் அஃது இறவாமல் (அவருயிருடன் செல்லும்) துணையாம்.*

அகலம். *' பொன்றுங்கால் ' என்று பின்னர்க் கூறியிருத்தலான், அன்று என்பதற்கு இறக்கும் ஞான்று என்று பொருள் உரைக்கப்பட்டது. ஞான்று—நாள். அறிதல் என்பது ஈண்டுச் செய்தல் என்னும் பொருட்டு, உரை காண்டல் என்பது உரை செய்தல் என்னும் பொருட்டாதற் போல. ' மற்று ' அசை. " தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு செல்வதுமற், றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—யாங்குத்தாம், போற்றிப் புனைந்த வுடம்பும் பயமின்றே, கூற்றங்கொண் டோடும் பொழுது."*—நாலடியார்.

## அறன் வலி யுறுத்தல்.

**கருத்து.** *அறமே உயிர்க்கு உற்ற துணையாகலான், அதனை இன்று முதலே செய்க.* 6.

ஏ. *அறத்தா றிதுவென வேண்டா சிவிகை*
*பொறுத்தானோ டூர்ந்தா னிடை.*

**பொருள்.** *சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை— பல்லக்கைச் சுமந்தவனோடு (பல்லக்கிலிருந்து அதனைச்) செலுத்திய வன் (ஆகிய இருவர்) இடையில், அறத்து ஆறு இது என வேண்டா—அறத்தின் பயன் இன்னது என்று (சுட்டிச்) சொல்ல வேண்டா. (அது கண்கூடாகவே விளங்கும்.)*

**அகலம்.** *பயனை ஆறு என்றார்.*

**கருத்து.** *பல்லக்கில் செல்கின்றவனிடத்தில் அறத்தின் பயனை காட்சியிற் காணலாம்.* 7.

அ. *வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்*
*வாழ்நாள் வழியடைக்குங் கல்.*

**பொருள்.** *வீழ்நாள் படாமை நன்று ஆற்றின்—தவறும் நாள் உண்டாகாமல் (ஒருவன்) அறத்தைச் செய்யின், அஃது ஒருவன் வாழ் நாள் வழி அடைக்கும் கல்—அவ்வாறு அறத்தைச் செய்தல் ஒருவன் வாழும் நாளின் வழியை அடைக்கும் கல் லாம்.*

*அகலம். வீழ், வாழ் என்பன வினைத்தொகைகள், அகர அளபெடை இசை நிறைக்க வந்தது.*

**கருத்து.** *நாள்தோறும் செய்யப்படும் அறம் பிறப்பை ஒழிக் கும்.* 8.

௯. *அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்*
*புறத்த புகழு மில.*

**பொருள்.** அறத்தால் வருவதே இன்பம்—அறத்தின் (பயனாக) வருவதே இன்பம்; மற்று எல்லாம் புறத்த—மறத்தின் (பயனாக) வருவதெல்லாம் துன்பங்கள்; புகழும் இல—புகழும் இல்லாதவை.

**அகலம்.** அறம்—நல்வினை. மறம்—தீவினை. ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. மறத்தால் வருவன புகழு மில்லாதவை என்றமையால், அறத்தால் வருவன புகழு முள்ளவை என்று கொள்க. அறத்தால் வருவதென்று கூறிப் பின்னர் 'மற் றெல்லாம்' என்றமையால், 'மற் றெல்லாம்' என்பதற்கு 'மறத்தால் வருவதெல்லாம்' என்று பொருள் உரைக்கப்பட்டது. 'ஈனுலகத் தாயி னிசைபெறூஉ மஃதிறந், தேனுலகத் தாயி னினிதரூஉம்'' என்றார் பழமொழியார். ஈனுலகம்—இவ் வுலகம். ஏ னுலகம்—ஏனை யுலகம்.

**கருத்து.** அறத்தால் புகழும் இன்பமும் வரும்; மறத்தால் இகழும் துன்பமும் வரும். 9.

௰. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

**பொருள்.** ஒருவற்கு செய்யல் பாலது அறன்—ஒருவனுக்குச் செய்தற் பான்மையது நல்வினை; உய்யல் பாலது பழி—(செய்யாது) விடுதற் பான்மையது தீவினை.

**அகலம்.** செய்யல், உய்யல் என்பன செய்யுள் விகாரத்தால் யகர வொற்றுக் கெட்டு நின்றன. ஓரும் என்பன இரண்டும், ஏகாரமும் அசைகள். பழிக்கப்படும் மறத்தினைப் பழி யென்றார்.

**கருத்து.** மக்கள் செய்தற்பாலது அறம்: விடுதற்பாலது மறம்.

## இல்லற வியல்.

அஃதாவது, இல் வாழ்வார் செய்யவேண்டிய அறங்களின் இயல்பு. இல்—இல்லம்—வீடு. அறம்—தருமம். இயல்—இயல்பு.

# அறன் வலி யுறுத்தல்.

## உ-ம் அதிகாரம்—இல் வாழ்க்கை.

அஃதாவது, இல்லின்கண் வாழ்தல்.

க. இல்வாழ்வா னென்ப வியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னிற்குந் துணை.

**பொருள்.** இல்வாழ்வான்—இல்லின்கண்ணே வாழ்பவன், இயல்பு உடைய மூவர்க்கும்—(அவன்) இயல்பாக உடைய தாய், தந்தை, தாரம் என்னும் மூவர்க்கும், நல் ஆற்றின்—(அவருடைய) நல்ல நெறியின்கண்ணே, நிற்கும் துணை—(அவருக்கு உதவுதற்காக) நிற்கும் துணை (யாவன்).

**அகலம்.** இல் வாழ்வான் இயல்பாக வுடைய மூவர், அவனுடைய தாய், தந்தை, தாரம் ஆகிய மூவரே. அவருடைய நல்ல நெறியின்கண்ணே நிற்கும் துணை—அவர் ஒழுகவேண்டிய நல்ல நெறியின்கண்ணே அவர் ஒழுகுதற்கு உதவி புரியும் துணை. 'இயல்புடைய மூவர்க்கும்' என்பதற்கு 'அற இயல்பினை யுடையனை மூவர்க்கும்' என்றும், அம் மூவர் பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி என்றும் உரைப்பாரும் உளர். 'என்ப' அசை. தாமத்தர் பாடம் 'இல்வாழ்வா னென்ப'; 'நிற்குந் துணை'. மற்றை உரையாசிரியர் நால்வர் பாடம் 'இல்வாழ்வா னென்பான்'; 'நின்ற துணை'. இவர்கள் பாடத்தினும் தாமத்தர் பாடம் சிறந்த தாகலான், அதுவே ஆசிரியர் பாடமெனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** நன் னெறியில் ஒழுகும் தாய், தந்தை, தாரமாகிய மூவர்க்கும் இல்வாழ்வான் துணை. 11.

உ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

**பொருள்.** இல் வாழ்வான் என்பான்—இல் வாழ்வான் என்று சொல்லப்படுபவன், துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்—(இல் வாழ்க்கையைத்) துறந்தவர்க்கும் வறியவர்க்கும் (சுற்றம் இலராய்த் தம்பால் வந்து) இறந்தவர்க்கும், துணை—(உதவி புரியும்) துணை (யாவன்).

**அகலம்.** துவ்வாதார் என்பது 'துவ்வு' என்னும் பகுதியடியாகப் பிறந்த எதிர்மறை வினையாலணையும் பெயர். துவ்வு—ஐம்பொறி நுகர்ச்சி; அதற்கு உரிய பொருள்கள் இல்லாதாரைத் துவ்வாதார் என்றார். இறந்தார்க்குச் செய்யும் உதவியாவது, அவர் உடலைத் தீயி விடுதல் முதலியன.

**கருத்து.** மேற் கூறிய மூவரோடு இம் மூவர்க்கும் இல்வாழ்வான் துணை. 12.

௩. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க றானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

**பொருள்.** தென் புலத்தார்—மெய்யறிவுடையார், தெய்வம்—(தான் தொழும்) தெய்வம், விருந்து—விருந்தினர், ஒக்கல்—உறவினர், தான்—(இல் வாழ்வானாகிய) தான், ஐம்புலத்தார்—(இவ்) வைந்து இடத்தவரையும், ஓம்பல்—பேணுதல், தலை—(இல்லறங்களில்) தலையாய அறம்.

**அகலம்.** தென்—அழகிய. புலம்—அறிவு. அழகிய அறிவாவது, மெய்யறிவு. அதனால் 'தென் புலத்தார்' என்பதற்கு 'மெய்யறிவுடையார்' எனப் பொருள் உரைக்கப்பட்டது. விருந்து-புதுமை. அஃது ஈண்டுப் புதியராய் வந்த விருந்தினரைக் குறித்து நின்றது. என்று என்பது எண்ணிடைச் சொல். 'ஆங்கு' அசை. தலையாய அறத்தைத் 'தலை' என்றார். தாமத்தர், நச்சர் பாடம் 'ஐம்புலத்தா

ரோம்பல்'. மற்றை மூவர் பாடம் 'ஐம்புலத்தா றோம்பல்'. தென் புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான் (என்னும்) ஐம்புலம் என்பது திணை வழு. ஆசிரியர் இக் குறளின் முதலடியில் ஐம்புலத்தாரைக் கூறினரே யன்றி ஐம்புலத்தைக் கூறிற்றிலர். ஆகலான், அவர் பின்னர் ஐம்புலத்தாரை யோம்பல் என்று கூறுவரே யன்றி ஐம்புலத்தாற்றை யோம்பல் என்று கூறார். அன்றியும், 'ஆறு' என்பதற்கு நெறி என்பது தானே பொருள்? 'ஐந்திடத்து நெறி' என்பதற்குப் பொருள் 'ஐந்திடத்திற் சேர்க்கும் நெறி' அல்லது ஐந்திடத்திற் செல்லும் நெறி' என்பது தானே? அப் பொருள் ஈண்டு எவ்வாற்றானும் பொருத்த முடைய தன்று. இக் காரணங்க ளால் 'ஐம்புலத்தா றோம்பல்' என்பது ஒருவன் படிக்க மற்றொரு வன் கேட்டு ஏடு பெயர்த் தெழுதியதால் நேர்ந்த பிழை என்று கொள்க. பிற நூலாசிரியர்களும் 'ஐம்புலத்தா ரோம்பல்' என்றே கூறியிருக்கிறார்கள். தென் புலத்தார் என்பதற்குப் பிதிரர் என்று உரைப்பாரும் உளர்.

கருத்து. இக் குறளிற் கூறிய ஐந்து இடத்தவரையும் பேணு தல் இல்லறங்களில் தலையாய அறம். 13

ச. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

பொருள். வாழ்க்கை பழி அஞ்சி பாத்து ஊண் உடைத்தா யின்—இல் வாழ்க்கை மறத்தை விடுத்து (மேலே கூறிய பலர்க்கும்) பகுத்து (கொடுத்து) உண்ணுதலை உடைத்தாயின், வழி எஞ்சல் எஞ் ஞான்றும் இல்—(தனது) நெறியில் குறைபாடுறுதல் எந்நாளும் இல்லை.

அகலம். இல் வாழ்க்கை என்பது இல் வாழ்வார்மேல் நின் றது. இல் வாழ்க்கை நெறியில்—இல் லறம் புரிதலில். பொரு

ளின்மை, மக்களின்மை, முதலியவற்றால் இல்லறம் குறைபாடுறும். அக் குறைபாடு பழி யஞ்சிப் பாத் தூணுடையார்க்கு இல்லை என்றவாறு. தாமத்தர் பாடம் 'பாத்த லுடைத்தாயின்'. நச்சர் பாடம் 'உடைத்தாய வாழ்க்கை'.

கருத்து. பாவஞ் செய்யாது பலர்க்கும் பகுந்து கொடுத்து உண்ணும் இல் வாழ்க்கை எஞ்ஞான்றும் இனிது நடைபெறும். 14.

ரு. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

பொருள். இல் வாழ்க்கை அன்பும் அறனும் உடைத்தாயின்—இல் வாழ்க்கை அன்பும் அறமும் உடைத்தாயின், அது பண்பும் பயனும்—அவ் வுடைமை (இல் வாழ்க்கையின்) பண்பும் பயனு மாம்.

அகலம். ஈண்டும் இல் வாழ்க்கை என்றது இல் வாழ்வாரைக் குறித்து நின்றது. பண்பு—தன்மை. பயன்—ஊதியம். நச்சர் பாடம் 'உடைத்தாய வில்வாழ்க்கை'; பயனுந் தரும்'.

கருத்து. அன்புடைமையும் அறனுடைமையும் முறையே இல் வாழ்க்கையின் பண்பும் பயனும் ஆம். 15.

சா. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்?

பொருள். அறத்து ஆற்றின் இல் வாழ்க்கை ஆற்றின்—இல் வாழ்க்கை நெறியிலே இல் வாழ்க்கையை (ஒருவன்) நடாத்தின், புறத்து ஆற்றில் போய் பெறுவது எவன்—(அவன்) துறவு நெறியிற் சென்று (இல்வாழ்வான் பெறுவதினும் மிகுதியாகப்) பெறும் பேறு யாது? (ஒன்றும் இல்லை)

அகலம். "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை" என்றமையால், அறம் என்பதற்கு இல் வாழ்க்கை என்று பொருள் உரைக்கப் பட்டது. ஒகர அளபெடை இசை நிறைக்க வந்தது. தாமத்தர் பாடம் 'இல்வாழ்க்கை யாற்று'.

கருத்து. இல்வாழ்க்கை நெறியிலே இல் வாழ்க்கையை நடாத்துகிற இல்வாழ்வானும் துறவு நெறியிலே துறவை நடாத்துகிற துறவியும் பெறும் பேறு ஒன்றே. 16.

எ. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

பொருள். இயல்பினான் இல் வாழ்க்கை வாழ்பவன் என்பான்—(இல் வாழ்க்கைக்குரிய) இயல்போடு (கூடி) இல் வாழ்க்கையை வாழ்பவன் என்று சொல்லப்படுபவன், முயல்வாருள் எல்லாம் தலை—(வீட்டுப் பேற்றை அடைய) முயல்பவருளெல்லாம் முதன்மை யானவன்.

அகலம். ஆன் என்னும் உருபு ஓடு என்னும் பொருளில் வந்தது. தாமத்தர் பாடம் 'என்ப'. மற்றை நால்வர் பாடம் 'என்பான்'.

கருத்து. இயல்பினான் இல் வாழ்வான் வீட்டுப் பேற்றை அடைய முயல்வாருள் முதன்மையானவன். 17.

அ. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்றாரி னோன்மை யுடைத்து.

பொருள். ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல் வாழ்க்கை—(ஏனைய நிலையினரை அவரவர்) நெறியின்கண்ணே நடாத்துவித்து இல்லறத்தில் தவறாத இல் வாழ்க்கை, நோற்றாரின் நோன்மை உடைத்து—தவ மிழைத்தலைப் போல மேம்பாடு உடையது.

அகலம். நிலையை ஆசிரமம் எனவும், நிலையினனை ஆசிரமி எனவும் வடநூலார் கூறுவர். அவர் ஆசிரமங்களைப் பிரமச்சரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என நான்காகவும், அவ்வாசிரமிகளை முறையே பிரமச்சாரி, கிருகத்தன், வானப்பிரத்தன், சந்நியாசி எனவும் கூறுவர். பிரமச்சாரி—மாணவன். கிருகத்தன்—இல் வாழ்வான். வானப்பிரத்தன்—மனையாளோடாயினும், தனித்தாயினும் வனத்திற் சென்று தவம் புரிவோன். சந்நியாசி—துறவி. மாணவன் நிலையினை இல் வாழ்க்கையில் அடக்கியும், தவம் புரிவோன் நிலையினைத் துறவில் அடக்கியும் நிலையினை இல் வாழ்க்கை, துறவு என இரண்டாகவும், அந் நிலையினரை முறையே இல் வாழ்வான், துறவி எனவும் தமிழ் நூலார் கூறுவர். நடாத்துவித்தலாவது, அவருக்கு உண்டி முதலியன உதவி, அவர் தம் நெறியில் தளராது செல்லும்படி செய்தல். மணக்குடவர் பாடம் 'நோற்றலின்'. மற்றை உரையாசிரியர் நால்வர் பாடம் 'நோற்பாரின்'. 'நோற்றலின்' என்பது தொடை யின்பம் பயத்தலானும், இல் வாழ்க்கை என்பது போல ஒரு செயலைக் குறிக்கின்றமையானும், 'நோற்றலின்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப் பட்டது.

கருத்து. இல் வாழ்க்கை துறவினைப்போலவே மேம்பாடு உடையது. 18.

௯. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

பொருள். அறன் எனப்பட்டது இல் வாழ்க்கையே—அறம் என்று சிறப்பித்து (நூல்களால்) சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே; அஃதும் பிறன் பழிப்பது இல்லாயின் நன்று—துறவும் மற்றொருவன் பழிப்பதற்கு ஏதுவாகிய கூடா வொழுக்கம் இல்லையாயின் அறமாம்.

# இல் வாழ்க்கை.

அகலம். எனப் பட்டதே என்பதினின்று ஏகாரத்தைப் பிரித்து இல் வாழ்க்கை என்பதனோடு சேர்த்துப் பொருள் உரைக்கப் பட்டது. அது பிரிநிலைக்கண் வந்தது. ஈண்டுக் கூறப் படாது செய்மையின்கண் கூறப்படுதலானும், ஆண்டு "உலகம் பழித்த தொழித்து விடின்" என்று கூறப்படுதலானும், அஃது என்பதற்குத் துறவு என்று பொருள் உரைக்கப்பட்டது. உலகம் பழித்தது ஒழியாவிடின், துறவு அறம் எனப்படுதற் குரிய பெருமையுடைய தன்று என்றவாறு. "வீழ்நாள் படாஅமை" என்னும் தொடக்கத்துக் குறளில் அறத்தை நன்று எனக் கூறியிருத்தல் காண்க.

கருத்து. இல் வாழ்க்கையே அறம்; கூடா வொழுக்கம் இல்லையேல், துறவும் அறமாம். 19.

ய. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

பொருள். வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்—பூவுலகத்துள் (இல் வாழ்வான்) வாழவேண்டிய படி வாழ்பவன், வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்—வானுலகத்தில் வாழும் தேவருள் (ஒருவனாக) மதிக்கப்படுவான்.

அகலம். அவ்வாறு வாழ்பவன் இறந்த பின்னர் வானுலகத்தில் தேவனாய் வாழ்வன் என்று உரைப்பினும் அமையும், கொழுநனைப் பேணிய பெண்டிர் இறந்த பின்னர் வானுலகத்தில் பெருஞ் சிறப்புப் பெறுவர் என்று ஆசிரியர் அடுத்த அதிகாரத்திற் கூறுகின்றமையால்.

கருத்து. இல் வாழ்க்கையை ஒழுங்காக நடாத்துகின்றவன் தேவனாவான். 20.

## ௬-ம் அதிகாரம்—வாழ்க்கைத் துணை நலம்.

*அஃதாவது, இல் வாழ்க்கைத் துணையாகிய மனையாளது மாட்சி.*

க. *மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்*
*வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.*

**பொருள்.** *மனை தக்க மாண்பு உடையளாகி தன் கொண்டான் வள தக்காள்—இல் வாழ்க்கைக்குத் தக்க மாட்சிமை யுடையவளாகித் தன்னைக் கொண்ட (கண)வனது வரும்படிக்குத் தக்கபடி வாழ்கின்ற வள், வாழ்க்கை துணை—இல் வாழ்க்கைக்குத் துணை (யாவள்).*

**அகலம்.** *மனை, வளம் என்பன நான்காம் வேற்றுமைத் தொகைகள். மாட்சிமை—நற் குண நற் செய்கைகள். மனை என்பது ஆகுபெயர், மனை வாழ்க்கைக்கு ஆயினமையால்.* **தாமத்தர் பாடம்** *'வாட்கை'.*

**கருத்து.** *இல்வாழ்க்கைக்குத் தக்க மாண்பும் கணவன் வரும் படிக்குத் தக்க வாழ்வும் உடையவள் வாழ்க்கைத் துணை.* 21.

உ. *மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை*
*யெனைமாட்சித் தாயினு மில்.*

**பொருள்.** *மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின்—இல்வாழ்க் கைக்குரிய நற்குண நற் செய்கைகள் மனையாளிடத்து இல்லையாயின், வாழ்க்கை எனை மாட்சித்து ஆயினும் இல்—(அவ்) இல் வாழ்க்கை எவ்வளவு பெருமையை யுடையதாயினும் (அஃது) இன்றாம்.*

**கருத்து.** *இல் வாழ்க்கைக்குத் தக்க மாண்பு இல்லாளிடம் இல்லையேல், இல் வாழ்க்கை தனது பெருமையை இழந்து விடும்.* 22.

௩. *இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ*
*னில்லவண் மாணாக் கடை.*

**பொருள்.** இல்லவள் மாண்பானால் இல்லது என்—இல்லாள் நற் குண நற் செய்கைகளை உடையளானால் (அவள் கணவனுக்கு) இல்லாதது யாது? இல்லவள் மாணக்கடை உள்ளது என்—இல் லாள் தீக் குணம் தீச் செயல் உற்றவிடத்து (அவள் கணவனுக்கு) உள்ளது யாது?

அகலம். தருமர் பாடம் 'மாண்பாயின்'. மாண்பு என்னும் குணத்தை இல்லாள் என்னும் குணியின்மேல் ஏற்றி உபசரித்தார்.

**கருத்து.** இல்லாள் நற் குணம் நற் செய்கை உடையளாயின், கணவன் எல்லாச் செல்வங்களையும் பெறுவன்; தீக் குணம் தீச் செய்கை உடையளாயின், கணவன் எல்லாச் செல்வங்களையும் இழப்பன். 23.

ச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

**பொருள்.** கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்—கற்பு என்று சொல்லப்படும் உறுதிப்பாடு உண்டாகப் பெற்றால், பெண்ணின் பெறும் தக்க யா உள—பெண்ணைப்போல (ஒருவன்) பெறும் தகுதியான பேறுகள் யாவை யுள்ளன? (ஒன்றும் இல்லை)

அகலம். பெறப்படுவது பேறு. நச்சர் பாடம் 'பெண் பிறப்புத் தெய்வப் பிறப்பாகும்'. மற்றை நால்வர் பாடம் 'பெருந் தக்க'. 'தக்க' என்னும் சொற்குத் 'தகுதியான பேறுகள்' என் பது பொருள். 'பெருந்தக்க' என்பதற்குப் 'பெரிய தகுதியான பேறுகள்' என்பது பொருள். 'தகுதியான பேறுகள்' என்பதே போதும். 'பெரிய தகுதியான பேறுகள்' என்பது மிகை. அன்றியும், 'தகுதி' என்னும் சொல் அத்தகைய அடை மொழியை ஏற்காது. 'பெறுமவற்றுள்' எனவும், 'மக்கட் பேறு' எனவும் ஆசிரியர் பின்னர்க் கூறுதல் காண்க. இக் காரணங்களால், 'பெருந்தக்க'

என்பது ஒருவன் படித்து மற்றொருவன் கேட்டு எடு பெயர்த் தெழு தியதால் நேர்ந்த பிழை என்று கொள்க.

கருத்து. கற்புடைய இல்லாளைப் பெறுதலே ஒருவன் பெறுந் தகுதியான பேறு. 24.

௫. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

பொருள். தெய்வம் தொழாள் கொழுநன் தொழுது எழுவாள் —(துயில் நீங்குங்கால்) கடவுளை வணங்காளாய்க் கணவனை வணங் கிக் கொண்டே எழுபவள், பெய் என மழை பெய்யும்—பெய் என்று சொல்ல மழை பெய்யும்.

அகலம். துயில் நீங்குங்கால் கொழுநனைத் தொழுது கொண் டே எழுவாள் எனவே, துயில் கொள்ளுங்காலும் துயிலுங்காலும் கொழுநனைத் தொழுது கொண்டே துயில்வாள் என்பதும், தெய்வந் தொழுதல் மற்றைய காலத்திலே என்பதும் பெறப்பட்டன. தொழு தல்—முக் கரணங்களால் வணங்குதல். முக்கரணங்கள்—உளம், நா, உடம்பு. இவற்றை வட நூலார் முறையே மனம், வாக்கு, காயம் என்பர்.

கருத்து. கொழுநனை முதல் தெய்வமாகக் கொண்டவள் சொல்வன வெல்லாம் நிகழும். 25.

௬. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

பொருள். தன் காத்து தன் கொண்டான் பேணி தகை சான்ற சொல் காத்து சோர்வு இல்லாள்—தனது கற்பைக் காத்துத் தன்னைக் கொண்ட (கண) வனைப் பேணித் தகுதி நிறைந்த சொல்

லைக் காத்து (ஏனைய இல்லறங்களில்) மறதி இல்லாதவள், பெண்—(இல் வாழ்க்கைக் குரிய) பெண்.

அகலம். ‘தன்’ என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகை. அஃது ஆகு பெயராய்த் தனது கற்பை யுணர்த்தி நின்றது. தகுதி நிறைந்த சொல்லாவது, தன் ஊரில் வாழ்வார் தன்னைக் கற்புடைய வள் என்று சொல்லும் சொல். “நாலாறு” என்னும் தொடக்கத் துச் செய்யுளில் “வாழூரூர் தற்புகழு மாண்கற்பி னில்லாள்” என்றார் நாலடியார்.

கருத்து. தன் கணவனைப் பேணித் தன் கற்பைக் காத்துத் தான் கற்புடையாளென்று தன் ஊரார் சொல்லும்படியாக வாழ்ப வளே இல்லாள். 26.

எ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

பொருள். சிறை காக்கும் காப்பு எவன் செய்யும்—அரணால் காக்கும் காப்பு யாது (பயனைச்) செய்யும்? மகளிர் நிறை காக்கும் காப்பே தலை—பெண்கள் (தமது) கற்பால் (தம்மைக்) காக்கும் காப்பே தலையாய காப்பு.

அகலம். தலையாய காப்பைத் தலை என்றார். தலையாய காப்பு—சிறந்த காப்பு. நச்சர் பாடம் ‘கற்பெவன்’; ‘கற்பே தலை’. “உண்டியு” என்னும் தொடக்கத்துச் செய்யுளில் “பெண்டி ரைக் காப்ப திலமென்று, கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே” என்றார் வளையாபதியார். “நிறையான் மிகுகல்லா நேரிழை யாரைச், சிறையா னகப்படுத்த லாகா” என்றார் பழமொழியார்.

கருத்து. இல்லாளை வீட்டினுள் வைத்துப் பூட்டி அவள் கற்பைக் காக்கலா மென்று நினைத்தல் மடமை. 27.

அ. பெற்றாற்பே ணிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

பொருள். பெற்றான் பேணின்—(தம்மை வாழ்க்கைத் துணையாகப்) பெற்றவனை (மேற் கூறியபடி) பேணின், பெண்டிர் புத்தேளிர் வாழும் உலகு பெருஞ் சிறப்பு பெறுவர்—மகளிர் தேவர் வாழும் (வான்) உலகின்கண் (தேவர்களால்) பெரிய சீரினைப் பெறுவர்.

அகலம். பெண்டிர் என்பது உயர்வுப் பன்மைப் பெயர். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'பெற்றாற் பெறின்'. பெற்றான் பெறின் என்பதற்குப் 'பெற்றானைப் பெறின்' என்பதே பொருள். அப் பொருள் ஈண்டு ஒரு பொருத்தமும் இன்று. 'பெற்றாற் பெறின்' என்பதற்குத் 'தம்மை எய்திய கணவனை வழிபடுதல் பெறுவராயின்' எனப் பொருளுரைத்து, 'வழிபடுதல்' என்பது சொல்லெச்சம் எனக் கூறிப் போந்தார்கள் முன்னுரையாசிரியர்கள். எச்சமாகக் கொள்ளும் சொல் செய்யுளுக்கு இன்றியமையாத தாயும், ஒன்றேயாயும் இருத்தல் வேண்டும். உதாரணமாகப் "பிறவிப் பெருங் கடல்" என்னும் தொடக்கத்துக் குறளில் 'இறைவனடி சேர்ந்தார்' என்பது சொல்லெச்ச மாதல் காண்க. இக் குறளில் 'இறைவனடி சேர்ந்தார்' என்பதைச் சொல்லெச்சமாகக் கொள்ளாமலும், அது தவிர வேறு ஒரு சொற் றொடரையாவது, சொல்லையாவது சொல்லெச்சமாகக் கொள்ளவும் முடியாது. 'பெற்றாற் பெறின்' என்னும் பாடத்தைக் கொள்ளின், எச்சமாக ஒரு சொல்லைக் கொள்ளுதல் இன்றி யமையாதது தான். ஆனால், 'தெய்வமாக' அல்லது 'ஆசிரியனாக' என்பது போன்ற வேறு ஒரு சொல்லை எச்சமாகக் கொள்ளினும் அமையும். ஆகலான், 'வழிபடுதல்' என்பது சொல்லெச்சம் என்று கூறுதல் பொருந்தாது. பழைய ஓலை ஏடுகளில் உயிர் மெய்

ஏகாரமும் உயிர்மெய் ஏகாரமும் உயிர்மெய் எகாரமாகவே எழுதப் பட்டிருத்தலையும், ணிகரம் சுழிகள் இல்லாமல் றிகரம்போல எழுதப் பட்டிருத்தலையும் நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆகலான், ஏடு பெயர்த் தெழுதியோன் "பெற்றாற்பே ணிற்பெறுவர்" என்பதி லுள்ள பேகாரத்தைப் பெகரமாகவும் ணிகரத்தை றிகரமாகவும் படித்தெழுதியதால் "பெற்றாற் பெறின்" என்ற பிழைப் பாடம் ஏற்பட்ட தெனக் கொள்க. 'பேகாரம்' புதியது புகுதல்.

கருத்து. கணவனை மேற்சொல்லிய வாறு பேணியவள் தேவ ருலகத்தில் பெருஞ் சிறப்புப் பெறுவள். 28.

கூ. புகழ்புரிந்த வில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏேறுபோற் பீடு நடை.

பொருள். புகழ் புரிந்த இல் இல்லோர்க்கு—(கற்புடையாள் என்னும்) புகழைச் செய்த இல்லாள் இல்லாத (கண) வர்க்கு, இகழ் வார்முன் ஏறுபோல் பீடு நடை இல்லை—பகைவர்முன் சிங்க வேறு போல (நடக்கும்) பெருமித நடை இல்லை.

அகலம். இல்லோர் என்பது செய்யுள் விகாரத்தால் லகர வொற்றுக் கெட்டு நின்றது. ஏறு—ஆண். முந்திய உரையாசிரி யர்கள் பாடம் 'புகழ்புரிந் தில்'. 'புகழ்புரிந்த வில்' என்பது போலப் 'புகழ்புரிந் தில்' என்பது தொடை யின்பம் பயவாமை யானும், அப் பாடத்தைக் கொள்ளுங்கால் அகரம் செய்யுள் விகாரத் தால் தொக்கதாகக் கொள்ளவேண்டிய திருத்தலானும், 'புகழ்புரி ந்த வில்' என்பதே ஆசிரியர் பாட மெனவும், 'புகழ்புரிந் தில் என்பது ஒருவன் படித்து மற்றொருவன் கேட்டு ஏடு பெயர்த் தெழுதி யதால் நேர்ந்த பிழையெனவும் கொள்க.

கருத்து. புகழ் புரிந்த இல்லாள் இல்லாதார் பகைவர்முன் பெருமையோடு நடக்க நாணுவர். 29.

ம. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

பொருள். மனை மாட்சி மங்கலம்—மனையாளது நற் குண நற் செயல்கள் மங்கல நாணும்; நல் மக்கட் பேறு அதன் நன் கலம்—நல்ல மக்களைப் பெறுதல் அம் மங்கல நாணின் நன் கலமாம்.

அகலம். மங்கல நாண் பெண்ணின் கழுத்திற்கு அழகு செய்வதுபோல நன் மக்கட் பேறு மனையாளுக்கு அழகு செய்யும் என்றவாறு. மங்கலம், மனை என்பன ஆகு பெயர்கள், அவை முறையே மங்கல நாணுக்கும் மனையாளுக்கும் ஆயினமையால். நன் கலம்—தாலி. மங்கல நாண்—தாலிக் கொடி. 'என்ப', 'மற்று' அசைகள். "மனைக்கு விளக்க மடவார்; மடவார், தமக்குத் தகைசால் புதல்வர்" என்றனர் நான்மணிக் கடிகையார். பேறு என்பது விகுதி புணர்ந்து கெட்டு முதனிலை திரிந்த தொழிற்பெயர். அஃதாவது, 'பெறு' என்னும் முதனிலையோடு 'தல்' என்னும் விகுதி புணர்ந்து கெட்டுப் 'பெறு' என்னும் முதனிலை பேறு' எனத் திரிந்து நின்றது.

கருத்து. மனையாளது நற்குண நற் செயல்கள் குடும்பத்திற்கு அழகு; நல்ல மக்களைப் பெறுதல் மனையாளுக்கு அழகு. 30.

## 4-ம் அதிகாரம்—மக்கட் பேறு.

அஃதாவது, மக்களைப் பெறுதல்.

க. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவுடைய
மக்கட்பே றல்ல பிற.

பொருள். பெறும் அவற்றுள் அறிவுடைய மக்கள் பேறு அல்ல பிற—(மாந்தர்) பெறும் பேறுகளுள் அறிவுடைய மக்கட்

பேறு அல்லாத பிறவற்றை, யாம் அறிவது இல்லை—யாம் (ஒரு பேருக) மதிப்பது இல்லை.

அகலம். பெறப்படுவதனைப் பேறு என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'அறிவறிந்த'. 'அறிவறிந்த மக்கட் பேறு' என்பது 'கற்று அறிய வேண்டுவனவற்றை அறிந்த மக்களைப் பெறுதல்' எனப் பொருத்த மற்ற பொருளைத் தருதலானும், அறிவுடைய மக்கட் பேறு' என்பது 'இயற்கை அறிவை யுடைய மக்களைப் பெறுதல்' எனப் பொருத்த முள்ள பொருளைத் தருதலானும், 'அறிவுடைய' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க. "அறிவறிந்த என்றதனால், மக்கள் என்பது பெண் ஒழித்து நின்றது" என உரைப்பாரும் உளர். அப் பாடத்தைக் கொள்ளினும் அவ்வுரை பொருந்தாது, கல்வியறிவு இரு பாலார்க்கும் பொதுவாகலான்.

கருத்து. மாந்தர் பெறும் பேறுகளுள் அறிவுடைய மக்கட் பேறே சிறந்தது. 31.

உ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

பொருள். பழி பிறங்கா பண்புடை மக்கள் பெறின்—பாவம் சேராத நற்குண முடைய மக்களைப் பெற்றால், எழு பிறப்பும் தீயவை தீண்டா—(மேல்வரும்) எழு (வகைப்) பிறப்பின்கண்ணும் (பெற்றோரைத்) துன்பங்கள் சேரா-

அகலம். எழு வகைப் பிறப்பாவன:—தாவரம், ஊர்வன, நீர் வாழ்வன, பறப்பன, (நாற் காலால்) நடப்பன, மானுடர், தேவர். எழு பிறப்பு என்பதற்கு வரும் பிறப்பின்கண் என்று உரைப்பினும் அமையும். மக்களது நற் குண நற் செய்கைகளால் பெற்றோரைத் துன்பங்கள் சேரா என்பது ஒவ்வொருவரும் செய்த வினைகளின்

பயன்கள் அவரவரையே (சேரும் என்னும் வட மொழி தென் மொழி நூல்களின் வழக்கினை மறுக்காதோ எனின், மறுக்காது. என்னை? பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெறுதற்குப் பெற்றோர் பல நல் வினைகளைப் புரிந்திருத்தல் வேண்டும். அந் நல் வினைகளின் பயன்கள் இரண்டு. ஒன்று பழி பிறங்காப் பண்புடை மக்களைப் பெறுதல்; மற்றொன்று எழு பிறப்புந் தீயவை தீண்டாமை. முந் தியதன் உண்மை பிந்தியதன் உண்மையை அறிவிக்கும் அறிகுறி. அவ் விரண்டும் பெற்றோரது முன் வினைப் பயன்களே யாம். தருமர் பாடம் 'மக்கட் பெறல்'.

கருத்து. பாவம் புரியாத மக்களைப் பெற்றோர் மேல் வரும் எழு பிறப்புக்களிலும் எவ்வகைத் துன்பமும் உறார். 32.

ரு. தம்பொரு ளென்பவே தம்மக்க ளப்பொரு
ளந்தம் வினையான் வரும்.

பொருள். தம் மக்கள் தம் பொருள்—தமது மக்கள் தமது பொருள்: அப் பொருள் தந்தம் வினையால் வரும்—அம் மக்களாகிய பொருள் தந்தம் வினைகளால் உண்டாம்.

அகலம். 'என்ப', 'ஏ' அசைகள். நச்சர் பாடம் 'என்பர்'; 'அவர்ப்பேறு'. மற்றை நால்வர் பாடம் 'என்ப'; 'அவர் பொருள்'. 'அவர்பொருள் தந்தம் வினையான் வரும்' என்பது பொருத்தமான பொருள் ஒன்றையும் தாராமையான் 'அப் பொருள்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க. அப்பொருள் என்பது நான்காஞ் சீர் ஆயக்கால், மூன்றாம் சீர் 'தம்மக்கள்' எனவும், இரண்டாஞ் சீர் 'என்பவே' எனவும் இருத்தல் வேண்டும். அப் பொழுது மூன்றாஞ் சீர் மோனை யின்பம் பயத்தலையும் நோக்குக.

கருத்து. மக்கள் உளராதலும் இலராதலும், நல்ல மக்கள்

உளராதலும் தீய மக்கள் உளராதலும் அவரவர் வினைகளின் பயன்களேயாம். 33.

௪. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

பொருள். தம் மக்கள் சிறுகை அளாவிய கூழ்—தமது மக்கள் சிறிய கைகளால் துழாவிய கூழ், அமிழ்தினும் ஆற்ற இனிது—அமிழ்தினும் மிக இனிது.

அகலம். சிறு கை என்றமையால் குழந்தைகளெனவும், தவழ்தல் முதலியவற்றால் அவர் கை மண், தூசு, முதலியன படிந்திருக்குமெனவும் கொள்க. அக் கூழ் அமிழ்தினும் இனிதாதல் தம்முடைய சொந்த மக்களது சிறுகை அளாவிய போழ்தே என்பதை உணர்த்த வேண்டித் 'தம்மக்கள்' என்றார். கை என்பது சாதி ஒருமைப் பெயர். தருமர் பாடம் 'அமுதினும்'. ஏகாரம் தேற்றம்.

கருத்து. தம் மக்கள் தம்முடன் உண்ணுதல் தமக்கு இன்பம் பயக்கும். 34.

௫. மக்கள்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

பொருள். மக்கள் மெய் தீண்டல் உடற்கு இன்பம்—மக்களது உடலைத் தொடுதல் (பெற்றோரது) உடம்பிற்கு இன்பம் (பயக்கும்); அவர் சொல் கேட்டல் செவிக்கு இன்பம்—அம் மக்களது சொல்லைக் கேட்டல் (பெற்றோரது) செவிக்கு இன்பம் (பயக்கும்).

அகலம். 'மற்று' அசை. தாமத்தர் பாடம் 'மற்றவர்தம்'.

கருத்து. தம் மக்களது மெய்யைத் தீண்டலும் சொல்லைக் கேட்டலும் தமக்கு இன்பம் பயக்கும். 35.

கூ. குழலினிது யாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

**பொருள்.** தம் மக்கள் மழலை சொல் கேளாதவரே—தமது மக்களுடைய மழலைச் சொல்லைக் கேளாதவரே, குழல் இனிது யாழ் இனிது என்ப—குழலிசை இனிது யாழிசை இனிது என்று சொல்வர்.

**அகலம்.** குழல், யாழ் என்பன ஆகுபெயர்கள், அவற்றின் இசைகளுக்கு ஆயினமையால். தருமர், தாமத்தர் பாடம் 'என்பர் தம்'. மற்றை மூவர் பாடம் 'என்பதம்'. எகாரம் கெட்டது.

**கருத்து.** தம் மக்கள் மழலைச் சொல் குழலினும் யாழினும் இனிது. 36.

எ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

**பொருள்.** தந்தை மகற்கு ஆற்றும் நன்றி—தந்தை மகனுக்குச் செய்யும் உதவி, அவையத்து முந்தி இருப்ப செயல்—(சான்றோர்) அவையின்கண் முன்னே இருக்கும்படியாகச் செய்தல்.

**அகலம்.** முன்னே இருக்கும்படியாகச் செய்தலாவது, முன்னே இருத்தற்குரிய கல்வி, ஒழுக்கம், முதலியவற்றை அளித்தல். முன்னே—முதன்மையான இடத்தில். 'நன்றி' என்ற சொல்லை வழங்கினமையால், அவ்வாறு கல்வி முதலியவற்றைத் தந்தை அளித்தமையை மகன் செய்ந்நன்றியாகக் கருதல் வேண்டும் என்பது பெற்றாம்.

**கருத்து.** மக்களுக்குக் கல்வியும் ஒழுக்கமும் கற்பித்தல் பெற்றோர் கடமை. 37

அ. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

**பொருள்.** *தம்மின் தம் மக்கள் அறிவுடைமை—தம்மினும் தமது மக்கள் அறிவுடையரா யிருத்தல், மா நிலத்து மன் உயிர்க்கு எல்லாம் இனிது—பெரிய நிலவுலகின்கண் நிலை பேறுடைய மனித உயிர்களுக்கெல்லாம் இன்பம் பயக்கும்.*

**அகலம்.** *உயிரின் அழியாத் தன்மையைக் குறிக்க வேண்டி மன்னுயிர் என்றார். தம் மக்கள் என்றமையால், உயிர் என்பதற்கு மனித உயிர் என்று பொருள் உரைக்கப்பட்டது. இன்பம் பயப்ப தனை இனிது என்றார். இன்பம் உறுவது உயிரே யாகலின், உயிர்க் கெல்லாம் என்றார்.* தாமத்தர் *பாடம் 'தன்னிற்றன் மக்கள்'. தம் மக்கள் அறிவுடைமை தமக்குப் பயக்கும் இன்பத்தினும் மா நிலத்து மன்னுயிர்க் கெல்லாம் அதிக இன்பம் பயக்கும் என்று உரைப்பாரும் உளர். உலக அனுபவத்திற்கு மாறுபடுகின்றமையால், அவ்வுரை போலியுரை யென்று தள்ளுக.*

**கருத்து.** *தம்மினும் தம் மக்கள் அறிவுடையரா யிருத்தல் பெற்றோர்க்கு இன்பம் பயக்கும்.* 38.

> *அ. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்*
> *சான்றோ னெனக்கேட்ட தாய்.*

**பொருள்.** *தன் மகனை சான்றோன் என கேட்ட தாய்—தனது மகனை (க்கல்வி அறிவு ஒழுக்கங்களால்) நிறைந்தோன் என (ப்பிறர் சொல்ல)க் கேட்ட தாய், ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும்—(அவனைப்) பெற்ற காலையில் அடைந்த களிப்பினும் பெரிது களிப்பள்.*

**அகலம்.** *'இன்' என்றமையால், தன் மகனைச் சான்றோனாகத் தான் கண்டபொழுது உளதாம் உவப்புத் தான் அவனை ஈன்றபொழுது அடைந்த, உவப்பினும் பெரிதென்பதும், பெரிது என்றமையால்*

அதனினும் தன் மகனைச் சான்றோன் எனப் பிறர் கூறக் கேட்ட பொழுது உளதாம் உவப்புப் பெரிதென்பதும் பெறப் பட்டன. உவகை—உள்ளக் களிப்பு. "பெண் ணியல்பால் தானாக அறியா மையின் கேட்ட தா யெனக் கூறினார்" என்று உரைப்பாரும் உளர். பெண்ணின் இயல்பு தானாக அறியாமை என்பது அறிவிலார் கூற் றெண அவ் வுரையை மறுக்க.

கருத்து. தன் மகன் கல்வியும், அறிவும், ஒழுக்கமும் நிறைந்த வன் என்று பிறர் பேசக் கேட்ட தாய் பேருவகை எய்துவள். 39.

ம. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

பொருள். மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி—மகன் தந்தைக் குச் செய்யும் உதவி, இவன் தந்தை என் நோற்றான் என்னும் சொல் (ஆக்குதல்)—'(இவனைப் பெறுவதற்கு) இவன் தந்தை யாது தவம் புரிந்தான்' என்று (பிறர்) சொல்லும் சொல்லை உண்டாக்குதல்.

அகலம். என் என்பது என் நோன்பு எனப் பொருள் பட நின்றது. நோன்பு—தவம். ஆக்குதல் என்பது சொல்லெச்சம். 'கொல்' 'அசை'. 'சொல்' இரண்டாம் வேற்றுமைத் தொகை. 'இவன் தந்தை என்னோற்றான்', என்பது பிறாது கூற்று. உதவி என்றமையால், அச் சொல்லைப் பிறர் சொல்லுமாறு மகன் கல்வி, அறிவு, ஒழுக்கங்களோடு நடத்தலாகிய உதவியைத் தந்தை வேண்டி நிற்கின்றா னென்பதும், அதனால் அவ் உதவியைத் தந்தைக்கு மகன் தவறாது செய்யக் கடன் பட்டுள்ளான் என்பதும் பெறப்பட்டன. என்னும் என்பது னகர வொற்றுக் கெட்டு நின்றது.

கருத்து. கல்வி, அறிவு, ஒழுக்கம் உடையரா யிருத்தல் மக்கள் கடமை. 40.

## 8-ம் அதி:—அன்புடைமை.

அஃதாவது, அன்பை உடையரா யிருத்தல்.

க. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

**பொருள்.** அடைக்கும் தாழ் அன்பிற்கும் உண்டோ—(அகத்தி னின்று வெளிப்படாமல்) அடைத்துவைக்கும் (வலிய) கதவு அன் பிற்கும் உண்டோ? ஆர்வலர் புன்கண் ஈர் பூசல் தரும்—அன்பு செய்யப்பட்டாரது துன்பம் (அக் கதவை) பிளக்கும் தாக்குதலை உண்டாக்கும்.

அகலம். அன்பு செய்யப்பட்டாரது துன்பம் அன்புடை யார் அகத்தினின்று வெளிப்படாமல் அன்பை அடைத்துவைத் திருக்கும் கதவினை உடைத்து அன்பை வெளிப்படுத்திவிடும் என்ற வாறு. தாழ் என்பது ஆகுபெயர், அதனை யுடைய கதவிற்கு ஆயி னமையால். ஈர் என்பது வினைத்தொகை. ஆர்வம்—அன்பு செய்யப் படுந் தன்மை. பூசல்—பொருதல்—தாக்குதல். ஆர்வம் என்னும் பண்புப்பெயர் ஈறும் ஈற்றயலும் கெட்டு, வலர் என்பதனோடு புணர் ந்து ஆர்வலர் என்றாயிற்று. வலர்—வல்லவர். 'ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும்' என்பதற்குத் "தம்மால் அன்பு செய்யப்பட்டவரது துன்பங் கண்டுழி" என்ற சொற்களை வருவித்து, "அன்புடையார் (கண் பொழிகின்ற) புல்லிய கண்ணீரே (உள் நின்ற அன்பினை எல் லாரும் அறியத்) தூற்றும்" என்று உரைப்பாரும் உளர். அவர் 'ஆர்வலர்' என்பதற்கு 'அன்பு செய்யப்பட்டார்' என்பதே பொருள் என்பதை அறியார். அன்றியும், 'துன்பம்' என்னும் பொருள் தரும் 'புன்கண்' என்ற சொல்லைப் புன், கண் எனப் பிரித்தும், அடைக்கும் தாழ் உண்டோ? என்ற வினாவிற்கு விடையில்லாதும் பொருள் உரைத்து இடர்ப்பட்டனர்.

கருத்து. அன்புசெய்யப்பட்டார் துன்ப முறுதலைக் காணப் பொறார் அன்புடையார். 41

உ. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

பொருள். அன்பு இல்லார் எல்லாம் தமக்கே உரியர்—அன்பு இல்லாதவர் எல்லாப் பொருள்களையும் தமக்கே உரியர்; அன்பு உடையார் என்பும் பிறர்க்கே உரியர்—அன்பினை உடையவர் (தம்) உடம்பையும் பிறர்க்கே உரியர்.

அகலம். இல்லார் என்பதன் லகர வொற்றும், ஏகார மிரண்டும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. என்பு என்பது ஆகு பெயர், அதனை உடைய உடம்பிற்கு ஆயினமையால். பிறர்க்கே—பிறர்க்காகவே. உரியர்—உடையர். நச்சர் பாடம் 'உரிய பிறர்க்கு

கருத்து. அன்புடையார் தமது உடைமைகளை யெல்லாம் துன்புற்ற பிறர்க்கு வழங்குவர். 42.

ங. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

பொருள். உயிர்க்கு ஆர் என்போடு இயைந்த தொடர்பு—உயிர்க்கு அருமையான (மக்கள்) உடம்போடு கூடிய சேர்க்கை, அன்போடு இயைந்த வழக்கு என்ப (ஆன்றோர்)—(முற் பிறப்பில்) அன்புடன் பொருந்திய பயன் என்பர் ஆன்றோர்.

அகலம். 'வழக்கு என்பதும் 'அன்பு' என்பதும் ஆகு பெயர்கள். 'ஆர்' என்பதனை 'உயிர்' என்பதினின்று பிரித்து 'என்பு' என்பதனுடன் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. அருமையான உடம்பு—மக்கள் உடம்பு. 'ஆன்றோர்' என்பது சொல்லெச்சம். 'இயைந்த' என்பதற்குப் 'பொருந்துவதற்கு வந்த'

என்று உரைப்பார் சிலர். அச் சொற்கு அப் பொருள் இல்லை யென்று அவ் வுரையை மறுக்க. முற் பிறப்பில் கன்று முதலியவை மீது அன்பு செலுத்திய பசு முதலியன இப் பிறப்பில் மக்களாய்ப் பிறந் துள்ளன என்று அறிக.

கருத்து. அன்பு செய்ததின் பயனே மக்கட் பிறப்பு. 43.

ச. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

பொருள். அன்பு ஆர்வம் உடைமை ஈனும்—அன்பு (பிறரால்) அன்பு செய்யப்படுந் தன்மை உடையனுதலை நல்கும்; அது நண்பு என்னும் நாடா(த) துணை ஈனும்—அவ் வுடைமை நட்பு என்று சொல்லப்படும் தேடுதற்கு அரிய துணையினை நல்கும்.

அகலம். பிறரால் அன்பு செய்யப்படுதலே ஆர்வம் என்பதற்கு இக் குறள் ஒரு சான்று. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'நாடாச் சிறப்பு'. நட்பினைத் துணை யென்றே ஆசிரியர் பிறுண்டும் கூறு கின்றமையானும், சிறப்பு என்பது ஈண்டுப் பொருத்த மற்ற சொல் லாகலானும், 'துணை' என்பதே ஆசிரியர் பாடம் என்று கொள்ளப் பட்டது. நாடாத—தேட முடியாத—தேடுதற்கு அரிய.

கருத்து. அன்புடைமை யாவரையும் நட்பின ராக்கும். 44.

ரு. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

பொருள். வையகத்து இன்புற்றார் எய்தும் சிறப்பு—உலகத் தில் இன்பத்தை அடைந்தவர் பெறும் வீடு, அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப (ஆன்றோர்)—அன்பைப் பொருந்தி நின்ற பயன் என்று சொல்வர் ஆன்றோர்.

அகலம். இன்புற்ருர் என்றமையால், அவர் அறமும் பொரு ளும் முன்னரே பெற்றமை தெற்றென விளங்கும். வழக்கு என்பது ஆகுபெயர், அதன் பயனுக்கு ஆயினமையால். தருமர் பாடம் 'அன் புற் றமைந்த'; 'ஆருயிர்க் கின்புற்ருர்'. நச்சர் பாடம் 'ஆருயி ரென்புற்ரு ரெய்தும் பிறப்பு'.

கருத்து. அன்புடைமை அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கையும் அளிக்கும். 45.

சு. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

பொருள். அறியார் அன்பு அறத்திற்கே சார்பு என்ப—(அன் பின் தன்மையை) அறியாதார் அன்பு அறத்தைச் செய்தற்கே துணை என்று சொல்லுவர்; அஃதே மறத்திற்கும் துணை—அன்பே மறத் தைச் செய்தற்கும் துணை.

அகலம். ஓர் உயிர் அல்லது ஒரு பொருள் மீது கொண்டுள்ள அன்பே பிறி தோ ருயிர்க்குத் தீங்கிழைத்தற்குக் காரண மாதலால், அன்பே மறத்திற்கும் துணை என்ருர். தருமர் பாடம் 'சால் பென்ப'.

கருத்து. மாந்தர் செயல்கட் கெல்லாம் அன்பே காரணம். 46.

எ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.

பொருள். என்பு இல் அதனை வெயில் போல அன்பு இல் அதனை அறம் காயும்—எலும்பு இல்லாத பிராணியை வெயில் (காய்தல்)போல அன்பு இல்லாத உயிரை அறக்கடவுள் வருத்தும்.

அகலம். இல்லதனை என்னும் இரண்டும் செய்யுள் விகாரத் தால் லகர வொற்றுக் கெட்டு நின்றன. ஏகாரம் அசை.

## அன்புடைமை.

**கருத்து.** *அன்பு இல்லாதார் துன்பம் உறுவர்.* 47.

அ. *அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்*
*வற்றன் மரந்தளிர்த் தற்று.*

**பொருள்.** *அன்பு அகத்து இல்லா உயிர் வாழ்க்கை—அன்பு உள்ளத்தின்கண் இல்லாத உயிர் (செழித்து) வாழுதல், வன்பால்கண் வற்றல் மறம் தளிர்த்து அற்று—பாலை நிலத்தின்கண் வற்றலான மரம் தளிர்த்தாற் போலும்.*

*அகலம்.* *வற்றல் மரம் பாலை நிலத்தின்கண் தளிர்க்காதது போல, அன்பில்லாத மாந்தர் செல்வம் முதலியன பெற்றுச் செழித்து வாழார் என்ற வாறு. வன்பால்—பாலை நிலம். வற்ற லான—வற்று தலை யடைந்த. தளிர்த்தற்று என்பது வினையெச்சத் தொகை. அது தளிர்த்தால் அற்று என விரியும்.* மணக்குடவர், தாமத்தர், நச்சர் *பாடம் 'வன்பார்க்கண்'.*

**கருத்து.** *அன்பு இல்லாதார் செழிப்புற்று வாழார்.* 48.

கூ. *புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை*
*யகத்துறுப் பன்பி லவர்க்கு.*

**பொருள்.** *யாக்கை அக உறுப்பு அன்பு இல்லவர்க்கு—உடம்பின் உள்ளுறுப்பாகிய அன்பு இல்லாதவர்க்கு, புற உறுப்பு எல்லாம் எவன் செய்யும்—(உடம்பின்) வெளி யுறுப்பு(க்களாகிய கண், காது, கை, கால், முதலியன) எல்லாம் யாது பயனைச் செய்யும்? (ஒரு பயனையும் செய்யா.)*

*அகலம்.* *புற வுறுப்புக்களாகிய கண், கை, காது, கால், முதலியவை இருந்தும் அக வுறுப்பாகிய அன்பு இல்லாதவழி அறம் நிகழாது என்ற வாறு. 'அகம்', 'புறம்' அத்துச் சாரியை பெற்று நின்றன.*

**கருத்து.** அன்பு இல்லாதார் அறம் புரியார். 49.

௰. அன்பின் வழிய துயிர்நிலை யஃதில
தென்புதோல் போர்த்த வுடம்பு.

**பொருள்.** அன்பின் வழியது உயிர்நிலை—அன்பைப்பற்றி நிற்கும் உடம்பு உயிர்நிலை; அஃது இல்லது என்பு தோல் போர்த்த உடம்பு—அன்பு இல்லாதது எலும்புகளைத் தோல் போர்த்த (உயிரில்லாத) உடம்பு.

**அகலம்.** தாமத்தர் பாடம் 'அன்பின் வழிய துயிரின னஃதிலான்'. நச்சர் பாடம் 'அஃதிலார்'. மற்றை மூவர் பாடம் 'அஃதிலார்க்கு'. அன்புள்ளது இன்னதெனக் கூறியவர் அன்பில்லாதது இன்னதெனக் கூறுதலே இயற்கையும் முறையு மாகலானும், அஃதிலார்க் கென்பு தோல் போர்த்த வுடம்பு' என்பதன் பொருளினும் 'அஃதில தென்பு தோல் போர்த்த வுடம்பு' என்பது மிகப் பொருத்தமான பொருளைத் தருதலானும், 'அஃதிலது' என்பதே ஆசிரியர் பாட மெனவும், 'அஃதிலார்க்கு' என்பது பிழைபட்ட பாட மெனவும் கொள்க.

**கருத்து.** அன்பு இல்லாதார் பிணத்தை ஒப்பர். 50.

## கூம்-அதி :— விருந்தோம்பல்.

அஃதாவது, விருந்தினரைப் பேணுதல். விருந்து—புதுமை. விருந்தினர்—புதியராய் வந்தோர்.

க. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

**பொருள்.** இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம்—(ஒருவன்) இல்லின்கண் தங்கி (பொருளைக்) காத்து வாழ்த லெல்லாம், விருந்து

ஓம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு—விருந்தினரைப் பேணி (அவருக்கு) உதவி செய்தற் பொருட்டு.

**அகலம்.** எல்லாம் என்பது ஈண்டு எஞ்சாப் பொருட்டாயதோர் உரிச்சொல். பொருள்+து=பொருட்டு. பொருட்டு—பொருளை யுடையது.'விருந்து' ஆகுபெயர், அதனை உடையார்க்கு ஆயினமையால்.

**கருத்து.** இல்லின்கண் வாழ்வது விருந்தினரைப் பேணுதற்கே. 51.

> உ. விருந்து புறத்தாகத் தானுண்டல் சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

**பொருள்.** சாவா மருந்து எனினும்—சாவாமைக்குக் காரணமாகிய அமிழ்தம் எனினும், விருந்து புறத்து ஆக தான் (அகத்து) உண்டல்—விருந்தினர் புறத்திருக்கத் தான் அகத்து உண்டல், வேண்டல் பாற்று அன்று—விரும்பற் பான்மைத்து அன்று.

**அகலம்.** சாவாமைக்குக் காரணமாகிய மருந்தினைச் சாவா மருந் தென்றார். அகத்து என்பது அவாய்நிலையான் வந்தது. பால்+து=பாற்று. பான்மைத்து—தன்மைத்து. தருமர் பாடம் 'புறத்த தாய்'. மற்றை நால்வர் பாடம் புறத்ததா'. மணக்குடவர் பாடம் 'வேண்டும்பாற் றன்று'. தாமத்தர் பாடம் 'தானுண்ணல்'. 'புறத்ததா' என்னும் பாடத்தைக் கொள்ளுங்கால், புறத்ததாக என்பது செய்யுள் விகாரத்தால் ஈறு கெட்டு நின்றதெனக் கொள்ள வேண்டிய திருத்தலானும், 'புறத்தது' என்னும் வினையாலணையும் பெயர் ஈண்டு வேண்டாததும் பொருத்தமற்றது மானபடியாலும், 'விருந்து புறத்திருக்க' என்னும் நேரிய பொருளைத் தரும் 'புறத்தாக' என்பதே ஆசிரியர் பாடமெனவும், 'புறத்ததா' என்பது ஏடு பெயர்த் தெழுதியோனால் நேர்ந்த பிழை எனவும் கொள்க.

**கருத்து.** விருந்தினரை வீட்டின் வெளியே வைத்துவிட்டுத் தாம் வீட்டினுள் உண்டல் விரும்பத் தக்க தன்று. 52.

ரு. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

**பொருள்.** வைகலும் வரு விருந்து ஓம்புவான் வாழ்க்கை—நாள் தோறும் (தன்பால்) வரும் விருந்தினரைப் பேணுவானது இல் வாழ்க்கை, பருவந்து பாழ்படுதல் இன்று—வறுமையுற்று அழிவுறு தல் இல்லை.

**அகலம்.** 'வரு' என்பது வினைத்தொகை. பேணுதல்—உபசரித்தல். பருவரல்—துன்புறல். அஃது ஈண்டு ஆகுபெயர், அதற்கு ஏதுவாகிய வறுமைக்கு ஆயினமையால். அது தைவரல் என்பது போல ஒரு சொல் நீர்மைத்து.

**கருத்து.** விருந்தினரைப் பேணுவான் வறுமை யுறுதல் இல்லை. 53.

ச. அகமலர்ந்து செய்யா ளுறையு முகமலர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

**பொருள்.** நல் விருந்து முகம் மலர்ந்து ஓம்புவான் இல்—நல்ல விருந்தினரை (த்தன்) முகம் மகிழ்ந்து பேணுவானது இல்லின் கண்ணே, செய்யாள் அகம் மலர்ந்து உறையும்—திருமகள் உள்ளம் மகிழ்ந்து வாழ்வள்.

**அகலம்.** மேற் குறளில் விருந்தோம்புவானது இல்வாழ்க்கை வறுமையுறல் இல்லை யென்றதற்கு ஈண்டுக் காரணம் கூறிய வாறு. தருமர் பாடம் 'அகமலர்ந்து'; 'முகமலர்ந்து'. மற்றை நால்வர் பாடம் 'அகனமர்ந்து'; 'முகனமர்ந்து'. அகனமர்ந்து, முகனமர்ந்து என்பன முறையே அகம் பொருந்தி, முகம் பொருந்தி என்னும்

பொருள் தருகின்றன. அக மலர்ந்து, முக மலர்ந்து என்பன முறையே அக மகிழ்ந்து, முக மகிழ்ந்து என்னும் பொருள் தருகின்றன. பிந்திய பொருள்கள் மிகப் பொருத்தமும் தெளிவு முடையனவாகலான், அப் பொருள்களைத் தரும் தருமர் பாடங்களே ஆசிரியர் பாடங்கள் எனக் கொள்ளப்பட்டன.

**கருத்து.** நல்ல விருந்தினரைப் பேணுவான் இல்லின்கண் திருமகள் உறைவள். 54.

> ரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
> மிச்சின் மிசைவான் புலம்.

**பொருள்.** விருந்து ஓம்பி மிச்சில் மிசைவான் புலம்—(விருந்தினருக்கு உணவு அளித்து) விருந்தினரைப் பேணி எஞ்சியதை உண்பானது நிலத்தின்கண், வித்து இடலும் வேண்டுமோ—விதை விதைத்தலும் வேண்டுமோ? (வேண்டா.)

**அகலம்.** அவர் நிலத்தில் வித்து இடாமலே இறைவன் விளை பொருள்களை அருள்வன் என்றவாறு. வித்திடல் முதலியன செய்யாமலே நெல் வரப் பெற்றமையை ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்திலும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனையிலும் காண்க. "விச்சதன்றியே விளைவு செய்குவாய்" என்ற திருவாசகத்தையும் நோக்குக. வித்தும் என்பதன் உம்மையைப் பிரித்து இடல் என்பதனோடு சேர்த்தும், கொல்லோ என்பதின் ஓகாரத்தைப் பிரித்து வேண்டும் என்பதனொடு சேர்த்தும் பொருள்கள் உரைக்கப்பட்டன. எஞ்சியது—மீதமானது.

**கருத்து.** விருந்தினரை ஓம்புவானது நிலங்களைத் தேவர் விளைப்பர். 55.

> சு. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
> னல்விருந்து வானத் தவர்க்கு.

**பொருள்.** செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான் —(தன்பால் நின்று) செல்லும் விருந்தினரைப் பேணி (த்தன்பால்) வரும் விருந்தினரை (எதிர்) நோக்கி இருப்பவன், வானத்து அவர்க்கு நல்விருந்து—வானத்தின்கண் வாழும் தேவருக்கு நல்ல விருந்தினன் (ஆவன்).

**அகலம்.** செல், வரு என்பன வினைத்தொகைகள். அவை மேற் கூறிய பொருளன வாதலைத் "தருசொல் வருசொல் லாயிரு கிளவியுந், தன்மை முன்னிலை யாயி ரிடத்த", "ஏனை யிரண்டு மேனை யிடத்த" என்னும் தொல்காப்பியச் சூத்திரங்களால் அறிக. இச் சூத்திரங்களை அறியாதார் 'செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்' என்பதற்குத் 'தன்கட் சென்ற விருந்தைப் பேணிப் பின் செல்லக் கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனோடு உண்ண இருப்பான்' என்று உரைப்பார்.

**கருத்து.** விருந் தோம்புவான் தேவர்களால் சிறப்புச் செய்யப் பெறுவான். 56.

எ. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

**பொருள்.** வேள்வி பயன் இனை துணைத்து என்பது ஒன்று இல்லை—(விருந்தோம்பலாகிய) உதவியின் பயன் இவ் வளவினது என்று (சுட்டிச்) சொல்வதற்கு ஓர் அளவு இல்லை; விருந்தின் துணையே துணை—(அதற்கு) விருந்தினரது (பெருமையின்) அளவே அளவு.

**அகலம்.** துணையே என்பதன் ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது.

**கருத்து.** விருந்தோம்பலின் பயன் விருந்தினரின் நற் குண நற் செய்கைகளுக்குத் தக்க அளவு பெருமை யுடையது. 57.

# விருந்தோம்பல்.

அ. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

பொருள். விருந்து ஓம்பி வேள்வி தலைப் படாதார்—விருந்தினரைப் பேணி (விருந்தோம்பலாகிய மானுட) யாகத்தின் பயனை அடையாதவர், பரிந்து ஓம்பி பற்று அற்றேம் என்பர்—(பிற்காலத்தே) 'வருந்திக் காத்துப் பொருளை இழந்தேம்' என்று இரங்குவர்.

அகலம். 'பரிந்தோம்பிப் பற்றற்றேம்' என்பது விருந்தோம்பாது செல்வத்தைக் காத்து வைத்துப் பின் இழந்தாரது கூற்று. பற்று, வேள்வி என்பன ஆகுபெயர்கள், அவை முறையே பற்றுதற் கேதுவாகிய செல்வத்திற்கும், வேள்வியின் பயனுக்கும் ஆயினமையால். மணக்குடவர் பாடம் 'பற்றற்றோம்',

கருத்து. விருந்தினரை ஓம்பாதார் தமது செல்வத்தை இழந்து வருந்துவர். 58.

க. உடைமையு ளுண்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

பொருள். உடைமையுள் உண்மை விருந்து ஓம்பல்—உடைமையுள் உண்மையான உடைமை விருந்தினரைப் பேணுதல்; ஓம்பா(த) மடமை மடவார்கண் உண்டு—(விருந்தினரைப்) பேணாத மடமை அறிவில்லாரிடத்து உண்டு.

அகலம். உண்மையான உடைமையை உண்மை என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'உடைமையு ளின்மை'. 'ஒளியுள் இருள்' என்பது எவ்வளவு முரண்பாடோ, அவ்வளவு முரண்பாடே 'உடைமையுள் இன்மை' என்பது. உடைமை என்பது செல்வத்தையும் அறிவையும் அடக்கி நிற்கும் ஆற்றல் உடையது. விருந்தோம்ப லோம்பா மடமை என்பதை ஒரே தொடராகக் கொள்

ளுங்கால், 'ஓம்பல்' என்னும் சொல் மிகை யாகின்றது. எனெனில், ஆசிரியரது கருத்தை விளக்குவதற்கு 'விருந்தோம்பா மடமை' என்பதே போதியது. அன்றியும், 'உடைமையு ளின்மை' என்பதை ஆசிரியர் பாட மெனக் கொள்ளின், 'உண்டு' என்னும் பயனிலைச் சொற்கு 'அது' என்னும் சொல்லைத் தோன்று எழுவாயாக வருவித்துக் கொள்ள வேண்டிய தாகவும் இருக்கிறது. இக் காரணங்களால் 'உடைமையு ளின்மை' என்பது ஏடு பெயர்த்தெழுதியோன் ளுகரத்தை ளிகரமாகவும்,ணகர வொற்றை னகரவொற்றுகவும் படித்தெழுதியதால் நேர்ந்த பிழை எனக் கொள்க. பின்னர் "இன்மையு ளின்மை விருந்தொரால்" என்று ஆசிரியர் கூறியிருத்தலையும் காண்க.

**கருத்து.** விருந்தினரை ஓம்பாதார் அறி வில்லார். 59.

ம். மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

**பொருள்.** மோப்ப அனிச்சம் குழையும்—(தொட்டு) முகர அனிச்சப் பூ வாடும்; முகம் திரிந்து நோக்க விருந்து குழையும்—(இல் வாழ்வான்) முகம் வேறு பட்டு நோக்க விருந்தினன் வாடுவன்.

**அகலம்.** 'அனிச்சம்' ஆகுபெயர், அதன் மலருக்கு ஆயினமையால். முகம் வேறு படுதலாவது, முகம் கடுத்தல்.

"ஒப்புடன் முகமலர்ந்தே யுபசரித் துண்மை பேசி
யுப்பிலாக் கூழிட்டாலு முண்பதே யமிர்த மாகு
முப்பழ மொடுபாலன்ன முகங்கடுத் திடுவா ராயின்
கப்பிய பசியும்போகிக் கடும்பசி யாகுந் தானே.—

விவேகசிந்தாமணி.

**கருத்து.** மலர்ந்த முகத்தோடு விருந்தினரை உபசரிக்க வேண்டும். 60.

## எ-ம்—அதி:—இனியவை கூறல்.

அஃதாவது, இன்பம் பயக்கும் சொற்களைச் சொல்லுதல்.

க. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

**பொருள்.** இன்சொல் ஈரம் அளை படிறு இல ஆம்—இனிய சொற்கள் அன்போடு கலந்து குற்றம் இல்லாதன வாம்; செம்பொருள் கண்டார் வாய் சொல்—(அன்றியும்,) மெய்ப்பொருள் உணர்ந்தார் வாயினின்று வரும் சொற்க ளாம்.

**அகலம்.** இன் சொல் என்பது 'இலவாம் வாய்ச் சொல்' என்னும் இரண்டு பயனிலைகளைக் கொண்டு நின்றது. **தருமர்** பாடம் இன்சொலா லீரம்'; காண்பார்வாய்ச் சொல்'. மற்றை நால்வர் பாடம் இன் சொலா லீரம்'. இகர அளபெடை இசை நிறைக்க வந்தது. ஆல் என்பது அசை. "மாசற்ற நெஞ்சுடையார் வன்சொ லினிது". **நன்னெறி.**

**கருத்து.** அன்போடு கலந்து குற்றமற்றதும், மெய்ப் பொரு ளுணர்ந்தார் வாயினின்று வருவதும் இனிய சொல்லாம். 61.

உ. அகமலர்ந் தீதலி னன்றே முகமலர்ந்
தின்சொல னாகப் பெறின்.

**பொருள்.** முகம் மலர்ந்து இன் சொல்லன் ஆக பெறின்—முகம் மலர்ந்து இனிய சொல்லை யுடையன் ஆகப் பெற்றால், அகம் மலர்ந்து ஈதலின் நன்று—(அஃது) உள்ளம் உவந்து ஈதலைப்போல (ஓர்) அறமாம்.

**அகலம்.** சொல்லன் என்பது செய்யுள் விகாரத்தால் லகர வொற்றுக் கெட்டு நின்றது. முந்திய உரையாசிரியர்கள் பாடம் அகனமர்ந்து', 'முகனமர்ந்து'. அப் பாடங்களைக் கொள்ளாத

தற் குரிய காரணங்களை "அகமலர்ந்து செய்யாள்" என்னும் தொடக்கத்துக் குறளின் அகலத்திற் காண்க. 'ஏகாரம்' அசை.

**கருத்து.** இன்சொல் கூறல் ஈகையைப்போல ஓர் அறமாம். 62.

௩. முகத்தான் மலர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

**பொருள்.** முகம் மலர்ந்து இனிது நோக்கி அகம் ஆம் இன் சொல்லினது அறம்—முகம் மகிழ்ந்து இனிமையாகப் பார்த்து அகத்தின்கண் (உவகையால்) உண்டாகும் இனிய சொல்லையுடைய செயல் அறம்.

**அகலம்.** அகத்து இரண்டும் ஆனும் சாரியைகள். 'ஆல்' அசை. அது' என்னும் சுட்டுப் பெயர் அறத்திற்கு முதலாகிய செயலைச் சுட்டி நின்றது. ஏகாரம் அசை. இன் சொல்லின் என்பது செய்யுள் விகாரத்தால் லகர வொற்றுக் கெட்டு நின்றது. முந்திய உரையா சிரியர்கள் பாடம் 'முகத்தா னமர்ந்து'. மணக்குடவர், பரிமே லழகர் பாடம் 'இன்சொ லினதே'. தாமத்தர் பாடம் 'இன்சொ லஃதே'. தருமர், நச்சர் பாடம் இன்சொலி னஃதே'.

**கருத்து.** மலர்ந்த முகத்தோடும் இனிய சொல்லோடும் உவந்த உளத்தோடும் செய்யப்படும் வினைகள் அறமாம். 63.

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

**பொருள்.** யார் மாட்டும் இன்பு உறும் இன் சொல் அவர்க்கு— யாரிடத்தும் இன்பத்தை மிகுவிக்கும் இனிய சொல்லை யுடையார்க்கு, துன்பு உறும் துவ்வாமை இல் ஆகும்—துன்பத்தை மிகுவிக்கும் வறுமை இல்லை யாகும்.

**அகலம்.** உகர அளபெடைகள் இன்னிசைக்கண் வந்தன.

**கருத்து.** இன்சொல் உடையார் வறுமை யுறுதல் இல்லை. 64.

௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

**பொருள்.** பணிவு உடையன் இன் சொல்லன் ஆதல் ஒருவற்கு அணி—பணிதல் உடையனும் இனிய சொல் உடையனும் ஆதல் ஒருவனுக்கு ஆபரணம்; பிற அல்ல—(செல்வம் முதலிய) மற்றையன ஆபரணங்கள் அல்ல.

**அகலம்.** 'மற்று' அசை. எண் ணும்மையும், லகர வொற் றும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. **தருமர்** பாடம் 'அணி நல்ல'.

**கருத்து.** இன்சொல் லுடைமையும் பணி வுடைமையும் ஒருவ னுக்கு நல்ல அணிக ளாம். 65.

௬. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

**பொருள்.** நல்லவை நாடி இனிய சொல்லின்—நல்ல பொருள் களை ஆராய்ந்து இனிய சொற்களால் சொல்லின், அல்லவை தேய அறம் பெருகும்—மறங்கள் குறைய அறங்கள் வளரும்.

**அகலம்.** இனிய என்பது மூன்றும் வேற்றுமைத்தொகை. சொல்லின் என்பது செய்யுள் விகாரத்தால், லகர வொற்றுக் கெட்டு நின்றது. **தாமத்தர்** பாடம் 'அறம் வளரும்'. **நச்சர்** பாடம் 'அல் லவை தேயும்'.

**கருத்து.** நல்ல பொருள்களை இனிய சொற்களாற் சொல்லின், பாவம் குறைந்து புண்ணியம் வளரும். 66.

௭. நயனீன்று நன்று பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

**பொருள்.** பயன் ஈன்று பண்பின் தலைப் பிரியா (த) சொல்—(கருதிய) பயனை அளித்து இனிமையை விட்டு நீங்காத சொற்கள். நயன் ஈன்று நன்று பயக்கும்—இன்பத்தை அளித்து அறத்தை நல்கும்.

**அகலம்.** தலைப்பிரிதல்—விட்டு நீங்குதல். 'பண்பின்' வேற்றுமை மயக்கம். அஃது ஈண்டு இனிமைப் பொருளில்வந்தது. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'நன்றி'. **தருமர்** பாடம் 'தலைப் பிரியார் **தாமத்தர்** பாடம் 'நன்மை பயக்கும் பயனீந்து'. நன்றி என்பது பெரும்பாலும் செய்ந்நன்றி என்னும் பொருளிலே வருதலானும், அப் பொருள் ஈண்டுப் பொருத்தமற்ற தாகலானும், நன்றி என்பது ஏடு பெயர்த் தெழுதியோனால் நேர்ந்த பிழை எனக் கொள்க.

**கருத்து.** இன்சொல் இன்பத்தையும் அறத்தையும் விளைக்கும்.

அ. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

**பொருள்.** சிறுமையின் நீங்கிய இன் சொல்—பெருமிதத்தி னின்று நீங்கிய இனிய சொல், இம்மையும் மறுமையும் இன்பம் தரும்—இப் பிறப்பிலும் மறு பிறப்பிலும் இன்பத்தை நல்கும்.

**அகலம்.** "சிறுமை பெருமித மூர்ந்து விடல்".—**திருக்குறள்.** பெருமிதம்—செருக்கு. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'சிறுமை யுள்'.'இன்' உருபு ஐந்தாம் வேற்றுமையின் நீக்கப் பொருளை உணர்த்துதலின், சிறுமையின் என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** செருக்கு இல்லாத இனிய சொல் இம்மை யின்பமும் மறுமை யின்பமும் தரும். 68.

க. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

# செய்ந்நன்றி யறிதல்.

பொருள். இன் சொல் இனிது ஈன்றல் காண்பான்—(பிறர் தன்னை நோக்கிச் சொல்லும்)இனிய சொல் (தனக்கு) இன்பம் அளித்தலை அறிபவன், வன் சொல் வழங்குவது எவன்—(பிறர்பால்) கடிய சொல்லைச் சொல்லுதல் யாது காரணம்?

அகலம். 'கொல்', 'ஓ' அசைகள். சொல் வழங்குவது என்றமையால், வழங்குவது என்பதற்குச் சொல்லுதல் என்று பொருள் உரைக்கப்பட்டது.

கருத்து. பிறனுடைய இன் சொல் தனக்கு இன்பம் தருதலை அறிபவன் பிறனிடத்து வன் சொல் வழங்குவதற்குக் காரணம் மடமையே. 69.

ய. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

பொருள். இனிய உளவாக இன்னாத கூறல்—இன்பம் தரும் சொற்கள் உள்ளனவாகத் துன்பம் தரும் சொற்களைச் சொல்லுதல், கனி இருப்ப காய் கவர்ந்து அற்று—கனிகள் இருக்கக் காய்களைப் பறித்தாற் போலும்.

அகலம். கவர்ந்தற்று என்பது வினையெச்சத் தொகை. அது கவர்ந்தா லற்று என விரியும். தருமர் பாடம் 'கனியிருக்க'.

கருத்து. இனிய சொற்கள் இருக்க அவற்றை விட்டு இன்னாத சொற்களைக் கூறல் மடமை. 70.

## ௨-ம் அதி :— செய்ந்நன்றி யறிதல்.

அஃதாவது, (தமக்குப் பிறர்) செய்த நன்றியை உணர்தல்.

க. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.

**பொருள்.** செய்யாமல் செய்த உதவிக்கு—(பிறர்க்குத் தாம் ஓர் உதவியும்) செய்யாமலிருக்க (த் தமக்குப் பிறர்) செய்த உதவிக்கு, வையகமும் வானகமும் ஆற்றல் அரிது—பூவுலகமும் வானுலகமும் சமமாதல் இன்று.

**கருத்து.** தமது உதவியை முன் பெறுதார் தமக்குச் செய்த உதவி ஒப் பற்றது. 71.

உ. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது.

**பொருள்.** காலத்தினால் செய்த நன்றி—(ஒருவன் இடருற்ற) காலத்தில் (பிறன்) செய்த உதவி, சிறிது எனினும் ஞாலத்தின் மாண பெரிது—(செயலால்) சிறியது என்றாலும் (பயனால்) உலகத்தினும் மிகப் பெரியது.

**அகலம்.** காலத்தினால் என்பது வேற்றுமை மயக்கம், மூன்றாம் வேற்றுமை யுருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தமையால். என்னினும் என்பது னகர வொற்றுக் கெட்டு நின்றது.

**கருத்து.** சமயத்திற் செய்த உதவியும் ஒப் பற்றது. 72.

௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது.

**பொருள்.** பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்—(தாம் செய்யும் உதவிக்கு யாது) பயன் (தமக்கு வரும் என்று) ஆராயாதவராய் (ப்பிறர் தனக்குச்) செய்த உதவியின் நன்மையைச் சீர் தூக்கிப் பார்ப்பின், நன்மை கடலின் பெரிது—அந் நன்மை கடலினும் பெரிது.

**அகலம்.** தாமத்தர் பாடம் 'பயன் தூக்கா செய்த

**கருத்து.** கைம்மாறு கருதாது செய்த உதவியும் ஒப்பற்றது. 73.

## செய்ந்நன்றி யறிதல்.

*தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்*
*கொள்வர் பயன்றெரி வார்.*

**பொருள்.** *தினை துணை நன்றி செய்யினும்—(தமக்குப் பிறர்) சிறிய அளவு உதவி செய்யினும், பயன் தெரிவார் பனை துணையா(க) கொள்வர்—(உதவியின்) பயனை அறிபவர் (அதனைப்)பெரிய அளவினதாகக் கருதுவர்.*

**அகலம்.** *தினைத்துணை, பனைத்துணை என்பன மிகமிகச் சிறிய அளவையும் மிகமிகப் பெரிய அளவையும் குறிப்பதற்காகத் தமிழ் நூலார் வழங்கும் சொற்கள். செய்யின் என்பதும், துணையாக என்பதும் செய்யுள் விகாரத்தால் முறையே யகர வொற்றும், ககரமும் கெட்டு நின்றன. "தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற், பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்" என்றார்* **நாலடியார்.**

**கருத்து.** *செய்த உதவி அளவால் சிறிய தாயினும் பயனால் பெரிய தாம்.* 74.

௫. *உதவி வரைத்தன் றுதவி யுதவி*
*செயப்பட்டார் சால்பின் வரைத்து.*

**பொருள்.** *உதவி உதவி வரைத்து அன்று—உதவியின் பயன் (செய்யப்பட்ட) உதவியின் அளவினது அன்று; உதவி செய்யப் பட்டார் சால்பின் வரைத்து—அவ் வுதவி செய்யப் பட்டாரது பெருமையின் அளவிற்று.*

**அகலம்.** *செய்ய ப்பட்டார் என்பது செய்யுள் விகாரத்தால் யகர வொற்றுக் கெட்டு நின்றது. பெருமையாவது கல்வி, அறிவு, ஒழுக்கங்களின் மேம்பாடு. இரண்டாம் 'உதவி' ஆகுபெயர், உதவியின் பயனுக்கு ஆயினமையால். 'உறக்குந் துணையதோ ராலம் வித் தீண்டி, யிறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந், தான்*

சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்.''—நாலடியார்.

**கருத்து.** உதவியின் பயன் உதவி பெற்றாரது பெருமையின் அளவின தாம். 75.

௬. மறவற்க மாசறுத்தார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

**பொருள்.** மாசு அறுத்தார் கேண்மை மறவற்க—(தன்பா லிருந்த) குற்றத்தை ஒழித்தவரது நட்பினை (ஒருவன் எஞ்ஞான்றும்) மறவா திருக்கக் கடவன்; துன்பத்துள் துப்பு ஆயார் நட்பு துறவற்க—(தான்) துன்பமுற்ற காலத்தில் (தனக்குத்) துணையாயினாரது நட்பினை (ஒருவன் எஞ்ஞான்றும்) விடாதிருக்கக் கடவன்.

**அகலம்.** முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'மாசற்றார் கேண்மை'. மாசற்றார் கேண்மைக்கும் செய்ந்நன்றி யறிதலுக்கும் யாதாமோர் இயைபும் இன்மையால், அப் பாடம் பிழைபட்ட பாடம் என்றும், மாசறுத்தலே செய்ந்நன்றி யெல்லாவற்றுள்ளும் சிறந்த தாகலான், 'மாசறுத்தார்' என்பதே ஆசிரியர் பாடமென்றும் கொள்க. அன்றியும், மாசற்றார் கேண்மையைக் கொள்ளல் வேண்டு மென்பதை "மருவுக மாசற்றார் கேண்மை'' என்று ஆசிரியர் பின்னர்க் கூறுதலால், அதனை ஈண்டுங் கூறார்.

**கருத்து.** தமது குற்றங்களை நீக்கிய ஆசிரியர் நட்பையும், தமது துன்ப காலத்தில் உதவியோர் நட்பையும் விடற்க. 76.

௭. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கள்
விழுமந் துடைத்தவர் நட்பு.

**பொருள்.** தங்கள் விழுமம் துடைத்தவர் நட்பு—தம்முடைய துன்பத்தை நீக்கியவரது நட்பினை, எழும் அ எழு பிறப்பும் (அறி

வுடையோர்) உள்ளுவர்—(மேல்) உண்டாகும் எழு பிறப்பின்கண்ணும் அறிவுடையோர் நினைப்பர்.

அகலம். தாமத்தர் பாடம் 'எழுமை யெழுபிறப்பும்'; 'தங்கண்'. மற்றை நால்வர் பாடம் 'எழுமை யெழுபிறப்பும்'; 'தங்கண்'. கண் என்னும் ஏழாம் வேற்றுமை யுருபு ஈண்டுப் பொருத்தமற்ற தாகலான், தங்கள் என்பதன் ளகர வொற்றை ணகர வொற்றாக ஏடு பெயர்த் தெழுதியோன் படித் தெழுதியதால் தங்கண் என்னும் பிழைப் பாடம் ஏற்பட்ட தெனக் கொள்க. முந்திய பிறப்புக்களில் நடந்தவற்றையும் ஒருவன் அறியக் கூடு மென்பது இக் குறளால் விளங்குகின்றது. எழு வகைப் பிறப்புக்கள் முன்னர்க் கூறப் பட்டுள்ளன.

கருத்து. தனது துன்பத்தை நீக்கியவர் நட்பை ஒரு காலத்தும் மறக்க லாகாது. 77.

அ. நன்று மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

பொருள். நன்று மறப்பது நன்று அன்று—(ஒருவர் செய்த) நன்மையை மறத்தல் அறம் அன்று; நன்று அல்லது அன்றே மறப்பது நன்று—(ஒருவர் செய்த) தீமையை அப்பொழுதே மறத்தல் அறம்.

அகலம். அன்று என்பது ஆகுபெயர், அப் பொழுதிற்கு ஆயினமையால். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'நன்றி மறப்பது'. நான்காம் சீரில் நன்றல்லது எனக் கூறி யிருத்தலான், முதற் சீரில் நன்று என்றே ஆசிரியர் கூறியிருப்பர்.

கருத்து. தனக்கு ஒருவர் செய்த நன்மையை மறப்பது மறமாம்; தீமையை மறப்பது அறமாம். 78.

கூ. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

**பொருள்.** கொன்று அன்ன இன்னா செய்யினும்—(தமக்கு ஒருவர்) கொன்றாற் போன்ற துன்பங்களைச் செய்யினும், அவர் செய்த நன்று ஒன்று உள்ள (அவை) கெடும்—(தமக்கு) அவர் செய்த நன்மை யொன்றை நினைக்க அவை கெடும்.

**அகலம்.** கொன்றன்ன என்பது வினையெச்சத் தொகை. அது கொன்றால் அன்ன என விரியும். அவை என்பது அவாய் நிலையான் வந்து, இன்னாத வற்றைச் சுட்டி நின்றது. செய்யினும் என்பது செய்யுள் விகாரத்தால் யகர வொற்றுக் கெட்டு நின்றது. "ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த, பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்" என்றார் நாலடியார். தருமர், தாமத்தர் பாடம் 'அவர்செய்த தொன்றுநன் றுள்ளப் படும்'.

**கருத்து.** தனக்கு நன்மை செய்தவர் பின்னர்த் தீமை செய்யின் அதனை மறந்திடுக. 79.

ம. எந்நன்று கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

**பொருள்.** எ நன்று கொன்றார்க்கும் உய்வு உண்டாம்—எத் தகைய (சிறந்த) அறத்தைக் கெடுத்தவனுக்கும் உய்வாயில் உண்டாம்; செய் நன்றி கொன்ற மகற்கு உய்வு இல்லை—(தனக்குப் பிறர்) செய்த நன்றியை மறந்த மனிதனுக்கு உய்வாயில் இல்லை.

**அகலம்.** உய்வாயில்—கழுவாய். உய்வாயில் என்பதனை வட நூலார் பிராயச்சித்தம் என்பர். முந்திய உரையாசிரியர்கள் பாடம் எந்நன்றி'. நன்று என்னும் பாடத்தைக் கொண்டதற் குரிய காரணத்தை "நயனீன்று" என்னும் தொடக்கத்துக் குறளின் அகலத்தில் காண்க.

**கருத்து.** செய்ந் நன்றியை மறந்தோன் அப் பாவப் பயனை அனுபவித்தே தீர வேண்டும். 80.

# நடுவு நிலைமை.

## ௧௨-ம் அதி :—நடுவு நிலைமை.

அது 'நடுவு', 'நிலைமை' என்னும் இரண்டு சொற்களால் ஆய தொடர். 'நடுவு' என்பது 'நடு' எனவும், 'நிலைமை' என்பது 'நிலை' எனவும் வழங்கும். நடுவு நிலைமை என்பது நடுவாக நிற்றல் எனப் பொருள்படும். அஃதாவது, உற்றார், நண்பர், நொதுமலர், பகைவர் என்னும் நான்கு திறத்தினர்களுக்கும் நடுவாக நின்று, அவர்களில் எத்திறத்தார் பக்கமும் கோடாமல், அவ்வத்திறத்தார்க்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்தொழுகுதல். ஆசிரியர் உற்றார்க்குச் செய்யவேண்டிய கடமைகளை "வாழ்க்கைத் துணை நலம்", "மக்கட்பேறு", "அன்புடைமை" என்னும் மூன்று அதிகாரங்களாலும், நொதுமலர்க்குச் செய்யவேண்டிய கடமைகளை "விருந்தோம்பல்", "இனியவை கூறல்", "செய்ந்நன்றி யறிதல்" என்னும் மூன்று அதிகாரங்களாலும் கூறினர். நண்பருக்குச் செய்ய வேண்டிய கடமைகளைப் பொருட்பாலின்கண் "நட்பு", "நட்பா ராய்தல்", "பழைமை" என்னும் மூன்று அதிகாரங்களாலும், பகைவர்க்குச் செய்யவேண்டிய கடமைகளைப் "பகை மாட்சி", "பகைத் திறந் தெரிதல்", "உட் பகை" என்னும் மூன்று அதிகாரங்களா லும் கூறுவர். இந் நான்கு திறத்தினர்களுக்கும் பொதுவாகச் செய்ய வேண்டிய கடமைகளை "நடுவு நிலைமை", "அடக்க முடைமை", ஒழுக்க முடைமை" என்னும் மூன்று அதிகாரங்களாலும் கூறுகின்றனர்.

௧. தகுதி யெனவொன்று நன்றே பகுதியார்
பாற்பட் டொழுகப் பெறின்.

**பொருள்.** தகுதி என ஒன்று நன்றே—நடுவு நிலைமை என்று சொல்லப்பட்ட (ஒழுக்கம்) ஒன்று அறனே யாம்; பகுதியார்பால்

பட்டு ஒழுக பெறின்—(மேற்கூறிய நான்கு) திறத்தினர்கண்ணும் பொருந்தி ஒழுகப் பெற்றால்.

அகலம். அவ்வப் பகுதியினர்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்த வழி நடுவு நிலைமை அறமாம் என்ற வாறு. தகுதியானது பகுதியின்பாற் பட்டொழுகப் பெறின் அறமாம் என்றமையால், "தகுதி என ஒன்று' என்பதற்கு 'நடுவு நிலைமை என்று சொல்லப்பட்ட ஒழுக்கம் ஒன்று' என்று பொருள் உரைக்கப்பட்டது. நொதுமலர்—அயலார். நான்கு பகுதியார் இன்னின்னோர் என்று மேற் கூறப்பட்டுள்ளனர். அப் பகுதியார்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளை அவர்களைப்பற்றிக் கூறும் அதிகாரங்களில் கண்டு கொள்க. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'பகுதியாற்'. 'பகுதி' என்பதற்கு ஈண்டுப் பொருத்தமான பொருள் காணுதல் அரிதாகலானும், வேண்டுவதாய 'ஆர்' விகுதியை விடுத்து, வேண்டாததாய 'ஆல்' உருபை அல்லது அசையை ஆசிரியர் சேர்க்க மாட்டா ராகலானும் 'பகுதியாற்' என்பது ஏடு பெயர்த் தெழுதியோரால் நேர்ந்த பிழை யெனக் கொள்க.

கருத்து. பிறர்க்குச் செய்யவேண்டிய கடமைகளை நடுவாக நின்று செய்யின், அந் நடுவு நிலைமை ஓர் அறமாம். 81.

உ. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

பொருள். செப்பம் உடையவன் ஆக்கம்—நடுவு நிலைமையைப் பொருந்தியவனது செல்வம், சிதைவு இன்றி எச்சத்திற்கும் ஏமாப்பு உடைத்து—அழிவு இல்லாமல் (அவனுக்கேயன்றி அவன்) மக்கட்கும் காப்பாதலை யுடைத்து.

அகலம். எச்சத்திற்கும் என்பதன் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. செப்பம்—நேர்மை—நடுவு நிலைமை.

## நடுவு நிலைமை.

**கருத்து.** நடுவு நிலைமை யுடையவன் செல்வம் அழியாது. 82.

௩. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.

**பொருள்.** நன்றே தரினும்—நன்மையையே தரினும், நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை அன்றே ஒழிய விடல்—நடுவு நிலைமை தவறி வருஞ் செல்வத்தை அப்பொழுதே நீங்க விடுக.

**அகலம்.** தரினும் என்பதன் உம்மை தாராமையை உணர்த்தி நின்றது. ஏகாரம் இரண்டும் பிரிநிலைக்கண் வந்தன.

**கருத்து.** நடுவு நிலைமை தவறி வருஞ் செல்வத்தைக் கொள்ளற்க. 83.

௪. தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும்.

**பொருள்.** தக்கார் தகவு இலர் என்பது—(ஒருவர்) தகுதி யுடையார் (அல்லது) தகுதி இல்லார் என்பது, அவரவர் எச்சத்தால் காணப்படும்—அவரவருடைய புகழால் அல்லது இகழால் அறியப் படும்.

**அகலம்.** ஒருவன் இறந்த பின் எஞ்சி நிற்பது எச்சம். ஆகவே, எச்சம் என்பதற்கு புகழ் அல்லது இகழ் எனப் பொருள் உரைக்கப்பட்டது. தகுதியுடையார் அல்லது தகுதி இல்லா ரென்பது முறையே அவரவருடைய நல்ல மக்களாலும் தீய மக்களாலும் அறியப்படும் என்று உரைப்பாரும் உளர்.

**கருத்து.** ஒருவர் தகுதியுடையார் என்பதை அவரது புகழாலும், தகுதி யில்லாதார் என்பதை அவரது இகழாலும் அறிக. 84.

௫. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.

பொருள். கேடும் பெருக்கமும் இல்(ல) அல்ல—வறுமையும் செல்வமும் இல்லாதன அல்ல; நெஞ்சத்து கோடாமை சான்றோர்க்கு அணி—மனத்தின்கண் (நடுவு நிலைமையை விட்டுச்) சாயாமை (கல்வி, அறிவு, ஒழுக்கங்களால்) நிறைந்தவர்க்கு அழகு.

அகலம். 'இல்ல அல்ல' என்பது செய்யுள் விகாரத்தால் அகரம் கெட்டு நின்றது. நச்சர் பாடம் 'சான்றோர்க் கறிவு

கருத்து. வறுமையும் வளமையும் மாறிமாறி வரும் இயல்புடையன வாதலால், அவைபற்றி நடுவு நிலைமை தவறுத லாகாது. 85.

சு. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின்.

பொருள். தன் நெஞ்சம் நடுவு ஒருவி அல்ல செய்யின்—தன் உள்ளம் நடுவு நிலைமையின் நீங்கி மறங்களைச் செய்யக் கருதின், யான் கெடுவல் என்பது அறிக—யான் கெடுவேன் என்பதனை அறியக் கடவன்.

அகலம். இகர அளபெடை இன்னிசைக்கண் வந்தது. செய்யின் என்பது யகர வொற்றுக் கெட்டு நின்றது. மறங்களை "அல்லவை" என்று பிறண்டும் ஆசிரியர் கூறியிருத்தலான், 'அல்ல என்பதற்கு மறங்கள் என்று பொருள் உரைக்கப் பட்டது. தருமர் பாடம் 'அறிதல்தன் னெஞ்சம்.'

கருத்து. நடுவு நிலைமையினின்று தவற நினைத்தல் கேட்டிற்கு அறிகுறி யாம். 86.

எ. கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

பொருள். நடுவு ஆக நன்றிக்கண் தங்கியான் தாழ்வு—நடுவு நிலைமையைக் கைக்கொண்டு அறம் புரிதலின்கண்ணே (நிலைத்து)

நின்றவனது வறுமையை, உலகம் கெடுவாக வையாது—உலகத்தார் வறுமையாகக் கருதார்.

அகலம். 'கெடு' முதனிலைத் தொழிற்பெயர்.

கருத்து. அவனுடைய தாழ்வு விரைவில் நீங்கிவிடு மாதலால், அதனைக் கேடாக உலகத்தார் கருதார். 87.

அ. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

பொருள். சமன் செய்து சீர் தூக்கும் கோல் போல் அமைந்து —(தன்னைச்)சம நிலைப்படுத்தி (நின்று தன்கண் வைத்த பொருளைச்) சீராக நிறுக்கும் நிறைகோல் போல நின்று, ஒரு பால் கோடாமை சான்றோர்க்கு அணி—ஒரு பக்கத்துச் சாயாதிருத்தல் சால்புடையோர்க்கு அழகு.

அகலம். அந் நிறைகோலை வெள்ளிக்கோல் என்பர். ஒரு பக்கம் சாயாதிருத்தல்—ஒருவன் பொருளை வவ்வாதிருத்தல். தாமத்தர் பாடம் 'சமஞ் செய்து'. 'ஒருபாற் கோடாமை' என்பதற்கு நீதி வழங்குங்கால் 'பகை, நொதுமல், நட்பு என்னும் முத்திறத்தார்க்கும் ஒப்பக் கூறுதல்' என்று உரைப்பாரும் உளர்.

கருத்து. பிறர் பொருளைக் கவராமை ஒழுக்க முடையார்க்கு அழகு. 88.

கூ. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

பொருள். ஒரு தலையா(க) உட்கோட்டம் இன்மை பெறின்— ஒரு பக்கமாக மனக் கோட்டம் இல்லா திருத்தலைப் பெறுமாயின், சொல் கோட்டம் இல்லது செப்பம்—சொற் கோட்டம் இல்லாத ஒழுக்கம் நடுவு நிலைமை.

அகலம். கோட்டம்—கோணல். மனக் கோட்டமின்மை—மனத்தின் நேர்மை. உட் கோட்டம் உடையவரும் சொற் கோட்டமின்றிப் பேசுதல் கூடுமாகலின், உட்கோட்ட மின்மை பெறின் என்றார்.

கருத்து. நினைப்பும் சொல்லும் ஒத்து நேர்மையாக ஒழுகுதல் வேண்டும். 89.

ம. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகமாம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

பொருள். பிறவும் தம போல் பேணி செய்யின்—பிறர் பொருள்களையும் தம் பொருள்கள் போலப் பேணி (வாணிகம்) செய்யின், வாணிகம் செய்வார்க்கு வாணிகம் ஆம்—வாணிகத் தொழில் செய்வார்க்கு வாணிகம் வளரும்.

அகலம். செய்யின் என்பது யகர வொற்றுக் கெட்டு நின்றது. வாணிகம் செய்வார்க்குப் பிறர் பொருளைக் கவர்தற் குரிய இடங்கள் பல உண்டா மாகலான், அவரைப் பற்றி ஈண்டுக் கூறினார். முந்திய உரையாசிரியர்கள் மூன்றும் சீராக 'வாணிகம்' என்பதைக் கொண்டார்கள். 'வாணிகமாம்' என்பது தெளிவும் தொடையின்பமும் பயக்கின்றமையால், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்க. நச்சர் பாடம் 'தமபோற் செயல்'.

கருத்து. வாணிகஞ் செய்வார் தம் பொருளுக்கு என்ன பெற விரும்புவரோ, அவற்றைப் பிறர் பொருளுக்குக் கொடுத்தல் வேண்டும். 90.

## ம-ம் அதி:—அடக்க முடைமை.

அஃதாவது, தான் அடங்கி யொழுகுதலும், தன்னை அடக்கி யொழுகுதலு மாம். தன்னை அடக்குதல்—தன் பொறிகள் முதலியவற்றை அடக்குதல்.

## அடக்க முடைமை.

க. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.

பொருள். அடக்கம் அமரருள் உய்க்கும்—அடக்கம் (தன்னை யுடையாரைத்) தேவருட் சேர்க்கும்; அடங்காமை ஆர் இருள் உய்த்து விடும்—அடங்காமை (தன்னை யுடையாரை) நிறைந்த இருளையுடைய நரகத்தின்கண் செலுத்தி விடும்.

கருத்து. அடக்கம் சுவர்க்கத்தை நல்கும்; அடங்காமை நரகத்தை நல்கும். 91.

உ. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

பொருள். அடக்கத்தை பொருளா(க) காக்க—(மக்கள்) அடக்கத்தை(க் காக்க வேண்டிய ஒரு) பொருளாகக் காக்கக் கடவர்; உயிர்க்கு அதனின் ஊங்கு ஆக்கம் இல்லை—(மக்கள்) உயிர்க்கு அதனினும் மேற்பட்ட நன்மை இல்லை.

அகலம். ஆக்கம்—செல்வம். அதனைத் தரும் நன்மையை ஆக்கம் என்றார். 'மக்கள்' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

கருத்து. ஒருவன் அடக்கத்தை விடாது காக்கக் கடவன். 92.

௩. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின்.

பொருள். அறிவு அறிந்து ஆற்றின் அடங்க பெறின்—(ஒருவன் தன் உள்ளத்தின்கண் உள்ளதாகிய) அறிவை (ஆராய்ந்து) அறிந்து (அடங்கும்) நெறியில் (உளம், நா, உடல்) அடங்கப் பெறின், செறிவு அறிந்து சீர்மை பயக்கும்—(அவ்வறிவு அவ்)அடக்கத்தினை அறிந்து அவனுக்குச் சிறப்பினை நல்கும்.

அகலம். சிறப்பு—வீடு. "ஓர்த்துள்ளம்" என்னும் தொடக்

கத்துக் குறளை நோக்குக. உளம், நா, உடல் அடங்குவதற்கு உள்ளத்தின்கண் உள்ளதாகிய அறிவை அறிதல் இன்றியமையாத தாகலான், அறிவு அறிந்து என்றார். அவ் வறிவே மெய்ப்பொருளாதலால், அது செறிவறிந்து சீர்மை பயக்கும் என்றார்.

கருத்து. அடக்க முடையார் வீடு பெறுவர். 93.

ச. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது.

பொருள். நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்—(தனது இல்வாழ்க்கை) நிலையினின்று வேறுபடாது (உளம், நா, உடல்) அடங்கியவனது தோற்றம், மலையினும் மாண பெரிது—மலையினும் மிகப் பெரியது.

அகலம். தோற்றம்—விளக்கம். தாமத்தர் பாடம் 'நிலையிற் பிரியா'. இல்வாழ்க்கை நிலையினின்று வேறுபடாது அடங்குவதாவது, இல்வாழ்க்கையின்கண் அடக்கி யாள வேண்டியவர்களை அடக்கியாண்டுகொண்டே தான் அடங்கி யொழுகல். "கருமஞ் சிதையாமல்" என்னும் தொடக்கத்துக் குறளையும் நோக்குக. முந்திய மூன்று குறள்களால் பொதுவான அடக்கத்தைக் கூறினார். இக் குறளால் பிறருக்கு அடங்கி யொழுகுதலின் பெருமையைக் கூறினார்.

கருத்து. இல் வாழ்வானது அடக்கம் அவனுக்கு மிக உயர்ந்த பெருமையைத் தரும். 94.

ரு. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கோர் செல்வந் தகைத்து.

பொருள். பணிதல் எல்லார்க்கும் நன்றாம்—பணிதல் எல்லாருக்கும் நல்ல தாம்; அவருள்ளும் செல்வர்க்கு ஓர் செல்வம் தகைத்து—எல்லாருள்ளும் செல்வவந்தருக்கு (அதனோடு வேறு) ஒரு

செல்வ மாம் தகைமையை உடைத்து.

அகலம். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'செல்வர்க்கே'. ஈண்டு ஏகாரம் வேண்டப்படுவதன் றாகலானும், 'ஓர்' இன்றி யமையாது வேண்டப்படுவ தொன் றாகலானும், 'செல்வர்க்கோர்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. "பெருமை பெருமித மின்மை"—திருக்குறள்.

கருத்து. செல்வர்க்கு அடக்கம் சிறப்பினைத் தரும். 95.

சா. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து.

பொருள். ஒருமையுள் ஆமை போல் ஐந்து அடக்கல் ஆற்றின் —ஒரு பிறப்பின்கண் (ஒருவன்) ஆமை போல ஐம் பொறிகளையும் அடக்குதலைச் செய்யின், எழுமையும் ஏமாப்பு உடைத்து—(அவன் அடையும்) எழு பிறப்பின்கண்ணும் (அவனுக்கு அது) காவலாதலை யுடைத்து.

கருத்து. அடக்கம் மேல் வரும் எழு பிறப்பிலும் பெருமை பயக்கும். 96.

எ. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குட் பட்டு.

பொருள். யா காவார் ஆயினும் நா காக்க—(மாந்தர்) எவற்றை அடக்காராயினும் நாவினை அடக்குக; காவாக்கால் சொல் இழுக்குள் பட்டு சோகாப்பர்—(நாவினை) அடக்காதபொழுது (அவர்) சொற் குற்றத்துட் பட்டுத் துக்கப்படுவர்.

அகலம். மணக்குடவர் பாடம் 'சொல்லிழுக்குட் பட்டு'. மற்றை நால்வர் பாடம் 'சொல்லிழுக்குப் பட்டு'. நாவினைக் காவா தார் சொல்லிழுக்குட் பட்டுச் சோகாப்பர் என்பதே அதிகப் பொரு

த்த மாகலான், மணக்குடவர் பாடமே ஆசிரியர் பாடம் எனக் கொள் ளப்பட்டது. சோகாத்தல்—துக்கப்படுதல்.

**கருத்து.** ஒருவன் நாவினை அடக்கிப் பேசுக. 97.

அ. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும்.

**பொருள்.** ஒன்றானும் தீ சொல் பொருள் பயன் உண்டாயின் —(ஒருவன் சொல்லும் சொற்களில்) ஒன்றாலும் தீய சொல்லின் பொருளினது (தீய) பயன் உண்டாயின், நன்று ஆகா(த)து ஆகி விடும்—(அவன் சொல் ஒவ்வொன்றும்) நன்மையைத் தாராத சொல் ஆகி விடும்.

**அகலம்.** நன்றாகாதது என்பது செய்யுள் விகாரத்தால் தக ரம் கெட்டு நின்றது.

**கருத்து.** ஒருவன் சொல்லும் சொற்களில் ஒன்று தீச் சொற் பயனை அளிப்பின், அவன் சொல்லிய சொற்களெல்லாம் தீயனவாய் விடும். 98.

கூ. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
வாயினாற் சுட்ட வடு.

**பொருள்.** தீயினால் சுட்ட புண் உள் ஆறும்—தீயால் சுட்ட புண் உள்ளே ஆறிவிடும்; வாயினால் சுட்ட வடு ஆறாது—சொல்லாற் சுட்ட புண் (உள்ளே ஒரு நாளும்) ஆறாது.

**அகலம்.** ஏகாரம் தேற்றம். வாய் என்பது ஆகுபெயர், வாயினின்று வரும் சொல்லிற்கு ஆயினமையால். முந்திய உரை யாசிரியர்கள் பாடம் 'நாவினால்'. 'வாயினால்' என்பது எதுகை யும் மோனையும் ஒத்துத் தொடையின்பம் பயத்தல் காண்க. அன்றி யும், வாய் என்பது ஆசிரியர் அடிக்கடி வழங்கும் சொற்களில் ஒன்று.

ஆகலான், 'வாயினல்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப் பட்டது.

கருத்து. ஒருவனை இகழ்ந்து பேசின், அஃது அவன் மனத்தை விட்டு ஒரு நாளும் நீங்காது. 99.

ய. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

பொருள். கதம் காத்து அடங்கல் கற்று ஆற்றுவான் செவ்வி —சினத்தை அடக்கி (த் தான்) அடங்குதலைக் கற்றுக் கைக்கொண்டு ஒழுகுவானது நல்ல சமயத்தை, ஆற்றின் நுழைந்து அறம் பார்க்கும் —(அவன்பாற் செல்லுதற்குரிய) நெறியிற் புகுந்து அறக்கடவுள் பார்க்கும்.

அகலம். அறம் என்பது ஆகுபெயர், அறக்கடவுளுக்கு ஆயினமையால்.

கருத்து. வெகுளியை விடுத்து அடக்கத்தைக் கைக்கொண்டு ஒழுகுபவன் வேண்டியவற்றை யெல்லாம் கடவுள் அருள்வார். 100.

## யக-ம் அதி:—ஒழுக்க முடைமை.

அஃதாவது, நன்னடக்கை யுடைமை.

க. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

பொருள். ஒழுக்கம் விழுப்பம் தரலான்—ஒழுக்கம் (தன்னை யுடையார்க்கு) மேன்மையைத் தருதலால், ஒழுக்கம் உயிரினும் ஓம்ப படும்—ஒழுக்கத்தை(த்தமது) உயிரினும் (மிகப்) பேணவேண்டும்.

அகலம். பரிமேலழகர் பாடம் 'தரலான்'. மற்றை நால்வர் பாடம் 'தரலால்'.

**கருத்து.** தன் உயிரைக் காத்தலினும் மேலாக ஒருவன் தன் ஒழுக்கத்தைக் காக்கக் கடவன். 101.

உ. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

**பொருள்.** பரிந்து ஓம்பி ஒழுக்கம் காக்க—(ஒருவன்) வருந்திப் பேணி ஒழுக்கத்தைக் காக்கக் கடவன்; தெரிந்து ஓம்பி தேரினும் அஃதே துணை—(தனக்குத் துணையாவனவற்றை யெல்லாம்) அறிந்து பேணி ஆராயினும் ஒழுக்கமே (தனக்குத்) துணை (யாகலான்).

**கருத்து.** ஒருவனுக்கு நல்லொழுக்கமே "போன்றுங்கால் பொன்றாத் துணை." 102.

ந. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

**பொருள்.** ஒழுக்கம் உடைமை குடிமை (ஆம்)—ஒழுக்கம் உடைமையால் (ஒருவனுக்கு) குடியுயர்வு உண்டாம்; இழுக்கம் இழிந்த பிறப்பு ஆய் விடும்—இழுக்கத்தால் (ஒருவனுக்குத்) தாழ்ந்த குடிப்பிறப்பின் தன்மை உண்டாகிவிடும்.

**அகலம்.** பிறப்பு என்பது ஆகு பெயர், அதன் தன்மைக்கு ஆயினமையால். ஆம் என்னும் ஆக்கச் சொல் வருவித்து உரைக்கப் பட்டது.

**கருத்து.** நல் லொழுக்கத்தால் குடிப் பிறப்புயர்வும் தீ யொழுக்கத்தால் குடிப்பிறப்புத் தாழ்வும் உண்டாம். 103.

ச. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

**பொருள்.** பார்ப்பான் ஒத்து மறப்பினும் கொள்ளல் ஆகும்—(மறைகளைக்) கற்பவன் மறைகளை மறப்பினும் (அவற்றை மறுபடியும்)

கற்றுக்கொள்ளல் கூடும்; பிறப்பு ஒழுக்கம் குன்ற கெடும்—(அவன்) குடிப்பிறப்பின் ஒழுக்கம் குறையக் கெடுவான்.

**கருத்து.** கல்வியினும் ஒழுக்கம் மேம்பட்டது. 104.

ரு. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

**பொருள்.** ஒழுக்கம் இல்லான்கண்—நன்னடக்கை இல்லா தான்கண், அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று—பொறாமை உடையவனிடத்துச் செல்வம் (இல்லையாதல்) போல, உயர்வு இல்லை—உயர்ச்சி இல்லை(யாகும்).

**கருத்து.** ஒழுக்கம் இல்லாதவனுக்கு உயர்வு இல்லை. 105.

சா. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

**பொருள்.** இழுக்கத்தின் ஏதம் படுபாக்கு அறிந்து—(நன் னடக்கையினின்று) தவறுதலால் குற்றம் உண்டாதலைத் தெரிந்து, உரவோர் ஒழுக்கத்தின் ஒல்கார்—அறிவுடையோர் நன்னடக்கையி னின்று தளரார்.

**அகலம்.** 'பாக்கு' என்பது தொழிற்பெயர் விகுதி. முதல் 'இன்' ஐந்தாம் வேற்றுமைப் பொருளினும், இரண்டாவது 'இன்' மூன்றும் வேற்றுமைப் பொருளினும் வந்தன.

**கருத்து.** அறிவுடையார் ஒழுக்கத்தினின்று தவறார். 106.

எ. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி.

**பொருள்.** ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர்—(மாந்தர்) நன் னடக்கையால் மேன்மையை அடைவர்; இழுக்கத்தின் எய்தா(த)

பழி(யும்) எய்துவர்—(நன்னடக்கையினின்று) தவறுதலால் அடைய வொண்ணாத பழியையும் அடைவர்.

அகலம். "கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர், பொல்லாத தில்லை யொருவற்கு—நல்லாய், இழுக்கத்தின் மிக்க விழி வில்லை யில்லை, ஒழுக்கத்தின் மிக்க வுயர்வு".—பழமொழி. செய்யுள் விகாரத்தால் எய்தாத என்பதன் ஈறும், உம்மையும் கெட்டு நின்றன.

கருத்து. ஒழுக்கத்தால் புகழையும், இழுக்கத்தால் இகழையும் அடைவர். 107.

அ. நன்றுக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

பொருள். நல் ஒழுக்கம் நன்றுக்கு வித்துஆகும்–நல்ல நடக்கை இன்பத்திற்குக் காரண மாகும்; தீ ஒழுக்கம் என்றும் இடும்பை தரும்—தீய நடக்கை எஞ்ஞான்றும் துன்பம் தரும்.

அகலம். நன்று என்பது இன்பம் எனப் பொருள் தருத லானும், எதுகை நயம் பயத்தாலனும், 'நன்றுக்கு' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

கருத்து. நல்லொழுக்கம் இன்பத்தையும் தீ யொழுக்கம் துன்பத்தையும் தரும். 108.

கூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாதே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

பொருள். தீய வழுக்கியும் வாயால் சொல்லல்—தீய சொற்களை நழுவியும் வாயினாற் சொல்லுதல், ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாது—நல்ல நடக்கை யுடையார்க்கு இயலாது.

அகலம். ஏகாரம் அசை. மணக்குடவர், தாமத்தர் பாடம் 'ஒல்லாதே'. மற்றை மூவர் பாடம் 'ஒல்லாவே,' 'ஒல்லாதே'

என்பது ஒருமை வினையா யிருத்தலான், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** ஒழுக்க முடையவர் தீய சொற்களை ஒருபோதும் சொல்லார். 109.

ம. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

**பொருள்.** பல கற்றும் உலகத்தோடு ஒட்ட ஒழுகல் கல்லார்—பல நூல்களைக் கற்றும் உயர்ந்தாரோடு பொருந்த நடத்தலைக் கல்லாதவர், அறிவு இல்லாதார்—அறிவு இல்லாதவர்.

**அகலம்.** இல்லாதார் என்பது செய்யுள் விகாரத்தால் லகர வொற்றுக் கெட்டு நின்றது. "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றமையான், உலகம் என்பதற்கு உயர்ந்தார் எனப் பொருள் உரைக்கப்பட்டது.

**கருத்து.** ஒருவன் உயர்ந்தோர் நடையைக் கைக்கொள்க. 110.

## யஉ-ம் அதி:—பிறனில் விழையாமை.

அஃதாவது, பிறனது மனைவியைக் காதலியாமை. 'இல்' என்பது ஆகுபெயர், அதன்கண் வாழும் இல்லாளுக்கு ஆயினமையால்.

க. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில்.

**பொருள்.** பிறன் பொருளாள் பெட்டு ஒழுகும் பேதைமை—பிறனுடைய பொருளாகிய மனையாளைக் காதலித்து நடக்கும் மடமை, ஞாலத்து அற(மோ) பொரு(ளோ) கண்டார்கண் இல்—உலகத்தில் அற நூலையாவது பொருள் நூலையாவது அறிந்தாரிடத்து இல்லை.

அகலம். ஒருவன் மனைவி அவனுடைய பொருளானபடியால், அவளைப் 'பிறன் பொருள்' என்றார். அறம், பொருள் என்பன ஆகுபெயர்கள், அவற்றைக் கூறும் நூல்களுக்கு ஆயினமையால். ஓகாரம் இரண்டும் செய்யுள் விகாரத்தால் தொக்கன.

கருத்து. பிறன் மனையாளைக் காதலித்தல் களவும், பாவமுமாம். 111.

௨. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.

பொருள். அறன்கடை நின்றாருள் எல்லாம்—மறத்தின்கண் நின்றவர்களுள் எல்லாம், பிறன்கடை நின்றாரின் பேதையார் இல்—பிறன் (வீட்டுப்) புறவாயிலின்கண் நின்றவரைப் போல மடையர் இல்லை.

அகலம். கடை—புறம். அறத்திற்குப் புறம் மறமாதலின், அதனை 'அறன்கடை' என்றார். பிறன் மனையாளிடம் செல்பவர் அவன் வீட்டு முன்வாயில் வழியாகச் செல்லாமல் ஒளிந்து பின் வாயில் வழியாகச் செல்வது வழக்காகலின், பிறன்கடை நின்றார் என்றார்.

கருத்து. பிறன் மனையாளைக் காதலிப்பவர் மற்றைய பாவங்களைச் செய்பவரினும் பெரு மடையர். 112.

௩. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.

பொருள். மன்ற தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார்—(தம்மை) மிகத் தெளிந்துகொண்டவருடைய இல்லாளிடத்தே தீமை புரிந்து நடப்பவர், விளிந்தாரின் வேறு அல்லர்—இறந்தாரின் வேறு அல்லர்.

## பிறனில் விழையாமை.

**அகலம்.** தெளிந்தார்—(தம்மை நல்லொழுக்க முடையவ ரென்று தமது நண்பராகவோ தொழிலாளராகவோ) தெளிந்து கொண்டவர்.

**கருத்து.** தெளிந்தாருடைய இல்லாளிடத்துத் தீமை புரிபவர் செத்தா ராவர். 113.

ச. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல்.

**பொருள்.** தினை துணையும் தேரான் பிறன் இல் புகில்—(ஒருவன்) சிறிது அளவும் ஆராயாதவனாய்ப் பிறனுடைய இல்லின் கண் நுழையின், எனை துணையன் ஆயினும் என் ஆம்—எவ்வளவு பெருமை யுடையவ னாயினும் யாது பயன் ஆம்? (ஒரு பயனும் இல்லை).

**அகலம்.** தேரான்—(பிறன் இல்லின்கண் தீமை புரியச் செல்வதனால் தனக்கு உண்டாகும் கேடுகளை) ஆராயாதவனாய். மணக்குடவர் பாடம் 'எனைத்துணையனாயினும்'; 'புகில்'. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'எனைத்துணைய ராயினும்'. 'புகல்'. 'எனைத் துணைய னாயினும், என்பது 'தேரான்' என்பதற்கு ஒப்ப ஒருமையா யிருத்தலானும், புகில் என்பது பொருத்தமான பொருளைத் தருதலா னும், அவையே ஆசிரியர் பாடங்கள் எனக் கொள்ளப்பட்டன.

**கருத்து.** பிறன் மனையாள்பாற் செல்பவன் தனது பெருமை யை யெல்லாம் இழப்பன். 114.

ரு. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

**பொருள்.** எளிது என இல் இறப்பான்—(பிறனது இல்லின் கண் செல்லுதல்) எளிது என்று கருதி (ப்பிறன்) இல்லினுள் செல்

பவன், எ ஞான்றும் விளியாது நிற்கும் பழி எய்தும்—எஞ்ஞான்றும் அழியாது நிற்கும் பழியை அடைவான்.

கருத்து. பிறன் மனையாள்பாற் செல்பவன் அழியாத பழியை அடைவன். 115.

சு. பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

பொருள். பகை பாவம் அச்சம் பழி என நான்கும்—பகைமை பாவம் பழி பயம் என்று சொல்லப்பட்ட நான்கும், இல் இறப்பான்கண் இகவா ஆம்—பிறனது இல்லின்கண் செல்பவன் இடத்து (நின்று) நீங்கா வாம்.

அகலம். "அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றார, நச்சுவார்ச் சேரும் பகை பழி பாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்".—நாலடியார். இல் லிறப்பான்கண் என்பது வேற்றுமை மயக்கம், ஏழாம் வேற்றுமை யுருபு ஐந்தாம் வேற்றுமைப் பொருளில் வந்தமையான்.

கருத்து. பிறன் மனையாள்பாற் செல்பவனை விட்டுப் பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கும் நீங்கா. 116.

எ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.

பொருள். பிறன் இயலாள் பெண்மை நயவாதவனே—பிறனது இயல்புக்குத் தக்கபடி ஒழுகுகின்றவளது பெண்மையினை விரும்பாதவனே, அறன் இயலான் இல்வாழ்வான் என்பான்—அறத்தின் இயல்போடு கூடி இல்வாழ்பவன் என்று சிறப்பித்து (அறிவுடையோரால்) சொல்லப்படுவான்.

# பிறனில் விழையாமை.

அகலம். ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. பிறன் இயல்புக்குத் தக்கபடி ஒழுகக் கடமைப் பட்டவளாதலால், பிறன் இயலாள் என்றார். பெண்மை—பெண்ணோடு கூடி நுகரும் இன்பம். 'ஆன்' என்பது 'ஒடு' என்னும் உருபுப் பொருளைத் தந்து நின்றது.

கருத்து. பிறன் மனையாளைக் காதலியாதவன் அற நெறியில் இல்வாழ்க்கையை நடாத்துபவன். 117.

அ. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

பொருள். பிறன் மனை நோக்காத பேராண்மை—பிறனது மனையாளைத் (தீய எண்ணத்துடன்) பாராத பெரிய ஆண்மைத் தன்மை, சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கும்—சால்புடையார்க்கு அறம் மாத்திரமா? நிறைந்த ஒழுக்கமும் ஆம்.

அகலம். ஒழுக்கும் என்பதன் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. 'மனை' ஆகுபெயர், மனையாளுக்கு ஆயினமையால். "பிறன்மனை பின்னோக்காப் பீடினிது".—இனியவை நாற்பது.

கருத்து. பிறன் மனையாளைக் காதலியாமை அறமும் ஒழுக்கமுமாம். 118.

கூ. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறர்க்குரியா டோடோயா தார்.

பொருள். நாமம் நீர் வைப்பில் நலத்துக்கு உரியார் யார் என்னின்—அச்சத்தைத் தரும் கடல் சூழ்ந்த உலகின்கண் நன்மைக்கு உரியவர் யார் என்னின், பிறர்க்கு உரியாள் தோள் தோயாதார்—பிறனுக்கு உரியவளது தோளினைச் சேராதவர்.

அகலம். செய்யுள் விகாரத்தால் நலத்துக்கு என்பது அத்துச் சாரியை கெட்டும், நாம் என்பது 'அம்' சாரியை பெற்றும் நின்றன. நாம்—அச்சம்.

கருத்து. பிறன் மனையாளைக் காதலியாதவர் எல்லா நன்மைகளையும் பெறுதற்குரியர். 119.

௰. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

பொருள். அறன் வரையான் அல்ல செய்யினும்—(ஒருவன்) அறத்தைக் கைக்கொள்ளாதவனும் மறங்களைச் செய்யினும், பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று—பிறனுடைய வரைக்கண் நின்றொழுகுவாளது பெண்மையினை விரும்பாமை நன்மை.

அகலம். பிறன் வரையும் வரைக்குள் நின்றொழுகுவாளைப் பிறன் வரையாள் என்றார். செய்யினும் என்பது யகர வொற்றுக் கெட்டு நின்றது.

கருத்து. ஒருவன் அறத்தைச் செய்யாது மறத்தையே செய்யினும், பிறன் மனையாளைக் காதலியா திருத்தல் நன்மை. 120.

## ௰௬-ம் அதி:—பொறை யுடைமை.

அஃதாவது, பொறுமை யுடைமை.

க. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை.

பொருள். அகழ்வாரை தாங்கும் நிலம் போல—(மண்வெட்டி கொண்டு தன்னைத்) தோண்டுவாரைத் தாங்கும் நிலம் போல, தம்மை இகழ்வார்ப் பொறுத்தல் தலை—தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலையாய பொறுமை.

அகலம். இகழ்வார் என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகை. " தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம் மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை, யெரிவாய் நிரயத்து வீழ் வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்."—நாலடியார்.

கருத்து. தம்மை இகழ்வாரைப் பொறுத்தல் தலையாய பொறுமை. 121.

உ. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

பொருள். இறப்பினை என்றும் பொறுத்தல்—(ஒருவன் பிறர் செய்த) மிகையினை எஞ்ஞான்றும் பொறுக்கக் கடவன்; அதனை மறத்தல் அதனினும் நன்று—அம் மிகையினை (உடனே) மறந்து விடுதல் பொறுத்தலினும் (மிக) நன்று.

கருத்து. பிறர் செய்த பிழையை உடனே மறந்திடுக. 122.

ந. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

பொருள். விருந்து ஒரால் இன்மையுள் இன்மை—விருந்தி னரை விலக்குதல் வறுமையுள் வறுமை; மடவார்ப் பொறை வன் மையுள் வன்மை—(மிகை செய்த) மடையரைப் பொறுத்தல் வலி மையுள் வலிமை.

அகலம். மடவார் என்பது இரண்டாம் வேற்றுமைத் தொகை. மிகை செய்தற்குக் காரணம் மடமை என்பதைக் குறிக்கவே 'மட வார்ப் பொறை' என்றார். வன்மையுள் வன்மை அறிவுடைமை, " அறிவற்றங் காக்குங் கருவி" என்றா ராகலின். இன்மையுள் இன்மை அறிவின்மை, " அறிவின்மை யின்மையு ளின்மை" என்றா ராகலின். 'ஒப்பமுடித்தல்' என்னும் உத்தியால் மடவார்ப் பொறைக்

குக் காரணமாய அறிவுடைமையைக் கூறும் இக் குறளில் விருந்தொராலுக்குக் காரணமாய அறிவின்மையையும் கூறினர்.

**கருத்து.** அறிவில்லாதார் செய்த பிழைகளைப் பொறுத்தல் வேண்டும். 123.

ச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும்.

**பொருள்.** நிறை உடைமை நீங்காமை வேண்டின்—சால்புடைமை (தன்னை விட்டு) நீங்காதிருத்தலை (ஒருவன்) விரும்பின், பொறை உடைமை போற்றி ஒழுக படும்—பொறையுடைமையைப் பேணி ஒழுக வேண்டும்.

**கருத்து.** பொறையுடையவனை விட்டு நிறையுடைமை நீங்காது.

ரு. ஒறுத்தாரை யொன்ருக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

**பொருள்.** ஒறுத்தாரை ஒன்ருக வையார்—(தமக்குத் தீங்கு செய்தானை) ஒறுத்தவரை ஒரு பொருளாக மதியார்; பொறுத்தாரை பொன் போல் பொதிந்து வைப்பர்—பொறுத்தவரைப் பொன்னை (த்துணியில் பொதிந்து வைத்தல்) போல (மனத்தின்கண்) போற்றி வைப்பர் (அறிவுடையார்).

**அகலம்.** ஒறுத்தவர்—தண்டித்தவர். 'அறிவுடையார்' என்பது அவாய்நிலையான் வந்தது.

**கருத்து.** பொறுத்தாரை அறிவுடையார் போற்றுவர். 125.

சா. ஒறுத்தார்க் கொருநாளே யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.

**பொருள்.** ஒறுத்தார்க்கு ஒரு நாளே இன்பம் (ஆம்)—(தமக்

குத் தீங்கிழைத்தானை) ஒறுத்தவர்க்கு ஒரு நாளை இன்பம் ஆம்; பொறுத்தார்க்கு பொன்றும் துணையும் புகழ் (ஆம்)—பொறுத்தவர்க்கு (அவர்) இறக்கும் அளவும் (இன்பத்தோடு) புகழ் ஆம்.

அகலம். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'ஒரு நாளை'. "பொன்றுந் துணையும்" என்று பின்னர்க் கூறியிருத்தலின், பிரிநிலை ஏகாரம் ஈண்டு இன்றியமையாதது. ஆகலான் 'ஒரு நாளே' என்பது ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. 'ஆம்' என்னும் ஆக்கச் சொல் இரண்டிடத்தும் வருவித்து உரைக்கப்பட்டது.

கருத்து. பொறுத்தவர்க்குப் பொன்றுந் துணையும் இன்பமும் புகழும் உண்டு. 126.

எ. அறனல்ல தற்பிறர் செய்யினும் நொந்து
திறனல்ல செய்யாமை நன்று.

பொருள். அறன் அல்ல தன் பிறர் செய்யினும்—அறன் அல்லாத செயல்களைத் தனக்குப் பிறர் செய்யினும், நொந்து திறன் அல்ல செய்யாமை நன்று—மனம் வருந்தித் திறன் அல்லாத செயல்களைச் செய்யா திருத்தல் நன்மை.

அகலம். பிறர் செய்த தீங்குகளைப் பொறுத்தல் திறனுடைய செயலாம்; பொறாது எதிர்த் தீங்கு செய்தல் திறனற்ற செயலாம். அதுபற்றித் 'திறனல்ல' என்றார். பரிமேலழகர் பாடம் முறையே 'திறனல்ல', 'நோநொந்து', 'அறனல்ல'. தருமர் பாடம் முறையே 'திறனல்ல', 'நோர்நொந்து,' 'அறனல்ல.' தாமத்தர் பாடம் முறையே 'திறனல்ல,' 'நோய்நொந்து,' 'அறனல்ல'. அறன் அல்ல—அறன் அல்லாத செயல்கள்; அஃதாவது, பாவச் செயல்கள். திறன் அல்ல—திறன் அற்ற செயல்கள்; அஃதாவது, மனவலி யில்லாதார் செய்யும் செயல்கள். அறனல்ல தற்பிறர் செய்யின், அவரை ஒறுத்தல் தகுதி; திறனல்ல தற்பிறர் செய்யின், அவரைப் பொறுத்தல்

தகுதி. மூன்றுஞ் சீராகிய 'செய்யினும்' என்பதன் உம்மை ஒறுத்தற் குரிய 'அறனல்ல' வற்றையே குறிக்கும். ஆகலான், 'அறனல்ல' என் பதையே ஆசிரியர் முதற் சீராகக் கூறினர் என்று கொள்க. திருத்த மாக எழுதத் தெரியாதவன் எழுதிய ஏட்டெழுத்தில் அகரத்திற்கும் திகரத்திற்கும் வேற்றுமை காண்டல் அரிது. அவ் வேட்டைப் பெயர்த்தெழுதியோன் முதற் சீரின் முதல் எழுத்தாகிய அகரத்தைத் திகரமாகக் கருதி அங்ஙனம் எழுதியிருத்தல் கூடும். அவ்வாறு அம் முதற் சீர் 'திறனல்ல' என்றாய பின்னர் இக் குறளைப் படிக்கும் புலவர் எவரும் ஐந்தாஞ்சீர் 'அறனல்ல' என்பதுதான் என்று கருது தல் இயற்கை. அவ்வாறு அவர் கருதிய பின்னர்க் குறளின் நான் காஞ்சீர் 'நொந்' என ஓர் அசையாக இருத்தல் கண்டு, அதனைத் திருத்த முயலுதலும் இயற்கை. அம் முயற்சியின் பயன்தான் குறளின் நான்காஞ் சீர் 'நோநொந்' எனவும், 'நோய்நொந்' எனவும் 'நேர்நொந்' எனவும் மூன்றாக மூவர் உரை ஏடுகளில் காணப்படுகின்றது. திறனல்லவற்றைத் தனக்குப் பிறர் செய்யினும், தான் அறனல்லவற்றைச் செய்யலாகா தென்பது யாவரும் அறிந்த தொன் றாகலான், அதனை ஈண்டுக் கூறுதல் மிகையே யாகும்; ஆனால், அறனல்லவற்றைச் செய்த பிறர்க்கும் நொந்து திறனல்லவற்றைச் செய்யலாகா தென்று கூறுதல் இன்றியமையாதது. ஆகலான், 'திற னல்ல' என்பதையே ஐந்தாஞ் சீராக ஆசிரியர் கூறினர் என்று கொள்க. ஐந்தாஞ் சீர் 'திறனல்ல' என்றாய பின்னர் நான்காஞ் சீர் 'நொந்து' என் றிருத்தலில் எவ்விதத் தடையும் இல்லை. ஆகலான் 'அறனல்ல' என்பதையே முதற் சீரும், 'நொந்து' என்பதையே நான்காஞ் சீரும், 'திறனல்ல' என்பதையே ஐந்தாஞ் சீருமாக ஆசிரியர் கூறினர் எனக் கொள்க.

**கருத்து.** தனக்குப் பிறர் பல மறங்களைச் செய்யினும், தான் அவரைப் பொறுக்கக் கடவன். 127.

## பொறை யுடைமை.

அ. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல்.

**பொருள்.** *மிகுதியான் மிக்கவை செய்தாரை—(செல்வம் முதலியவற்றின்) மிகுதியினால் (செருக்குக் கொண்டு தமக்குத்) தீங்குகள் இழைத்தாரை, தாம் தம் தகுதியால் வென்று விடல்—தாம் தமது பொறுமையினால் வென்று விடுக.*

**அகலம்.** *தகுதி என்பது ஈண்டுப் பொறுமை என்னும் பொருள் தந்து நின்றது.*

**கருத்து.** *தமக்குத் தீங்கு செய்தாரைப் பொறுத்திடுக.* 128.

க. துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர்.

**பொருள்.** *இறந்தார் வாய் இன்னா சொல் நோற்கிற்பவர்—மிகை செய்தாரது வாயினின்று வரும் துன்பம் தரும் சொற்களைப் பொறுக்கும் ஆற்றலுடையவர், துறந்தாரின் தூய்மை உடையர்—துறந்தாரினும் (அகத்) தூய்மை யுடையவர்.*

**அகலம்.** *கில் என்னும் இடைச்சொல் ஆற்றலை உணர்த்தி நின்றது.*

**கருத்து.** *பிறர் சொல்லும் இன்னாச் சொற்களைப் பொறுப்பவர் துறந்தாரினும் தூயர்.* 129.

ம. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

**பொருள்.** *பிறர் சொல்லும் இன்னா சொல் நோற்பாரின் பின்—பிறர் கூறும் துன்பந்தரும் சொற்களைப் பொறுப்பவர்க்குப் பின்னர், உண்ணாது நோற்பார் பெரியர்—(ஊண்) உண்ணாமல் தவம் புரிவோர் பெரிய ராவர்.*

அகலம். தவத்தினும் பொறுமை உயர்ந்தது என்றவாறு. தாமத்தர் பாடம் ‘ இன்னுத நோற்பாரின் ’.

கருத்து. பிறர் இன்னுச் சொற்களைப் பொறுப்பவர் தவஞ் செய்வாரினும் மேற்பட்டவர். 130.

## ௰௪-ம் அதி:—அழுக்கறுமை.

அஃதாவது, பொறாமை கொள்ளாமை.

தருமர் பாடம் ‘ அழுக்கறுமை ’. மணக்குடவர், நச்சர், பரிமேலழகர் பாடம் ‘ அழுக்காறுமை ’. தாமத்தர் பாடம் ‘ அழுக்காறுறுமை

க. ஒழுக்காறுக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

**பொருள்.** தன் நெஞ்சத்து அழுக்காறு இல்லாத இயல்பு—தன் உள்ளத்தின்கண் பொறாமை இல்லாத தன்மையை, ஒருவன் ஒழுக்கு ஆறு(க)கொள்க—ஒருவன் ஒழுக்கத்தின் நெறியாகக் கொள்க.

அகலம். பொறாமை—பிறர் ஆக்கங் கண்டு புழுங்குதல்.

கருத்து. பொறாமை யில்லாமை ஒழுக்கத்தின் நெறி. 131.

உ. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின்.

**பொருள்.** யார்மாட்டும் அழுக்காற்றின் அன்மை பெறின்—எவரிடத்தும் (ஆக்கங் கண்டு) மனம் மகிழ்தலைப் பெற்றால், விழுப் பேற்றின் அஃது ஒப்பது இல்லை—(ஒருவன் பெறும்) விழுமிய பேறுகளுள் அதனை ஒப்பது இல்லை.

அகலம். விழுமிய—சிறந்த. அதனை—அப் பெறுதலை — அப் பேற்றை. அன்மை என்பது இன்மையை உணர்த்தாது, மற்றொரு பொருளாதலை உணர்த்தும் ஒரு சொல். அழுக்காறு—பிறர்

ஆக்கங் கண்டு மனம் புழுங்குதல். அழுக்காறன்மை அல்லது அழுக்காற்றின் அன்மை—பிறர் ஆக்கங் கண்டு மனம் மகிழ்தல். பிறன் ஆக்கங்கண்டு மனம் மகிழ வேண்டு மென்பது "பிறனுக்கம் பேணு தழுக்கறுப் பான்" என்பதனானும் விளங்கும்.

**கருத்து.** பிறர் ஆக்கங் கண்டு மனம் மகிழ்தல் ஓர் ஒப்பற்ற பேறு. 132.

> ௩. அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
> பேணா தழுக்கறுப் பான்.

**பொருள்.** பிறன் ஆக்கம் பேணாது அழுக்கறுப்பான்—பிறன் செல்வத்தை (க்கண்டு) மகிழாமல் பொறாமை கொள்பவன், அறன் ஆக்கம் வேண்டாதான் என்பான்—அறமும் பொருளும் வேண்டாதவன் என்று (பெரியோரால்) சொல்லப் படுவான்.

**அகலம்.** அழுக்கறு என்பது பகுதி. அழுக்கறு—பொறாமை கொள். பேணாது என்பது ஈண்டு மகிழாமல் என்னும் பொருட்டு.

**கருத்து.** அழுக்காறு உடையவனுக்கு அறமும் பொருளும் இல்லை. 133.

> ௪. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
> னேதம் படுபாக் கறிந்து.

**பொருள்.** இழுக்கு ஆற்றின் ஏதம் படுபாக்கு அறிந்து—தப்பு நெறியில் துன்பம் உண்டாதலைத் தெரிந்து, அழுக்காற்றின் அல்லவை செய்யார் (அறிவுடையார்)—பொறாமையால் மறங்களைச் செய்யார் அறிவுடையார்.

**அகலம்.** முதல் 'இன்', 'ஆன்' உருபின் பொருள் தந்து நின்றது. பாக்கு என்பது தொழிற்பெயர் விகுதி.

**கருத்து.** அழுக்காறு பல பாவங்களுக்கும் துன்பங்களுக்கும் ஏதுவாகும். 134.

ரு. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

**பொருள்.** ஒன்னார் வழுக்கியும்—பகைவர் (கேடு செய்யத்) தவறியும், அழுக்காறு உடையார்க்கு கேடு ஈன்பது—பொறாமை யுடையவர்க்குக் கேடு பயப்பதற்கு, அதுவே சாலும்—பொறாமையே போதும்.

**அகலம்.** பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. கேடீன்பது' நான்காம் வேற்றுமைத் தொகை.

**கருத்து.** அழுக்காறு உடையானை அழித்தற்கு வேறு பகை வேண்டா; அதுவே போதும்.

சா. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும்.

**பொருள்.** கொடுப்பது அழுக்கறுப்பான்—(ஒருவனுக்கு மற்றொருவன்) கொடுப்பதன்கண் பொறாமை செய்பவன், சுற்றம் உடுப்பதும் உண்பதும் இன்றி கெடும்—சுற்றத்தோடு உடுப்பதும் உண்பதும் இல்லாமல் கெடுவன்.

**அகலம்.** கொடுப்பது அழுக்கறுப்பா னுடைய சுற்றம் உடுப்பதும் உண்பதும் இன்றிக் கெடும் என உரைப்பாரும் உளர். அவ்வாறு உரைத்தல், ஒவ்வொருவனும் செய்த வினைகளின் பயன்கள் அவனவனையே சேரும் என்ற வடமொழி தென்மொழி நூல் வழக்கிற்கு முரண்படும். அதனால் அவ்வுரை பொருந்தாது. உடுப்பது—உடுக்கும் துணி, உண்பது—உண்ணும் உணவு. சுற்றம் என்பது மூன்றாம் வேற்றுமைத் தொகை. அளபெடை இரண்டும் இன்னிசைக்கண் வந்தன.

**கருத்து.** கொடுப்பது அழுக்கறுப்பான் தன் ஆக்கத்திற்கு ஆதாரமான சுற்றத்தையும், தன் உடையையும் உணவையும் இழப்பன்.

## அழுக்கறாமை.

எ. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும்.

**பொருள்.** அவ்வித்து அழுக்காறு உடையானை— (உள்ளத்தைக்) கொடுவித்துப் பொறாமையை உடையவனை, செய்யவள் தவ்வையை காட்டி விடும்—திருமகள் (தன்) தமக்கைக்குக் காட்டி விடுவள்.

**அகலம்.** தவ்வையை என்பது வேற்றுமை மயக்கம், இரண்டாம் வேற்றுமை யுருபு நான்காம் வேற்றுமைப் பொருள் தந்து நின்றமையால்.

**கருத்து.** பொறாமையை உடையவன் வறுமையை அடைவன்.

அ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

**பொருள்.** அழுக்காறு என ஒரு பாவி—பொறாமை என்று சொல்லப்பட்ட ஒப்பற்ற பாவி, திரு செற்று தீயுழி உய்த்து விடும்— செல்வத்தைக் கெடுத்து நரகத்தின்கண் புகுத்தி விடும்.

**அகலம்.** தருமர் பாடம் ‘ பாவம்

**கருத்து.** பொறாமை செல்வத்தைக் கெடுத்து நரகத்திற் புகுத்தி விடும். 138.

அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கக் கெடும்.

**பொருள்.** அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான் கேடும்—கோடிய உள்ளத்தானது செல்வமும் நேரிய உள்ளத்தானது வறுமையும், நினைக்க கெடும்—(ஒருவன்) நினைக்கும் (கால) அளவில் அழியும்.

அகலம். மணக்குடவர் பாடம் 'நினைக்கக் கெடும்'. மற்றை நால்வர் பாடம் 'நினைக்கப் படும். "பொல்லா தவர்நன் மைபொருந் துவதும், நல்லார் மிகவன் றுயர்நண் ணுவதும், தொல்லார் வினையால் வரினுந் தொடர்பாய், நில்லா தெனும்வாய் மொழிநிச் சயமே'.—பிரபோதசந்திரோதயம்.

கருத்து. இவ் விரண்டும் வெகு விரைவில் நீங்குவன. 139.

ம. அழுக்காற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

பொருள். அழுக்காற்று அகன்றாரும் இல்லை—பொறாமையின்கண் (நின்று) செல்வ ராயினாரும் இல்லை; அஃது இல்லார் பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்—பொறாமை இல்லாதாருள் செல்வத்தின் நீங்கினாரும் இல்லை.

அகலம். தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் 'அழுக்காற் றகன்றாரும்'. பரிமேலழகர் பாடம் 'அழுக்கற் றகன்றாரும்'. நச்சர் பாடம் 'அழுக்காற் றகன்றதும்', 'பெருக்கத்திற் றீர்ந்ததும்'. இல்லார் என்பது ஏழாம் வேற்றுமைத் தொகை.

கருத்து. அழுக்காறு வறுமையையும், அழுக்காறின்மை செல்வத்தையும் கொடுக்கும். 140.

## மரு-ம் அதி:—கள்ளாமை.

அஃதாவது, திருடாமை.

க. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

பொருள். எள்ளாமை வேண்டுவான் என்பான்—(பிறர்) இகழாதிருத்தலை விரும்புவான் எனப்படுபவன், தன் நெஞ்சு

எனைத்து ஒன்றும் கள்ளாமை காக்க—தனது உள்ளம் எத்தன்மைத் தாய ஒரு) பொருளையும் திருடக் (கருதா)மல் காக்கக் கடவன்.

**கருத்து.** களவு இகழைத் தரும். 141.

உ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வே மெனல்.

**பொருள்.** பிறன் பொருளை கள்ளத்தால் கொள்வேம் என—பிறனுடைய பொருளைத் திருட்டுத்தனத்தால் கொள்வேம் என, உள்ளத்தால் உள்ளலும் தீதே—மனத்தால் நினைத்தலும் தீதே.

**அகலம்.** ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. கள்ளம்—திருட்டுத்தனம். தருமர், மணக்குடவர் பாடம் 'கள்ளத்தாற் கள்வே மெனல்'. நச்சர், பரிமேலழகர் பாடம் 'கள்ளத்தாற் கொள்வே மெனல்'. தாமத்தர் பாடம் 'கள்ளத்தாற் கொள்வோ மெனல்'. என என்பதே போதியதாகலான், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. உள்ளத்தால் என வேண்டாது கூறினர்.

**கருத்து.** களவு செய்ய நினைத்தலும் தீது. 142.

௩. களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும்.

**பொருள்.** களவினால் ஆகிய ஆக்கம்—களவால் உண்டாய செல்வம், அளவு இறந்து ஆவது போல கெடும்—அளவு கடந்து வளர்வது போல (த்தோன்றிக் கொண்டிருந்து) கெடும்.

**அகலம்.** தருமர் பாடம் 'ஆக்கம் விளையுங்கா லாவது'. "அல்லது செய்வா ரரும்பொரு ளாக்கத்தை, நல்லது செய்வார் நயப்பவோ—ஒல்லொலிநீர், பாய்வதே போலுந் துறைவகேள் தீயன, ஆவதே போன்று கெடும்" என்றார் பழமொழியார்.

**கருத்து.** களவினால் வரும் செல்வம் வளர்வது போலத் தோன்றுமே யன்றி உண்மையில் கெடும். 143.

ச. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும்.

**பொருள்.** களவின்கண் கன்றிய காதல்—களவின்கண் மிகுந்த ஆசை, விளைவின்கண் வீயா(த) விழுமம் தரும்—(அவ்வாசை) விளையுங்கால் நீங்காத துன்பத்தைத் தரும்.

**கருத்து.** களவின்கண் காதல் விளைவின்கண் துன்பம் தரும்.

ரு. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

**பொருள்.** அருள் கருதி அன்பு உடையர் ஆதல்-அருளை அவாவி அன்பை உடையவ ராதல், பொருள் கருதி பொச்சாப்பு பார்ப்பார்கண் இல்—(பிறன்) பொருளை அவாவி (அவனுடைய) மறதியை (எதிர்) பார்ப்பாரிடத்து இல்லை.

**அகலம்.** தருமர், நச்சர் பாடம் 'பொய்ச்சாப்பு'.

**கருத்து.** களவு செய்வார்க்கு அன்பு உண்டாகாது. 145.

சா. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்
கன்றிய காத லவர்.

**பொருள்.** களவின்கண் கன்றிய காதல் அவர்—களவின்கண் மிக்க வேட்கையை யுடையவர், அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார்—(தமது) எல்லையின்கண் நின்று ஒழுகல் செய்யார்.

**அகலம்.** தமது எல்லையின்கண் நின்று ஒழுகல் செய்யார்—பிறர் மனையின்கண் புகுந்து களவு செய்வர்.

**கருத்து.** களவினை விரும்புவோர் பிறர் மனை புகுந்தும் களவு செய்வார். 146.

எ. களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில்.

**பொருள்.** களவு என்னும் கார் அறிவு ஆண்மை—களவு என்று சொல்லப்படும் இருண்ட அறிவினை ஆளுதல், அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் இல்—(தமது) எல்லையுள் நின்றொழுகலாகிய வலிமையை விரும்பினாரிடத்து இல்லை.

**அகலம்.** அளவு என்பது ஆகுபெயர், அளவின்கண் நின்றொழுகலுக்கு ஆயினமையால். களவாகிய காரியத்தைக் காரறிவு என்னும் காரணமாக உபசரித்தார். தாமத்தர் பாடம் 'ஆற்ற லறிந்தார்கண்'

**கருத்து.** களவு செய்தற்குக் காரணம் களவால் செல்வம் ஆம் என்னும் மயக்க அறிவே. 147.

அ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

**பொருள்.** அளவு அறிந்தார் நெஞ்சத்து அறம் போல—தமது எல்லையுள் நின்றொழுகுவாரது உள்ளத்தின்கண் அறம் (நிற்றல்)போல, களவு அறிந்தார் நெஞ்சில் கரவு நிற்கும்—களவு செய்வாரது நெஞ்சத்தின்கண் வஞ்சகம் (நிலைத்து) நிற்கும்.

**கருத்து.** தமது எல்லையுள் நின்றொழுகுவோர் அறத்தையே கருதுவர்; களவினைச் செய்வோர் கரவையே கருதுவர். 148.

கூ. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.

**பொருள்.** களவு அல்லது மற்றைய தேற்றதவர்—களவு அல்லாதன (வாகிய) மற்றையவற்றை அறியாதவர், அளவு அல்ல செய்து வீவர்—(தமது) அளவுக்கு மிஞ்சிய செயல்களைச் செய்து அழிவர்.

**அகலம்.** ஆங்கு, ஏ, என்பன அசைகள். தேற்றாதவர் என்பது பிறவினை யாகலான், அது பிழைபட்ட பாடம் என்றறிக.

**கருத்து.** களவு செய்வார் தம் வலிமையின் அளவுக்கு மிஞ்சிய செயல்களைச் செய்தழிவர். **149.**

> ய. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
> தள்ளாது புத்தே ளுலகு.

**பொருள்.** கள்வார்க்கு உயிர் நிலை தள்ளும்—திருடுவார்க்கு உயிர் நிலையாகிய உடம்பு தவறும்; கள்ளார்க்கு புத்தேள் உலகு தள்ளாது—திருடாதார்க்குத் தெய்வ உலகம் தவறாது.

**அகலம்.** தவறும்—அழியும். களவு செய்யுங்கால் காணப்படின் கொல்லப்படுவன் என்பதைக் குறிக்கவேண்டி, உயிர்நிலை தள்ளும் என்றார். தவறாது—தவறாமல் எய்தும்.

**கருத்து.** களவு செய்வார் கொலையுண்டு இறப்பர்; களவை விடுத்தார் சுவர்க்கம் அடைவர். **150.**

## யச-ம்—அதி:—வாய்மை.

அஃதாவது, மனச்சான்று அறிந்ததை அறிந்தபடி சொல்லுதல்.

> க. தன்னெஞ் சறிந்தது பொய்யற்க பொய்த்தபின்
> றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

**பொருள்.** தன்னெஞ்சு அறிந்தது பொய்யற்க—தன் மனச்சான்று அறிந்ததனை அறிந்ததற்கு மாறாகக் கூறற்க; பொய்த்த பின்

தன் நெஞ்சே தன்னை சுடும்—அறிந்ததற்கு மாறாகக் கூறிய பின்னர்த் தன் மனச்சான்றே தன்னை வருத்தும்.

அகலம். தன் மனச்சான்று அறிந்ததை அறிந்தபடியே கூறுதல் வாய்மை என்றும், அறிந்ததற்கு மாறாகக் கூறுதல் பொய்ம்மை என்றும், பொய்ம்மை கூறுவதால் இன்னது விளையு மென்றும் கூறினர். 'நெஞ்சு' ஆகுபெயர், அதன் சான்றுக்கு ஆயினமையால். மனச்சான்று—மனத்தின்கண் சான்றாய் நிற்கும் அறிவு. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'அறிவது'. 'அறிந்தது' என்பது பொருத்தமான பொருளைத் தருதலானும், இன்னோசை பயத்தலானும், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. பரிமேலழகர் இக் குறளை மூன்றாங் குறளாகவும், உ, ௩ குறள்களை முறையே க, உ குறள்களாகவும் கொண்டனர். இக் குறள் வாய்மைக்கு விதி கூறுகின்றமையாலும், உ, ௩ குறள்கள் முறையே வாய்மைக்கு விலக்கும் பொய்மைக்கு விலக்கும் கூறுகின்றமையாலும் இது முதற் குறளாகவும், அவை உ, ௩ குறள்களாகவும் அமைக்கப்பட்டன.

கருத்து. தன் மனச்சான்று அறிந்ததை அறிந்தபடி வெளியிடுதல் வாய்மை. 151.

உ. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்.

பொருள். வாய்மை எனப்படுவது யாது என்னின்—வாய்மை என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாது என்றால், தீமை யாது ஒன்றும் இல்லாத சொலல்—(குற்றமற்ற உயிர்க்குத்) தீங்கு யாதொன்றையும் பயவாத சொற்களைச் சொல்லுதல்.

அகலம். மனச்சான்று அறிந்ததை அறிந்தபடி உரைத்தல் வாய்மை யாயினும், அது குற்றமற்ற உயிர்க்குத் தீங்கு பயக்குமாயின்,

அது வாய்மை எனச் சொல்லத்தக்கதன்று. இக் குறள் வாய்மைக்கு விலக்கு. இல்லாத என்பதும் சொல்லல் என்பதும் லகர வொற்றும், என்னின் என்பது னகர வொற்றும் கெட்டு நின்றன.

கருத்து. குற்றமற்ற உயிர்க்குத் தீங்கு விளைக்குமாயின், வாய்மையும் பொய்ம்மை யாம். 152.

ந. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

பொருள். புரை தீர்ந்த நன்மை பயக்கும் என்னின்—குற்றமற்ற நன்மையைக் கொடுக்கும் என்றால், பொய்ம்மையும் வாய்மை இடத்த—பொய்ம்மை (களும்) வாய்மையின் இடத்தன (வாம்).

அகலம். இக் குறள் பொய்ம்மைக்கு விலக்கு. வாய்மையின் இடத்தன—வாய்மையின் இடத்தில் வைக்கப்படத் தக்கவை. பொய்ம்மை பல திறத்தன வாகலான், அதனைப் பன்மைப் பொருளிற் கூறினர்.

கருத்து. புரை தீர்ந்த நன்மையைப் பயப்பின், பொய்ம்மையும் வாய்மை யாம். 153.

ச. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன்.

பொருள். உள்ளத்தால் பொய்யாது ஒழுகின்—(ஒருவன்) மனச்சான்றுக்குப் பொய்யாமல் ஒழுகின், உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்—உலகத்திலுள்ளவர்கள் உள்ளத்து ளெல்லாம் உளன் (அவன்.)

அகலம். உள்ளம் என்பது ஆகுபெயர், உள்ளச் சான்றுக்கு ஆயினமையால். உள்ளத்தால் என்பது வேற்றுமை மயக்கம், மூன்

றும் வேற்றுமை யுருபு நான்காம் வேற்றுமைப் பொருள் தந்து நின் றமையால்.

கருத்து. பொய் கூறுதான் உலகத்தா ரெல்லாராலும் போற் றப் படுவான். 154.

ரு. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

பொருள். மனத்தொடு வாய்மை மொழியின்—(ஒருவன்) உள் ளத்தோடு பொருந்தி உண்மையைக் கூறின், தவத்தொடு தானம் செய்வாரில் தலை—தவமும் தானமும் செய்பவருள் தலையானவன்.

அகலம். பிந்திய 'ஒடு' உம்மைப் பொருளில் வந்தது. தான மும் என்பது உம்மை கெட்டு நின்றது.

கருத்து. மனத்தோடு கூடி வாய்மை மொழிவோன் அகத் துறவியினும் சிறந்தவன். 155.

சு. பொய்யாமை யன்ன புகழில்லை பொய்யாமை
யெல்லா வறமுந் தரும்.

பொருள். பெய்யாமை அன்ன புகழ் இல்லை-பொய்யாமையை ஒத்த புகழ்க் காரணம் இல்லை; பொய்யாமை எல்லா அறமும் தரும்—(அன்றியும்,) பொய்யாமை எல்லா அறங்களையும் தரும்.

அகலம். புகழ் என்பது ஆகுபெயர், அதன் காரணத்திற்கு ஆயினமையால். ஒருவன் வாய்மையைக் கைக்கொள்ளின், அவன் மறங்களை யெல்லாம் விட நேரும்; மறங்களை யெல்லாம் விடவே, அவன்அறங்களை யெல்லாம் புரிய நேரும். அதுபற்றியே 'பொய்யாமை எல்லா வறமுந் தரும்' என்றார். மணக்குடவர் பாடம் 'பொய்யாமை யெல்லா அறமும்'. மற்றைய உரையாசிரியர்கள் பாடம் 'எய்யாமை யெல்லா வறமும்'. எய்யாமை என்பது எவ்வகைப் பொருத்தமான

பொருளையும் தாராமையான், மணக்குடவர் பாடமே ஆசிரியர் பாடமெனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** வாய்மை கூறுதல் எல்லா அறங்களையும் புகழையும் தரும். 156.

எ. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

**பொருள்.** பொய்யாமை பொய்யாமை ஆற்றின்—(ஒருவன்) பொய்யாமையைப் பொய்யாமல் ஆற்றின், பிற அறம் செய்யாமை செய்யாமை நன்று—மற்றை அறங்களைச் செய்யாமையைச் செய்யாமை நன்மை.

**அகலம்.** பொய்யாமையைப் பொய்யாமல் ஆற்றல்—வாய்மையைச் சிறிதும் மாற்றுமல் கூறுதல். செய்யாமையைச் செய்யாமை—செய்தல். இரண்டு எதிர்மறைச் சொற்கள் சேர்ந்து ஓர் உடன்பாட்டுப் பொருளைத் தந்தன.

**கருத்து.** ஒருவன் வாய்மையைக் கூறின் மாத்திரமே, அவன் பிற அறங்களைச் செய்தலால் பயன் உண்டு. 157.

அ. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

**பொருள்.** புறம் தூய்மை நீரான் அமையும்—உடம்பினது தூய்மை நீரால் உண்டாகும்; அகம் தூய்மை வாய்மையால் காணப் படும்—உள்ளத்தினது தூய்மை வாய்மையால் அறியப்படும்.

**அகலம்.** மணக்குடவர், தாமத்தர் பாடம் 'நீரால்'. அகந் தூய்மை காட்சி யளவையான் அறியப்பட முடியாத தொன்றுகலான், அதனை வாய்மையால் அறிய லாகும் என்றுர்.

கருத்து. வாய்மை அகத்தைத் தூயதாக்கும். 158.

௯. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

பொருள். சான்றோர்க்கு எல்லா விளக்கும் விளக்கு அல்ல—சான்றோர்க்கு எல்லா ஒளிகளும் ஒளிகள் அல்ல; பொய்யா விளக்கே விளக்கு—பொய்யாமை (யால் வரும்) ஒளியே ஒளி.

அகலம். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. பொய்யாமையின் காரியமாகிய விளக்கைப் பொய்யா விளக்கு என்றார்.

கருத்து. பொய்யாமையாகிய விளக்கு ஒன்றே மெய்ப்பொருளைக் காட்டும். 159.

௰. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற.

பொருள். மெய்யா (க) யாம் கண்டவற்றுள்—உண்மையாக யாம் கண்டவற்றுள், வாய்மையின் நல்ல எனைத்து ஒன்றும் இல்லை—வாய்மையைப் போல நல்லவை எத்தன்மைத்தாய ஒன்றும் இல்லை.

அகலம். 'பிற' அசை. மெய்யாக என்பது ஈறு கெட்டு நின்றது. இக் குறள் "ஒன்றாக நல்லது" என்னும் தொடக்கத்துக் குறளுக்கு மாறுபடாதோ என்னின், மாறு படாது. என்னை? இக் குறள் கொள்ளவேண்டிய அறங்களில் தலையாயதைக் கூறுகின்றது. அக் குறள் தள்ளவேண்டிய மறங்களில் தலையாயதைக் கூறுகின்றது.

கருத்து. வாய்மை கூறுதலைப் போன்ற நல்லொழுக்கம் வேறொன்றும் இல்லை. 160.

## ௰௯-ம் அதி:—புறங் கூறாமை.

அஃதாவது, (பிறன்) புறத்தில் (அவனைப் பழித்து) உரையாமை.

க. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது.

**பொருள்.** ஒருவன் அறம் கூறான் அல்ல செய்யினும்—ஒருவன் அறங்களைக் கூறாதவனாய் மறங்களைச் செய்யினும், புறங்கூறான் என்றல் இனிது—புறங்கூறான் என்று சொல்லப்படுதல் (கேட்டோர்க்கு) இன்பம் பயக்கும்.

**கருத்து.** புறங்கூறல் மறஞ் செய்தலினும் தீது. 161.

உ. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை.

**பொருள்.** புறன் அழீ பொய்த்து நகை—(ஒருவனது) புறத்தில் (அவனை) இழித்துக் கூறி (அவன் முன்னே உயர்த்துக் கூறிப்) பொய்த்து நகையாடல், அறன் அழீ அல்லவை செய்தலின் தீதே—அறங்களை அழித்து மறங்களைச் செய்தலினும் தீதே.

**அகலம்.** ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. அழித்துக் கூறலை அழித்தல் என்றார். ஒருவனை இழித்துக் கூறுதல் அவனது பெருமையை அழித்தலால், இழித்தலை அழித்தல் என்றார். அளபெடைகள் இரண்டும் இன்னிசைக்கண் வந்தன.

**கருத்து.** இதுவும் அது. 162.

ங. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும்.

**பொருள்.** புறம் கூறி பொய்த்து உயிர் வாழ்தலின்—(ஒருவனது) புறத்தே (அவனைப்) பழித்துக் கூறியும் (அவன் முன்னே) புகழ்ந்து கூறியும் உயிர் வாழ்தலினும், சாதல் அறம் கூறும் ஆக்கம் தரும்—இறத்தல் அற நூல் (புறங் கூறாமைக்குச்) சொல்லும் நன்மை (எல்லாம்) தரும்.

# புறங் கூறாமை.

அகலம். புறங் கூறிப் பொய்த்து உயிர் வாழ்தல் என்றமையால், பொய்த்து என்பதற்கு (அவன் முன்னே) உயர்த்துக் கூறி என்று பொருள் உரைக்கப் பட்டது. சாதல் என்பது இயற்கைச் சாவைக் குறித்து நின்றது. அறம் என்பது ஆகுபெயர், அறநூலுக்கு ஆயினமையால்.

கருத்து. புறங்கூறி வாழ்தலினும் சாதல் நன்று. 163.

ச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல்.

பொருள். கண் நின்று கண் அற சொல்லினும்—(ஒருவனது) கண்முன் நின்று கண்ணோட்டம் நீங்க (அவன் குறைகளைக்) கூறினும், முன் இன்று பின் நோக்கா சொல் சொல்லற்க—(அவன்) முன் இல்லாமல் (அவனைப்) பின் நோக்காமைக்கு ஏதுவாகிய சொற்களைச் சொல்லற்க.

அகலம். நோக்காமைக்கு ஏதுவாகிய சொல்லை நோக்காச் சொல் என்றார். அச் சொல்லாவது, புறங்கூறல். முன் இல்லாமல் என்பது பின் நின்று எனப் பொருள் தந்து நின்றது. கண்ணோட்டம்—இரக்கம். நச்சர் பாடம் 'பின்னோக்குஞ் சொல்'.

கருத்து. புறங்கூறல் கண்ணோட்ட மின்மையினும் தீது. 164.

ரு. அறஞ்சொல்வா னெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

பொருள். அறம் சொல்வான் நெஞ்சத்தான் அன்மை—அறங்களைச் சொல்பவன் உள்ளத்தால் மறங்களை உள்ளுபவனா யிருத்தல், புறம்சொல்லும் புன்மையால் காணப்படும்—(அவன்) புறங் கூறும் இழிசெயலால் அறியப்படும்.

அகலம். 'அன்மை' அப் பொருட்டாதலை "விழுப்பேற்றின்" என்னும் தொடக்கத்துக் குறளின் அகலத்திற் காண்க. முந்திய

உரையாசிரியர்கள் பாடம் ' அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை இப்பாடம் பொருத்தமான பொருளொன்றையும் தாராமையின், ' அறஞ் சொல்வான் ' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

கருத்து. அறஞ் சொல்பவன் புறஞ்சொல்லுவ னாயின், அவன் அறச் சொற்களெல்லாம் பொய்ச் சொற்கள் என்றறிக. 165.

சு. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

பொருள். பிறன் பழி கூறுவான்—பிறன் (புறத்தில் அவன்) பழிகளைக் கூறுபவன், தன் பழி உள்ளும் திறன் தெரிந்து கூறப் படும்—தன் பழி யுள்ளும் திறனுனவற்றைத் தெரிந்து (மற்றவரால்) கூறப்படுவான்.

அகலம். "பல்லா ரவைநடுவண் பாற்பட்ட சான்றவர், சொல்லா ரொருவரைய முள்ளூன்றப்—பல்லா, நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும், உரைத்தா லுரைபெறுத லுண்டு" என்றார் பழமொழியார்.

கருத்து. புறங்கூறுவான் பிறரால் புறங்கூறப்படுவான். 166.

எ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற் தவர்.

பொருள். நக சொல்லி நட்பு ஆடல் தேறுதவர்—மகிழும் படி (நல்ல சொற்களைச்) சொல்லி நட்புச் செய்தலை அறியாதவர், பக சொல்லி கேளிர் பிரிப்பர்—பிரியும்படியாகப் புறங்கூறி (த்தம்) நண்பரைப் பிரிப்பர்.

அகலம். 'கேளிர்', 'ஆடல்' இரண்டாம் வேற்றுமைத் தொகைகள். தாமத்தர் பாடம் 'பகைச்சொல்லின்', 'நகைச்சொல்லின்'.

மூந்திய உரையாசிரியர்கள் பாடம் 'தேற்றாதவர்'. தேற்றாதவர் என்பது ஈண்டுப் பொருத்தமற்ற பிறவினைப் பொருளைத் தருத தலான், அது பிழைபட்ட பாடம் என அறிக.

கருத்து. புறங்கூறுவார் தமது நண்பரையும் பகையாக்கிக் கொள்வர். 167.

அ. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னர்கொ லேதிலார் மாட்டு.

பொருள். துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்—நெருங் கிய நண்பரது குற்றத்தையும் (பலர் அறியும்படி புறஞ்) சொல்லும் இயல்புடையவர், ஏதிலார்மாட்டு என்னர்—பகைவரிடத்து எத் தன்மைய ராவர்?

அகலம். நண்பரது புறத்தில் அவர் குற்றங்களை எடுத்துக் கூறுபவர் பகைவரது புறத்தில் அவரிடத்து இல்லாத குற்றங்களை யும் எடுத்துக் கூறுவர் என்றவாறு. 'கொல்' அசை. தருமர், தாமத் தர், பரிமேலழகர் பாடம் 'என்னைகொல்'. மணக்குடவர், நச்சர் பாடம் 'என்னர்கொல்'. தருமர் பாடம் 'மரபினர்'.

கருத்து. புறங்கூறுவார் பொய்ப்பழியுங் கூறுவர். 168.

கூ. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

பொருள். புறன் நோக்கி புன்சொல் உரைப்பான் பொறை—(பிறனது) புறத்தை நோக்கி இழிசொல் கூறுபவனுடைய உடற் சுமை யினை, அறம் நோக்கி வையம் ஆற்றும் கொல்—(யாவரையும் சுமப் பது தனது கடனென்ற) அறத்தை நோக்கிப் பூமி தாங்குங் கொல்?

அகலம். கொல் என்னும் அசைச்சொல் ஈண்டு வினாப் பொருளில் வந்தது. பிறனது புறத்தை நோக்கி—பிறன் இல்லாத

இடத்தைப் பார்த்து. மணக்குடவர் பாடம் 'அறநோக்கி', 'புற நோக்கி'.

கருத்து. புறங்கூறுவாரது சாவைப் பலரும் விரும்புவர். 169.

ய. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு.

பொருள். ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம் காண்கின்—பகைவரது குற்றங்களைக் காண்டல் போல் தமது குற்றங்களைக் காணின், பின் மன்னும் உயிர்க்கு தீது உண்டோ—பின்னர் நிலையுடைய மானிட உயிர்களுக்குத் தீமை உண்டோ? (இல்லை.)

அகலம். ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

கருத்து. அன்னியர் குற்றங்களைக் காண்டல்போல் தன் குற்றங்களை ஒருவன் காணின், தன் குற்றங்களை விடுத்து மேம்படுவான். 170.

## யஉ-ம் அதி:—தீவினை யச்சம்.

அஃதாவது, தீவினை செய்தற்கு அஞ்சுதல்.

க. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

பொருள். தீவினை என்னும் செருக்கு—தீய வினையை விளைக்கும் செருக்கினை, தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்—தீய வினைகளைச் செய்துகொண்டிருக்கிறவர் அஞ்சார்; நல்ல வினைகளைச் செய்துகொண்டிருக்கிறவர் அஞ்சுவர்.

அகலம். தீய வினை புரிதற்குக் காரணம் செருக்கு என்றும், அச் செருக்கிற்கு இடங்கொடுக்க லாகாதென்றும் கூறியவாறு. விழுமம்—நன்மை—நல்வினை. தாமத்தர் பாடம் 'என்னுஞ் செயற்கு'. தீவினையாகிய காரியத்தைச் செருக்காகிய காரணமாக உபசரித்தார்.

## தீவினை யச்சம்.

கருத்து. தீவினை புரிதற்கு அஞ்சுதல் வேண்டும். 171.

உ. தீயவே தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

பொருள். தீய தீயவே பயத்தலால்—தீ வினைகள் தீய பயன் களையே விளைத்தலால், தீயவை தீயினும் அஞ்ச படும்—(ஒருவன்) தீய வினைகளைத் தீயினும் மிக அஞ்ச வேண்டும்.

அகலம். தீயானது தீயவும் நல்லவும் பயத்தலானும், தீய வினை தீயவே பயத்தலானும், தீய வினைகளைத் தீயினும் அஞ்ச வேண்டும் என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'தீயவை தீய'. அது பிழை பட்ட பாடம், 'ஏ' இன்றியமையாத தாகலான்.

கருத்து. தீய வினை தீயினுங் கொடிது. 172.

ஙூ. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

பொருள். செறுவார்க்கும் தீய செய்யா(து)விடல்—பகைவர்க் கும் தீங்குகள் செய்யாது விடுதல், அறிவினுள் எல்லாம் தலை—அறிவினு ளெல்லாம் தலையாய அறிவு.

அகலம். செய்யாது என்பது செய்யுள் விகாரத்தால் ஈறு கெட்டு நின்றது. 'என்ப' அசை.

கருத்து. தீவினை புரியாமை சிறந்த அறிவு. 173.

ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

பொருள். மறந்தும் பிறன் கேடு சூழற்க—(ஒருவன்) மறந்தும் பிறனது கேட்டை எண்ணற்க; சூழின் சூழ்ந்தவன் கேடு அறம் சூழும்—(பிறனது கேட்டை) எண்ணின் (அவ்வாறு) எண்ணியவனது கேட்டை அறக் கடவுள் எண்ணும்.

**கருத்து.** பிறன் கேட்டைக் கருதியவனுக்குக் கடவுள் கேடு நினைப்பர். 174.

ரு. இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து.

**பொருள்.** இலன் என்று தீயவை செய்யற்க—(தான் பொருள் இல்லாதவன் என்று நினைத்து (ப்பொருள் ஈட்டுதற்காகத்) தீய வினைகளை (ஒருவன்) செய்யாதிருக்கக் கடவன்; செய்யின் மற்றும் பெயர்த்து இலன் ஆகும்—(தீய வினைகளைச்) செய்யின் உள்ளதும் நீங்கி இல்லாதவன் ஆவன்.

**அகலம்.** உள்ளதாவது, தான் பொருள் இல்லாதவன் என்று அறிந்த அறிவு. **மணக்குடவர்** பாடம் 'இலமென்று'. இல்லது காரணமாகத் தீவினை செய்யின் என்றமையால், மற்றும் என்பதற்கு உள்ளதும் என்று பொருள் உரைக்கப்பட்டது.

**கருத்து.** தீய வினை புரிபவன் தன் அறிவையும் இழப்பன். 175.

சு. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான்.

**பொருள்.** நோய் பால தன்னை அடல் வேண்டாதான்—பிணிப் பகுதியன தன்னை வருத்துதலை விரும்பாதவன், தீ பால பிறர்கண் செய்யற்க—தீமைப் பகுதியனவற்றைப் பிறர்மாட்டுச் செய்யாதிருக்கக் கடவன்.

**அகலம்.** பிணிப் பகுதியன—பிணி வகையிற் சேர்ந்தவை. தீமைப் பகுதியன—தீமை வகையிற் சேர்ந்தவை. 'தான்' அசை.

**கருத்து.** தீவினை புரிவார் நோய்பல கொள்வர். 176.

எ. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

**பொருள்.** எனை பகை உற்றாரும் உய்வர்—எத்தகைய(பெரிய) பகையை அடைந்தவரும் தப்புவர்; வினை பகை வீயாது பின் சென்று அடும்—(தீய) வினையாகிய பகை நீங்காது (தன்னைச் செய் தவன்) பின்னே சென்று (அவனை) வருத்தும்.

**கருத்து.** தீய வினை புரிவாரைக் கெடுத்தற்கு வேறு பகை வர் வேண்டா; அதுவே போதும் 177.

அ. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று.

**பொருள்.** தீயவை செய்தார் கெடுதல்—தீய வினைகளைச் செய்தவர் அழிதல், நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று—(ஒரு வன்) நிழல் அவனை (விட்டு) நீங்காது (அவன்) அடிகளின் கீழ்த் தங்கினாற் போலும்.

**அகலம்.** அடி என்பது ஏழாம் வேற்றுமைத் தொகை. உறைந் தற்று என்பது வினையெச்சத் தொகை. அஃது உறைந்தால் அற்று. என விரியும். மணக்குடவர் பாடம் 'தீவினை செய்தார்'.

**கருத்து.** தீவினை புரிவார் கேடுறுதல் திண்ணம். 178.

கூ. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.

**பொருள்.** தன்னை தான் காதலன் ஆயின்—தன்னைத் தான் காதலிப்பவனாயின், தீவினை பால் எனைத்து ஒன்றும் துன்னற்க—தீ வினைப் பகுதிகளில் எவ்வளவு சிறியதான ஒன்றையும் நெருங்கா திருக்கக் கடவன்.

**கருத்து.** தன்னைக் காதலிப்பவன் தீவினையை அணுகற்க. 179.

ம. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.

**பொருள்.** மருங்கு ஓடி தீ வினை செய்வான் என்னின்—(ஒருவன் அற நெறியை விட்டுப்) பக்கத்தில் ஓடித் தீய வினைகளைச் செய்வான் என்றால், அரு கேடன் என்பது அறிக—நீக்குதற்கு அரிய கேட்டை யுடையவன் என்று அறியக்கடவன்.

**அகலம்.** மூர்த்திய உரையாசிரியர்கள் பாடம் 'செய்யா னெனின்'. அது பிழைபட்ட பாடம், 'அருங் கேடன்' என்பதற்கு 'நீக்குதற்கரிய கேட்டை யுடையவன்' என்பதே பொருளாகலானும், ஒன்றைச் செய்தற்கே ஓடுதல் இயற்கை யாகலானும்.

**கருத்து.** தீவினை செய்பவன் நீங்காத கேட்டை அடைவன்.

## ௰௩-ம் அதி:—ஒப்புர வறிதல்.

அஃதாவது, நாடொப்பன செய்தல். 'அறிதல்' என்பது ஈண்டுச் செய்தற் பொருட்டு.

> க. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
> டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

**பொருள்.** கடப்பாடு கைமாறு வேண்டா—ஒப்புரவுகள் கைம்மாற்றை விரும்பா; மாரிமாட்டு உலகு என் ஆற்றும்—மழைக்கு உலகம் யாது கைம்மாற்றினைச் செய்யும்? (ஒன்றும் செய்ய இயலாது.)

**அகலம்.** கொல், ஓ என்பன அசைகள். கைம்மாறு—பிரதியுபகாரம். கடப்பாடு என்றமையாலும், மழையை உவமானமாகக் கூறினமையாலும், ஒப்புர வென்பது கைம்மாறு கருதாத உதவி என்று கொள்க. ஒப்புரவு தவிர்க்கப்படுவ தன்று என்பதை உணர்த்த வேண்டி, அதனைக் கடப்பாடு என்றார். ஒப்புரவு செய்வாரது வேண்டாமையை ஒப்புரவின்மேல் ஏற்றிக் கூறினார்.

**கருத்து.** ஒப்புரவு கைம்மாறு கருதாத உதவி. 181.

உ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.

**பொருள்.** தாள் ஆற்றி தந்த பொருள் எல்லாம்—முயற்சி செய்து தந்த பொருளெல்லாம், தக்கார்க்கு வேளாண்மை செய்தல் பொருட்டு—தகுதி யுடையார்க்கு உதவி செய்தற் பொருட்டு.

**அகலம்.** 'ஆற்றித் தந்த' என்பதற்குத் 'தாள்' என்பதை கர்த்தாவாகக் கொள்க.

**கருத்து.** சம்பாதிக்கும் பொருளெல்லாம் தக்கார்க்கு உதவி செய்தற் பொருட்டே. 182.

௩. புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற.

**பொருள்.** ஒப்புரவின் பிற நல்ல—ஒப்புரவு போன்ற மற்றை நல்ல செயல்களை, புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல் அரிது—தெய்வ உலகத்தும் இவ் வுலகத்தும் பெறுதல் அரிது.

**அகலம்.** ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. மணக்குடவர் பாடம் 'பெறற்கரிதே'.

**கருத்து.** ஒப்புரவு போன்ற நல்லவை இவ் வுலகத்திலும் தெய்வ உலகத்திலும் இல்லை. 183.

௪. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.

**பொருள்.** ஒத்தது அறிவான் உயிர் வாழ்வான்—(நாட்டுக்கு) ஒத்த செயலைச் செய்பவன் உயிரோடு கூடி வாழ்பவன்; மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்—அச் செயலைச் செய்யாதான் இறந்தவருள் (ஒருவனாகக்) கருதப்படுவான்.

அகலம். நாட்டுக்கு ஒத்த செயல்—ஒப்புரவு.

கருத்து. ஒப்புரவு செய்கின்றவன் உயிரோடு கூடி வாழ்கின்றவன்; ஒப்புரவு செய்யாதான் பிணத்தை ஒப்பன். 184.

௫. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு.

பொருள். உலகு அவாவும் பேர் அறிவாளன் திரு (அடைதல்)—உலக நடையை விரும்பிச் செய்யும் பெரிய அறிவினை ஆள்கின்றவன் செல்வத்தை அடைதல், ஊருணி நீர் நிறைந்து அற்று—ஊருணி நீர் நிறைந்தாற் போலும்.

அகலம். ஊருணி—ஊரில் வாழ்வார் உண்ணும் நீரையுடைய குளம். உலகு என்பது ஆகுபெயர், உலக நடைக்கு ஆயினமையால். உலக நடையாவது, ஒப்புரவு. நிறைந்தற்று என்பது வினையெச்சத் தொகை. ஊருணி நீரை ஊரார் தடையின்றித் துய்த்தல்போல, ஒப்புர வுடையான் செல்வத்தை ஊரார் தடையின்றித் துய்ப்பர் என்று கூறிய வாறு. 'அடைதல்' அவாய் நிலையான் வந்தது. ஏகாரம் அசை. அவாவும் என்பது ஈற்றயல் கெட்டு நின்றது. "ஊருணி நிறையவு முதவு மாடுயர், பார்கெழு பழுமரம் பழுத்தற் றாகவும், கார்மழை பொழியவுங் கழனி பாய்நதி, வார்புனல் பெருகவும் மறுக்கின் றார்களியார்" என்றார் கம்பர்.

கருத்து. ஒப்புர வுடையான் செல்வம் ஊரார்க்குப் பயன் படும்.

௬. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின்.

பொருள். நயன் உடையான்கண் செல்வம் படின்—ஒப்புரவு உடையானிடத்தில் செல்வம் பொருந்தின், (அது) பயன் மரம் ஊர் உள் பழுத்து அற்று—அது பயன் மரம் ஊரினுள் பழுத்தாற் போலும்

# ஒப்புர வறிதல்.

அகலம். ஊருணி பழுத்த மரம் ஊரார்க்கெல்லாம் பயன் படு தல் போல ஒப்புர வுடையான் செல்வம் ஊரார்க்கெல்லாம் பயன் படும் என்ற வாறு. ஆல் என்பது அசை. தருமர், மணக்குடவர் பாடம் 'பயமரம்'.

கருத்து. ஒப்புர வுடையான் செல்வம் ஊரார்க் கெல்லாம் உதவும். 186.

எ. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.

பொருள். பெருந் தகையான்கண் செல்வம் படின்—(ஒப்புரவு செய்யும்) பெருந்தகைமையை யுடையானிடத்துச் செல்வம் பொருந் தின், (அது) மருந்து ஆகி தப்பா மரம் (இருத்தல்) அற்று—அது மருந்தாகித் தவறாத மரம் (இருத்தலைப்) போலும்.

அகலம். தப்பா(த)மரம்-கொள்ளுதற்குத் தப்பாத மரம். மருந் தாகப் பயன் படும் மரம் யாரும் கொள்ளத்தக்க வாறு இருப்பின் அது மக்கட்கு எவ்வளவு பயன் படுமோ, அவ்வளவு பயன் படும் மக்கட்கு ஒப்புரவு செய்யும் பெருந்தகையானிடம் இருக்கும் செல்வம் என்றவாறு. தாமத்தர் பாடம் 'மருந்தாகித் தீர்க்கு மரத்தற்றால்' 'அத்து' சாரியை. 'ஆல்' அசை.

கருத்து. ஒப்புர வுடையான் செல்வம் வறிஞர்க் கெல்லாம் மருந்து போல் உதவும். 187.

அ. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

பொருள், கடன் அறி காட்சி அவர்—(ஒப்புரவு செய்தல் தமது) கடன் என்று அறிந்த அறிவினை யுடையவர், ஒப்புரவிற்கு

இடன் இல் பருவத்தும் ஒல்கார்—ஒப்புரவு செய்தற்கு இடம் இல்லாத காலத்தும் தளரார்.

**அகலம்.** "அடர்ந்து வறியரா யாற்றாத போழ்தும், இடங்கண் டறிவாமென் றெண்ணி யிராஅர், மடங்கொண்ட சாயன் மயிலன்னாய் சான்றோர், கடங்கொண்டுஞ் செய்வார் கடன்" என்றார் பழமொழியார்.

**கருத்து.** ஒப்புரவு அறிந்தார் வறுமையுற்ற காலத்தும் ஒப்புரவு செய்வர். 188.

> கூ. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
> செய்ய வமைகலா வாறு.

**பொருள்.** நயன் உடையான் நல்கூர்ந்தான் ஆதல்—ஒப்புரவு உடையான் வறிஞன் ஆதல், செய்யும் நீர செய்ய அமைகலா(த) ஆறு—செய்யும் நீர்மையனவாகிய ஒப்புரவுகளைச் செய்ய முடியாத இடத்தே.

**அகலம்.** செய்யும் என்பதன் யகர வொற்றும், அமைகலாத என்பதன் ஈறும், ஏகாரமும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'செய்யா தமைகலா வாறு'. 'செய்ய அமைகலா வாறு' என்பதே கருதிய பொருளைத் தருதலானும், செய்யா தமைகலா வாறு' என்பது பொருத்தமான பொருளைத் தாராமையானும் 'செய்ய அமைகலா' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** ஒப்புரவு செய்வான் தான் வறிஞன் என்று உணர்வது, தான் செய்யவேண்டியஒப்புரவுகளைச் செய்ய முடியாதவிடத்தே.

> ய. ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
> விற்றுக்கோட் டக்க துடைத்து.

**பொருள்.** ஒப்புரவினால் கேடு வரும் எனின்—ஒப்புரவு செய்தலினால் (தனக்குக்) கேடு வரும் என்றால், அஃது ஒருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து—ஒப்புரவை ஒருவன் விற்றுக் (கேட்டைக்) கொள்ளுதல் தகுதி உடைத்து.

**அகலம்.** ஒப்புரவைக் கொடுத்துக் கேட்டைக் கொள்ளுதல் தகுதி யுடைத்து என்ற வாறு. விற்றல்—கொடுத்தல். கொள்ளுதல்—வாங்குதல். 'கோள்' முதனிலை திரிந்த தொழிற்பெயர். எனின் என்பது னகர வொற்றுக் கெட்டு நின்றது. ஒருவன் தன்னை விற்றாயினும் ஒப்புரவு செய்தல் வேண்டும் என்று உரைப்பாரும் உளர். "உளவரை தூக்காத ஒப்புர வாண்மை, வளவரை வல்லைக் கெடும்" என்று ஆசிரியர் பின்னர்க் கூறுகின்றமையால், அவ் வுரை பொருந்தாது.

**கருத்து.** கேடு வரு மெனினும் ஒப்புரவு செய்க. 190.

உ௰-ம் அதி:—ஈகை.

அஃதாவது, (இல்லார் வேண்டுவன) ஈதல்.

க. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

**பொருள்.** வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை—(பொருள்) இல்லாதார்க்கு (அவர் வேண்டுவது) ஒன்றை ஈதலே ஈகை; மற்று எல்லாம் குறியெதிர்ப்பை நீரது உடைத்து—ஏனையோர்க்கு ஈத லெல்லாம் குறியெதிர்ப்பையின் தன்மையை யுடைத்து.

**அகலம்.** குறியெதிர்ப்பை—ஒரு பொருளைக் கொள்ளக் குறித்து அதற்கு எதிராகக் கொடுப்பது. அஃதாவது, பண்டமாற்று. "நிரப்பிடும்பை மிக்கார்க் குதவவொன் றீதல், சுரத்திடைப் பெய்த பெயல்".—பழமொழி நானூறு. "ஏற்றகை மாற்றாமை யென்னு னுந் தாம்வரையார், ஆற்றுதார்க் கீவதா மாண்கடன்—ஆற்றின்,

மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல், பொலிகட னென்னும் பெயர்த்து.''—**நாலடியார்.** ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

**கருத்து.** வறியார்க்கு ஈவதே ஈகை. 191.

உ. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று.

**பொருள்.** நல் ஆறு என்னினும் கொள்ளல் தீது—(மேல் உலகத்திற்கு) நல்ல நெறி என்று (நூல்களெல்லாம்) கூறினும் (பிறர் பால் ஒன்றை) ஏற்றல் தீமை; மேல் உலகம் இல் என்னினும் ஈதல் நன்று—மேல் உலகம் இல்லை என்று (நூல்களெல்லாம்) கூறினும் (பிறருக்கு) ஈதல் நன்மை.

**அகலம்.** ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. கொள்ளல் என்பதன் ளகர வொற்றும், என்னினும் என்பதன் னகர வொற்றும் கெட்டு நின்றன. "வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்' வள்ளிய ராக வழங்குவ தல்லால், எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும், கொள்ளுத றீது கொடுப்பது நன்றால்'' என்றார் **கம்பர்.** மேல் உலகம்—வீட்டுலகம்.

**கருத்து.** ஏற்றல் இழிவு; ஈதல் உயர்வு. 192.

ந. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.

**பொருள்.** இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்—(இவன்) இல்லாதவன் என்னும் இழிவை (ஒருவரிடத்தும்) சொல்லாமல் (அவனுக்கு) ஈதல், குலன் உடையான்கண் உள—நற்குலத்தின்கண் பிறந்தானிடத்து உள்ளன.

**அகலம்.** இல்லன் என்பது லகர வொற்றுக் கெட்டு நின்றது. உரையாமை என்பது எதிர்மறை வினையெச்சம். இலனென்னும்

எவ்வம் உரையாமை எல்பதற்கு இரப்போன் தான் இலன் என்று உரையா முன்னர் அவன் குறிப்பறிந்து எனவும், இரக்கப்பட்டோன் ' யான் இலன் ' என்னும் இழி சொல்லை உரையாமல் எனவும், இரந்தோன் தன்னிடம் ஏற்ற பின்னர்ப் பிறர்பால் சென்று தான் இலன் என்னும் இழிவை மீண்டும் உரையாத வாறு அவன் வறுமை நீங்கும் படியாக எனவும் உரைத்தலும் அமையும். ஈதல் பல திறத்தன வாகலின், அது பன்மைப் பொருளிற் கூறப் பெற்றது. தருமர் பாடம் ' இலமென்னும் '. ஏகாரம் அசை.

**கருத்து.** உயர் குடிக்கு அழகு உவப்புடன் ஈதல். **193.**

> இன்னா திரக்கப் படுத லிரந்தவ
> ரின்முகங் காணு மளவு.

**பொருள்.** இரந்தவர் இன் முகம் காணும் அளவு(ம்)—(தன்பால் பொருள் ஏற்று மகிழ்ச்சியுற்ற) இரந்தவரது இனிய முகத்தைக் காணும் வரையிலும், இரக்கப்படுதல் (உம்) இன்னாது—(இரத்தலே போல) இரக்கப்படுதலும் துன்பம் தருவது.

**அகலம்.** இரக்கப்படுதலும் என்பதன் எச்சவும்மையும், அளவும் என்பதன் முற்றும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்கன.

**கருத்து.** ஈவான் தான் ஈயும் வரையில் துன்புறுவன். **194.**

> ரு. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
> மாற்றுவா ராற்றலிற் பின்.

**பொருள்.** ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்—(தவம்) இயற்றுவாரது வலிமை (தம்) பசியைப் பொறுத்தல்; (அஃது) அப் பசியை மாற்றுவார் ஆற்றலின் பின்—அஃது (பசித்தோர்க்கு) உணவு கொடுத்து) அப் பசியை நீக்குவாருடைய வலிமைக்குப் பின் நிற்பது.

**அகலம்.** அஃது என்பது தோன்றா எழுவாயாக வருவிக்

கப்பட்டது. பின் என்பது ஆகுபெயர், பின் நிற்பதற்கு ஆயின மையால்.

கருத்து. ஈகை தவத்திலும் மேற்பட்டது. 195.

௬. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.

பொருள். அற்றார் அழி பசி தீர்த்தல்—(இல்வாழ்வான்) பொருள் இல்லாதாரை வருத்தும் பசியைத் தீர்க்கக் கடவன்; அஃது பொருள் பெற்றான் ஒருவன் வைப்பு உழி—அது பொருளைப் பெற் றவன் ஒருவன் (அதனை) வைத்தற் குரிய இடம்.

அகலம். அழி என்பது வினைத் தொகை.

கருத்து. வறிஞரது பசியைத் தீர்த்தல் செல்வத்தைப் பத்திரப் படுத்தி வைக்கும் இரும்புப் பெட்டி. 196.

௭. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
தீப்பிணி தீண்ட லரிது.

பொருள். பாத்து ஊண் மருவியவனை—(தன்னிடத்துள் ளதை இல்லார்க்குப்) பகுந்து கொடுத்து உண்ணுதலைப் பொருந்திய வனை, பசி என்னும் தீ பிணி தீண்டல் அரிது—பசி என்று சொல் லப்படும் கொடிய நோய் தொடுதல் இன்று.

அகலம். மருவியவன் என்பது இன்னிசை நோக்கி மரீஇய வன் என நின்றது. நச்சர் பாடம் 'பார்த்தூண்'

கருத்து. வறிஞர் பசி தீர்ப்பான் வறுமையுறல் இல்லை. 197.

௮. ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

**பொருள்.** தாம் உடைமை வைத்து இழக்கும் வன்கணவர்—தாம் செல்வத்தை (ப் பிறருக்கு வழங்காமல்) வைத்திருந்து இழக்கும் கடின உள்ள முடையார், ஈத்து உவக்கும் இன்பம் அறியார் கொல்—(இல்லார்க்கு) ஈந்து (அவர் பெற்று) மகிழ்தலால் (ஈந்தார் அடையும்) இன்பத்தை அறியார் போலும்?

**அகலம்.** பொருளை ஏற்றவர் உவத்தலைப் பார்த்துப் பொருளை ஈந்தார்க்கு உளதாம் இன்பத்தை 'ஈத்துவக்கும் இன்பம்' என்றார். கொல் என்பது போலும் என்னும் குறிப்பு வினைப் பொருளில் வந்தது. மணக்குடவர் பாடம் 'வன்கண் ணவர்'.

**கருத்து.** வறியார்க்கு ஈயாதார் வன்கண்ணர். 198.

க. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.

**பொருள்.** நிரப்பிய தாமே தமியர் உண்ணல்—(இலையில்) நிரப்பியவற்றைத் தாமே தமியரா யிருந்து உண்ணுதல், இரத்தலின் இன்னாது—இரத்தலைப் போலத் துன்பத்தைத் தருவது.

**அகலம்.** உண்ணல் என்பது ணகர வொற்றுக் கெட்டு நின்றது. நிரப்பிய என்று கூறியதனான், நிரப்புதற்கு ஒன்றும் இல்லாத வறிஞன் தனியனாய்த் தெண்ணீ ருண்டல் இன்னாதது அன்று எனக் கொள்க. தருமர் பாடம் 'தாமே தனிய ருணல்'. தாமத்தர், நச்சர் பாடம் 'தானே தனிய னுணல்'. 'மன்ற' அசை.

**கருத்து.** பகுந்து உண்ணாமை படுந்துயர் விளைக்கும். 199.

ம. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை.

**பொருள்.** சாதலின் இன்னாதது இல்லை—சாதலைப் போலத் துன்பத்தைத் தருவது (வேறொன்று) இல்லை; ஈதல் இயையா (த)

கடை அதுவும் இனிது—ஈதல் இயலாத பொழுது சாவும் (வள்ளலுக்கு) இன்பத்தைத் தருவதாம்.

அகலம். வள்ளல்—வரையாது கொடுப்பவன். தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் 'ஈத லிசையாக் கடை'

கருத்து. ஈய முடியாத போது சாவும் இன்பமாம். 200.

உஙக-ம் அதி:—புகழ்.

அஃதாவது, (ஒருவனை அறிவுடையார்) உயர்த்துக் கூறும் மொழி.

க. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
 தூதிய மில்லை யுயிர்க்கு.

பொருள். ஈதல் இசை பட வாழ்தல்—(ஒருவன்) ஈதலால் புகழ் உண்டாகும்படி வாழக் கடவன்; அஃது அல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை—புகழ் அல்லாமல் (மனித) உயிர்க்கு ஊதியம்(வேறு) இல்லை.

அகலம். ஈதல் என்பது மூன்றும் வேற்றுமைத்தொகை. அஃது என்பது செய்யுள் விகாரத்தால் ஆய்தம் கெட்டு நின்றது. ஊதியம்—இலாபம். தருமர் பாடம் 'அவையல்ல

கருத்து. இல்லார்க்கு ஈந்து புகழ் பெறுதல் எய்தற்கரிய இம்மைப் பேறு. 201.

உ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
 றீவார்மே னிற்கும் புகழ்.

பொருள். உரைப்பார் உரைப்பவை எல்லாம்—சொல்வோர் சொல்வன வெல்லாம், இரப்பார்க்கு ஒன்று ஈவார்மேல் நிற்கும் புகழே—இரப்பவர்க்கு (அவர் விரும்பியது) ஒன்றைக் கொடுப்பவர் மேல் நிற்கும் புகழ்களே.

அகலம். பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. தன்னினம் கோடல் என்னும் உத்தியால், உரைப்பார் என்பது பாடுவோரையும் அடக்கி நின்றது.

கருத்து. ஈவோர் எல்லாராலும் புகழப்படுவர். 202.

ங. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்.

பொருள். உலகத்து ஒன்றா(க) உயர்ந்த புகழ் அல்லால்—உலகத்தின்கண் ஒப்பற்றதாக உயர்ந்த புகழ் அல்லாமல், பொன்றாது நிற்பது ஒன்று இல்—(என்றும்) அழியாது நிற்பது (வேறு) ஒன்று இல்லை.

அகலம். ஒன்றாக என்பது செய்யுள் விகாரத்தால் ஈறு கெட்டு நின்றது. ஒருவன் பொன்றுங்கால், அவன் புகழ் பொன்றாது நிற்கும் என்றார். " மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே ".— புறநானூறு.

கருத்து. இவ் வுலகத்தின்கண் என்றும் பொன்றாது நிற்பது ஒப்பற்று உயர்ந்த புகழே. 203.

ச. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.

பொருள். நிலவரை நீள் புகழ் ஆற்றின்—நிலவுலகின் அளவு (வரையில்) நீண்டு நிற்கும் புகழை (ஒருவன்) செய்யின், புத்தேள் உலகு புலவரைப் போற்றாது—தெய்வ உலகத்தார் புலவரைப் போற்றார்.

அகலம். நீள் என்பது வினைத்தொகை. உலகு என்பது ஆகுபெயர், உலகினர்க்கு ஆயினமையால் உலகு என்றமையால், அதற்கு ஏற்ப அதன் பயனிலையைப் போற்றாது என்று கூறினார். புகழ் செய்தோரைப் பாடிய புலவரைப் போற்றாமல் அவர் பாடிய

பாட்டுடைத் தலைவரையே தேவர் போற்றுவர் என்றவாறு. இதனால், புலவர் தேவரால் போற்றப்படுதற் குரிய ரென்பது பெற்றாம்.

கருத்து. புகழ் செய்தாரைத் தேவரும் போற்றுவர். 204.

௫. நத்தம்போர் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.

பொருள். நத்தம் போர் கேடும்—ஆக்கத்தைப் போர்த்த கேடும், உளது ஆகும் சாக்காடும்—(என்றும்) உள்ளது ஆகும் சாவும், வித்தகர்க்கு அல்லால் (ஏனையோர்க்கு) அரிது—அறிஞர்க்கு அல்லாமல் மற்றையோர்க்கு (ச் செய்தல்) இயலாது.

அகலம். ஈகை தோற்ற மாத்திரையில் பொருட் கேட்டையும், உண்மையில் பொரு ளாக்கத்தையும் நல்குவதால், அதனை 'நத்தம் போர் கேடு' என்றார். பிறர் நன்மைக்காக உயிரை வழங்குதல் தோற்ற மாத்திரையில் சாவையும் உண்மையில் (புகழுடம்போடு கூடி) என்றும் உள்ளதாம் தன்மையையும் நல்குவதால் அதனை 'உளதாகும் சாக்காடு' என்றார். உள்ளதாகும் என்பது ளகர வொற்றுக் கெட்டு நின்றது. 'போர்' என்பது வினைத்தொகை. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'நத்தம்போற்'. இக் குறளின் மூன்றாஞ் சீரின் முதற் சொல்லாகிய 'உளது' என்பது 'ஆகும்' என்னும் ஆக்கச் சொல்லைக் கொண்டு நிற்றல் போல, இக் குறளின் முதற் சீரின் முதற் சொல்லாகிய 'நத்தம்' என்பதும் 'ஆம்' அல்லது 'போர்' என்பது போன்ற பொருள் தரும் ஒரு சொல்லோடு சேர்ந்து நிற்றல் பொருள் கோளுக்கு இன்றியமையாததா யிருக்க, அச் சொல்லை விடுத்துப் பொருள் கோளுக்கு வேண்டாத 'போல்' என்னும் உரையசைச் சொல்லைச் சேர்த்துப் புலவரெவ்வரும் பாடாராகலின், 'நத்தம்போற்' என்பது ஏடு பெயர்த் தெழுதியோனால் நேர்ந்த பிழையெனக் கொள்க. "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா" தேந்திய கைகொ டிரந்தவ

ரந்தாய், வீய்ந்தவ ரென்பர் வீய்ந்தவ ரேனும், ஈய்ந்தவ ரல்ல திருந் தவர் யாரே."—கம்ப ராமாயணம்.

கருத்து. பிறருக்கு ஈவோரும் பிறருக்காக உயிர் வழங்குவோ ரும் பெரியர். 205.

சு. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

பொருள். தோன்றின் புகழொடு தோன்றுக—(ஒருவன் பல் லார்முன்) தோன்றில் புகழுடன் தோன்றுக; அஃது இல்லார் தோன் றலின் தோன்றாமை நன்று—புகழ் இல்லாதார் (பல்லார்முன்) தோன்று தலினும் தோன்றா திருத்தல் நன்மை.

அகலம். தோன்றல் என்பதற்கு பிறத்தல் என்று பொருள் உரைப்பாரும் உளர். பிறத்தலும் பிறவாதிருத்தலும் ஒருவன் விருப்பப்படி நிகழ்வன அல்ல; அவன் முன் வினைப்படியே நிகழ்வன. ஆகலான், அவ்வுரை பொருந்தாது.

கருத்து. புகழ் செய்யாதார் தம் வீட்டை விட்டு வெளியே றாமை நன்று. 206.

எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

பொருள். புகழ் பட வாழாதார்—புகழ் உண்டாகும்படியாக வாழாதவர், தம் நோவார் தம்மை இகழ்வாரை நோவது எவன்— தம்மை நோவாதவராய்த் தம்மை இகழ்வாரை நோவது யாது காரணத் தால்?

கருத்து. புகழ் செய்யாதார் தம்மை இகழ்வாரை நோவ லாகாது. 207,

அ. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின்.

**பொருள்.** இசை என்னும் எச்சம் பெறா(து) விடின்—புகழ் என்னும் மகவைப் பெறாது விடின், வையத்தார்க்கு எல்லாம் வசை—(அஃது) உலகத்தார்க் கெல்லாம் வசை.

**அகலம்.** தான் இறந்த பின்னர்த் தன் பெயரைத் தன் மகவு போல் நிறுத்துவ தாகலான், புகழை எச்சம் என்றார். மகவைப் பெறாதாரை உலகு இகழாது. ஆனால், புகழைப் பெறாதாரை உலகம் இகழும். எச்சம்—மகவு. வசை—இகழ். 'என்ப' அசை. அள பெடை இசை நிறைக்க வந்தது. 'பெறாது' ஈறு கெட்டது.

**கருத்து.** புகழ் பெறாதானை உலகத்தார் இகழ்வர். 208.

கூ. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

**பொருள்.** இசை இ(ல்)லா(த) யாக்கை பொறுத்த நிலம்—புகழ் இல்லாத உடம்பைத் தாங்கிய நிலத்தின்கண், வசை இ(ல்)லா(த) வண் பயன் குன்றும்—வசை யில்லாத வளப்பமான விளைவு குறையும்.

**அகலம்.** இல்லாத என்பது இரண்டிடத்தும் லகர வொற்றும் ஈறும் கெட்டு நின்றன. **நச்சர்** பாடம் 'வண்பயம்

**கருத்து.** புகழ் செய்யாதான் நாட்டில் விளைவு குன்றும். 209.

ய. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.

**பொருள்.** வசை ஒழிய வாழ்வாரே வாழ்வார்—வசை நீங்க வாழ்பவரே (உயிருடன் கூடி) வாழ்பவர்; இசை ஒழிய வாழ்வாரே வாழாதவர்—புகழ் நீங்க வாழ்பவரே (உயிருடன் கூடி) வாழாதவர்.

அகலம். நச்சர் பாடம் 'வாழ்வானே வாழ்வான் 'வாழ்வானே வாழா தவன்'.

கருத்து. புகழ் இல்லாதார் உயிர் இல்லாதாரை ஒப்பர். 210

இல்லறவியல் முற்றிற்று.

## துறவற வியல்.

இது, துறவு, அறம், இயல் என்னும் மூன்று சொற்க ளா லாய தொடர்மொழி. துறவு—(இல் வாழ்க்கையைத்) துறத்தல். அறம்—தருமம். இயல்—இயல்பு. ஆகவே, அத் தொடர்மொழி இல்வாழ்க்கையைத் துறந்தார்களது அறங்களின் இயல்பு எனப் பொருள்படும்.

### உ௰உ-ம் அதி:—அருளுடைமை.

அஃதாவது, உயிர்கள்மாட்டுக் கருணை யுடைமை.

க. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
 பூரியார் கண்ணு முள.

பொருள். அருள் செல்வம் செல்வத்துள் செல்வம்—அருளா கிய செல்வம் செல்வத்து ளெல்லாம் (சிறந்த) செல்வம்; பொருள் செல்வம் பூரியார்கண்ணும் உள—பொருளாகிய செல்வங்கள் கீழ் மக்களிடத்தும் உள்ளன.

அகலம். அருள்—தண்ணளி—கருணை. அதனை வடநூலார் 'கிருபை', 'காருண்யம்' என்பர்.

கருத்து. அருளுடைமை செல்வத்து ளெல்லாம் சிறந்த செல்வம். 211.

உ. நல்லாற்று ணாடி யருளாள்க பல்லாற்றுந்
 தேரினு மஃதே துணை.

**பொருள்.** நல் ஆற்றான் நாடி அருள் ஆள்க—(ஒருவன்) நல்ல நெறியின்கண் நின்று விரும்பி அருளை ஆள்க; பல் ஆற்றால் தேரினும் அஃதே துணை—பல வழிகளால் ஆராயினும் அருளே (மக்களுயிர்க்குத்) துணை.

**அகலம்.** அருளை ஆளுதல்—உயிர்களிடத்துக் கருணை செலுத்துதல். நல்லாற்றான் என்பது வேற்றுமை மயக்கம், மூன்றும் வேற்றுமை யுருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தமையான். ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. தருமர், தாமத்தர் பாடம் 'தேறினும்'

**கருத்து.** வீட்டினை அடைவதற்கு அருளே துணை. 212.

ந. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல்.

**பொருள்.** இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்—இருள் பொருந்திய துன்ப உலகின்கண் புகுதல், அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை—அருள் பொருந்திய மனத்தை யுடையார்க்கு இல்லை.

**அகலம்.** இருள் பொருந்திய துன்ப உலகமாவது, நரகம்.

**கருத்து.** அருளுடையார்க்கு நரகம் இல்லை. 213.

ச. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

**பொருள்.** தன் உயிர் அஞ்சும் வினை—தனது உயிர் அஞ்சும் படியான செயல், மன் உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு இல் என்ப (ஆன்றோர்)—நிலைபேறுடைய உயிர்களைப் பேணி அருளினை ஆள்பவனுக்கு இல்லை என்பர் ஆன்றோர்.

**கருத்து.** அரு ளுடையார்க்கு அச்சம் இல்லை. 214.

# அருளுடைமை.

ரு. அல்ல லருளாள்வார்க் கில்லை வழிவழங்கு
மல்லன்மா ஞாலங் கரி.

**பொருள்.** அருள் ஆள்வார்க்கு அல்லல் இல்லை—அருளினை ஆள்பவருக்குத் துன்பம் இல்லை; வழி வழங்கும் மல்லன் மா ஞாலம் கரி—(அதற்கு அற) நெறிகளை (உள்ளவாறு) உணர்த்தும் (அறிவு) வளம், பொருந்திய பெருமை நிறைந்த மெய்ஞ்ஞானிகளே சாட்சிகள்.

**அகலம்.** "உலக மென்ப துயர்ந்தோர் மாட்டே" என்றும், "ஞானிக் கில்லை யின்பமுந் துன்பமும்" என்றும் ஆன்றோர் கூறி யிருத்தலான், மா ஞாலம் என்பதற்குப் பெருமை நிறைந்த மெய்ஞ் ஞானிகள் என்று பொருள் உரைக்கப்பட்டது. அற நெறிகளை விதிக்கத் தக்கோர் மெய்ஞ்ஞானிகளே. அவர்கள் அருளுடையவர்களென்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்ததொன்று. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'வளிவழங்கு மல்லன் மா ஞாலங் கரி'. அரு ளாள்வார்க்கு அல்லல் இல்லை யென்பதை உலகத்தார் அறிய முடியா தாகலானும், மெய்ஞ் ஞானிகளுக்கு அல்லல் இல்லை யென்பதை அவரைக் காண்பவர் யாரும் அறியக்கூடு மாகலானும், 'வழிவழங்கு மல்லன்மா ஞாலங்கரி' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** அரு ளுடையார்க்குத் துன்பம் இல்லை என்பதற்கு மெஞ்ஞானி சான்று. 215.

சா. பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.

**பொருள்.** அருள் நீங்கி அல்லவை செய்து ஒழுகுவார்—அருளினின்று நீங்கிப் பாவங்களைச் செய்து நடப்பவர், பொருள் நீங்கி பொச்சாந்தார் என்ப—மெய்ப் பொருளினின்று நீங்கி (அதனை) மறந்தார் என்பர் (ஆன்றோர்).

**அகலம்.** தாமத்தர், நச்சர் பாடம் 'பொய்ச்சாந்தார்'

**கருத்து.** அருளை நீத்தவர் மெய்ப்பொருளை நீத்தவராவர். 216.

எ. அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு.

**பொருள்.** பொருள் இல்லார்க்கு இ உலகம் இல்லாகி ஆங்கு—பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலக இன்பம் இல்லையாயினாற் போல, அருள் இல்லார்க்கு அ உலகம் இல்லை—அருள் இல்லாதார்க்கு அவ்வுலக இன்பம் இல்லை.

**அகலம்.** இல்லாகி யாங்கு என்பது வினையெச்சத் தொகை. 'இல்லாகிய வாங்கு' என்பது வகரம் கெட்டு நின்றது எனினும் அமையும். 'உலகம்' இரண்டும் ஆகுபெயர், அவற்றின் இன்பங் களுக்கு ஆயினமையால். **பரிமேலழகர்** பாடம் 'இல்லாதி யாங்கு' அது பிழைபட்ட பாடம்.

**கருத்து.** அருள் இல்லார்க்கு வீட்டுலகம் இல்லை. 217.

அ. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

**பொருள்.** பொருள் அற்றார் ஒரு கால் பூப்பர்—செல்வத்தை இழந்தவர் ஒரு காலத்தில் செல்வ முடையவ ராவர்; அருள் அற்றார் அற்றார்—அருளை இழந்தவர் (அதனை) இழந்தவரே; மற்று ஆதல் அரிது—பின்னர் அருளுடையவ ராதல் அரிது.

**அகலம்.** அரிது என்பது ஈண்டு அருமைப் பொருளின் மேல் நின்றது. அருளை ஒரு காலும் கைவிட லாகா தென்று வற்புறுத்தற் காக, அருளைக் கைவிடின் அதனைப் பின்னர் அடைதல் அரிது என்றார்.

**கருத்து.** அருளை விடுத்தவர் மறுபடி அதனை அடைதல் அரிது.

௧௯. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம்.

பொருள். அருளாதான் செய்யும் அறம்—அருளில்லாதவன் செய்யும் அறம், தேரின்—ஆராயின், தெருளாதான் மெய்ப் பொருள் கண்டு அற்று—தெளிவில்லாதவன் மெய்ப்பொருளை அறிந்தாற் போலும்.

அகலம். தெருளாதான் மெய்ப்பொருள் காண்டலு மில்லை; அருளாதான் அறம் புரிதலு மில்லை என்ற வாறு. "கற்றானுங் கற்றார் வாய்க் கேட்டானு மில்லாதார், தெற்ற வுணரார் பொருள்களை—எற்றேல், அறிவில்லான் மெய்தலைப் பாடு பிறிதில்லை, நாவற்கீழ்ப் பெற்ற கனி"—பழமொழி நானூறு.

கருத்து. அருள் இல்லாதான் அறம் புரியான். 219.

௨0. வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

பொருள். தன்னின் மெலியார்மேல் தான் செல்லும் இடத்து —தன்னினும் மெலியவர்மேல் தான் (வெகுண்டு) செல்லுங் காலையில், வலியார்முன் தன்னை நினைக்க—(தன்மேல் வெகுண்டுவரும்) வலியார் முன் தன் நிலையை நினைக்கக் கடவன்.

அகலம். தன்னின் வலியார் தன்மேல் வெகுண்டு வருங்கால் அவர் முன் தான் நடுங்கி நிற்றலை நினைக்கவே, தான் தன்னின் மெலியார்மேல் வெகுண்டு செல்லான் என்றவாறு. தன்னை என்பது ஆகு பெயர், தன் நிலைக்கு ஆயினமையால். தன் நிலை—தான் நிற்கும் நிலை. மெலியார்—செல்வம் முதலியவற்றால் எளியவர்.

கருத்து. இஃது அருளை அடைதற்கு வழி கூறிற்று. 220.

## உ௰௬-ம் அதி:—புலான் மறுத்தல்.

அஃதாவது, ஊன் (உணவை) விலக்கல். 'புலால்' ஆகுபெயர், அதனாலாய உணவுக்கு ஆயினமையால்.

க. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

**பொருள்.** தன் ஊன் பெருக்கற்கு தான் பிறிது ஊன் உண்பான்—தன் (உடம்பாகிய) ஊனை வளர்த்தற்குத் தான் பிறிது (ஓர்) உயிரின் (உடம்பாகிய) ஊனை உண்பவன், அருள் எங்ஙனம் ஆளும்—அருளினை எவ்வாறு ஆள்வான்? (ஆளான்.)

**கருத்து.** புலால் உண்பவனுக்கு அருள் உண்டாதல் இல்லை.

உ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

**பொருள்.** பொருள் ஆட்சி போற்றாதார்க்கு இல்லை—செல்வத்தை (ஈட்டி) ஆளுந்தன்மை (அதனைப்) பேணாதவர்க்கு இல்லை; ஆங்கு—அதுபோல, அருள் ஆட்சி ஊன் தின்பவர்க்கு இல்லை—அருளை (ஈட்டி) ஆளுந்தன்மை புலால் உண்பவர்க்கு இல்லை.

**கருத்து.** புலால் உண்பவர்பால் அருள் நிற்றல் இல்லை. 222.

௩. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம்.

**பொருள்.** ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம்—ஓர் உயிரின் உடம்பைச் சுவைப்பட உண்டவரது உள்ளம், படை கொண்டார் நெஞ்சம் போல நன்று ஊக்காது—(கையில்) படைக்கலத்தைக் கொண்டவரது நெஞ்சம் (நன்மை செய்ய எழாதது) போல நன்மை செய்ய எழாது.

## புலால் மறுத்தல்.

**அகலம்.** பரிமேலழகர் பாடம் 'ஒன்றன்' மற்றை நால்வர் பாடம் 'ஒன்றின்'

**கருத்து.** புலால் உண்பவர் உள்ளம் தீமை செய்யவே எழும்.

ச. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

**பொருள்.** அருள் யாது என்னின் கொல்லாமை—அருள் யாது என்றால் கொல்லாமை; அல்லது யாது என்னின் கோறல்—அருளல்லது யாது என்றால் கொல்லுதல்; பொருள் அல்லது அ ஊன் தின்னல்—அறம் அல்லாத செயல் (யாது என்னின்) கொலையால் வந்த ஊனை உண்ணுதல்.

**அகலம்.** என்னின், தின்னல் என்பன னகர வொற்றுக் கெட்டு நின்றன. பொருள் என்பது ஈண்டுப் பொருளாலாகும் அறத்தைக் குறித்து நின்றது. அறம் அல்லாத செயலாவது மறம்.

கொல்லாமை, கோறல் என்னும் காரியங்களை அருள், அருளல்லது என்னும் காரணங்களாகவும், ஊன் தினல் என்னும் காரணத்தை பொருளல்லது என்னும் காரியமாகவும் உபசரித்தார்.

**கருத்து.** புலால் உண்ணல் பாவம். 224

ரு. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்வ தளறு.

**பொருள்.** உண்ணாமை உள்ளது உயிர் நிலை—(ஊன்) உண்ணாமையை உடைய உடம்பு உயிர்நிலை; ஊன் உண்ண அண்ணாத்தல் செய்வது அளறு—ஊனை உண்பதற்காக வாயைத் திறக்கும் உடம்பு நரகம்.

அகலம். ஊன் உண்பான் உடம்பு தீய ஊனை உட்கொள்ளுத லால், அவ் வுடம்பைத் தீய உயிர்களை உட் கொள்ளும் நரகத்துக்கு உவமித்தார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் ‘ செய்யா தளறு’. ஒருவன் ஒன்றினை உட் கொள்ளுதற்காக அவாவுற்று வாய் திறத்தலைத் தான் அண்ணாத்தல் என்று சொல்வது வழக்கு. அன்றியும், ஒருவன் ஒருகால் ஊனை உட் கொள்ளின், அவனை அதற்காக நரகம் விழுங்குமெனவும், அவ்வாறு விழுங்கிய நரகம் அவனைப் பின்னர் ஒருகாலும் வெளி விடாதெனவும் கூறின், அவன் ஊனுண்ணலை விடுதலா லாவது, வேறு பாவங்களை விடுதலா லாவது அடையும் பயன் யாது? ஒருவன் எத்துணைக் கொடிய பாவம் புரியினும், அவன் அதனைப் புரியாது நிறுத்திய மாத்திரத்திலே அப் பாவப் பயன் அவனைப் பற்றாது நீங்கி விடு மெனக் கூறி, அப் பாவத்தை அவன் விடும்படியாகத் தூண்டுத லன்றோ நீதி நூல் இயற்றுவோர் கடமை? மேலும், ஊ னுண்ணாமையை யுடைய உடம்பு உயிர் நிலை என்று கூறிய ஆசிரியர் ஊன் உண்ணுதலை யுடைய உடம்பு உயிர் நிலை யல்லாத வேறொன்று எனக் கூறுத லன்றோ இயற்கையும் பொருத்தமு மாகும்? ஆகலான், ‘ஊனுண்ண அண்ணாத்தல் செய்யா தளறு’ என்பது ஏடு பெயர்த்தெழுதியோனால் நேர்ந்த பிழை எனவும், ‘ ஊனுண்ண அண்ணாத்தல் செய்வ தளறு ’ என்பதே ஆசிரியர் பாடம் எனவும் கொள்க. அளறு என்பதற்குக் குழை சேறு என்று உரைப்பினும் அமையும், அதுவும் போகட்டவற்றை யெல்லாம் தன்னுள் ஏற்பதொன் றாகலான்.

கருத்து. ஊன் உண்ணும் உடம்பு நரகத்தை ஒக்கும். 225.

சு. தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

பொருள். உலகு தின்னல் பொருட்டு கொள்ளாது என்னின்—உலகத்தார் உண்ணுதற்காக (ஊனைக்) கொள்ளார் என்றால், விலை

பொருட்டு ஊன் தருவார் யாரும் இல்—விலைக்காகப் புலாலை விற்ப வர் எவரும் இல்லை.

**அகலம்.** உண்ணுதற்காக ஊனைக் கொள்ளுகின்றவர் உள்ள படியால் தான் பொருளுக்காக ஊனை விற்கின்றவரும் உள்ளார் என்ற வாறு. உலகத்தாரை உலகம் என்றமையால், அதற் கேற்ப அதன் பயனிலையைக் கொள்ளாது என்று கூறினர். 'ஆல்' இரண் டும் அசைகள். **மணக்குடவர்** பாடம் 'கொள்ளா துலகெனின்'. மற்றை நால்வர் பாடம் 'கொல்லா துலகெனின்'. 'விலைப்பொருட்டா லூன்றருவா ரில்' என்றமையால், 'கொள்ளா துலகெனின்' என்ற பாடமே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** புலால் உண்பார் இல்லையேல், புலால் விற்பாரும் இல்லை. **226.**

எ. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

**பொருள்.** புலால் உண்ணாமை வேண்டும்—(மாந்தர்) புலாலை உண்ணாதிருத்தல் வேண்டும்; அஃது உணர்வார்ப் பெறின்—புலால் அறிவுடையாரது ஆராய்ச்சியைப் பெறுமாயின், பிறிது ஒன்றன் புண் —பிறிது ஓர் பிராணியின் புண்(ஆம்).

**அகலம்.** அஃது என்பது ஆய்தம் கெட்டு நின்றது. உணர் வாரது ஆராய்ச்சியைப் பெறின் என்பதை உணர்வாரைப் பெறின் என்றார். அகர அளபெடை இசை நிறைக்க வந்தது. **மணக்குடவர்** பாடம் 'புலாலை'.

**கருத்து.** புலால் ஒரு பிராணியின் புண்; ஆகலான், அதனை உண் ணற்க. **227.**

அ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

**பொருள்.** உயிரின் தலைப்பிரிந்த ஊன்—(ஓர்) உயிரினின்று நீங்கிய ஊனை, செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்—குற்றத்தினின்று நீங்கிய அறிவினை யுடையார் உண்ணார்.

**கருத்து.** அறிவுடையார் புலாலை உண்ணார். 228.

௯. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

**பொருள்.** ஒன்றன் உயிர் செகுத்து உண்ணாமை—ஒரு பிராணியின் உயிரை அழித்து (அதனால் வந்த ஊனை) உண்ணாதிருத்தல், அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின் நன்று—நெய்யை வார்த்து ஆயிரம் வேள்வி செய்தலினும் நன்மை.

**அகலம்.** வார்த்தல்—ஊற்றல். பரிமேலழகர் பாடம்'ஒன்றன்'. மற்றை நால்வர் பாடம் 'ஒன்றின்

**கருத்து.** அவி சொரிந்து ஆயிரம் வேட்டலினும் புலாலுண்ணாமை நன்று. 229.

௰. கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும்.

**பொருள்.** கொல்லான் புலாலை மறுத்தானை—(ஓர் உயிரையும்) கொல்லாதவனைப் புலாலை விலக்கியவனை, எல்லா உயிரும் கை கூப்பி தொழும்—எல்லா உயிர்களும் கைகளைக் குவித்து வணங்கும்.

**அகலம்.** கைகூப்பித் தொழுதல் மனிதர்க்கே உரியதாயினும், அதனை உபசார வழக்காக ஏனைய உயிர்களின்மேலும் ஏற்றிக் கூறினார். உயிரைக் கொல்லாமலும் புலாலைக் கொள்ளாமலும் இருக்கும் மனிதன் எல்லா உயிர்களாலும் கடவுளாகப் போற்றப்படுவன் என்றவாறு.

**கருத்து.** கொலையும் புலையும் நீத்தோன் கடவுளை ஒப்பன். 230.

## உயசு-ம் அதி:—தவம்.

அஃதாவது, நோன்பு. அஃது இன்ன தென்பதை ஆசிரியர் இவ்வதிகாரத்தின் முதற் குறளில் கூறுகின்றார்.

க. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு.

**பொருள்.** *தவத்திற்கு உரு—தவத்திற்கு வடிவு, உற்ற நோய் நோன்றல் (உம்) உயிர்க்கு உறுகண் செய்யாமை(யும்) அற்றே—(தம்மைப்) பொருந்திய நோயைப் பொறுத்தலும் (ஓர்)உயிர்க்கு(ம்) துன்பம் செய்யாமையும் (ஆகிய) அவ்வளவினதே.*

**அகலம்.** *ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. எண்ணும்மை இரண்டும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. அற்றே என்றமையால், தனது உடம்பை வருத்தல் முதலியன தவத்தின்பால் படா என்று கொள்க. உரு, உருவம், வடிவு, வடிவம் இவை ஒரு பொருள் குறிக்கும் சொற்கள். உம்மை உயர்வுசிறப்பு.*

**கருத்து.** *உற்ற நோயைப் பொறுத்தலும் உயிர்க்கு உறுகண் செய்யாமையுமே தவம்.* 231.

உ. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

**பொருள்.** *தவமும் தவம் உடையார்க்கு ஆகும்—தவ வேடமும் தவமுடையவர்க்குப் பொருந்தும்; அஃது இல்லார் அதனை மேற் கொள்வது அவம்—தவம் இல்லாதார் தவ வேடத்தை (த்தம்) மேற்கொள்வது பயனற்ற செயல்.*

**அகலம்.** *முதல் 'தவம்' ஆகு பெயர், தவ வேடத்திற்கு ஆயினமையால். 'தவமும் தவமுடையார்க் காகும்' என்பதற்குத் தவப் பயனே யன்றித் தவந்தானும் முற்றவம் உடையார்க்கே ஆகும்'*

என்று உரைப்பாரும் உளர். அவ் வுரை ஒரு சிறிதும் பொருந் தாது, முற் றவத்திற்கும் முற்றவம் வேண்டும் என்று முடிவில்லாது கூறிக்கொண்டே போக நேரு மாகலான். அத்தகைய முடிவற்ற கூற்றை வட நூலார் அனவத்தா தோடம் என்பர்.

**கருத்து.** தவ வேடம் தவம் உடையார்க்கே பொருந்தும்.

௩. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம்.

**பொருள்.** துறந்தார்க்கு துப்புரவு வேண்டி—(இல் வாழ்க்கை யைத்) துறந்தவர்க்கு உணவு முதலியன (அளித்தலை) விரும்பி, மற் றையவர்கள் தவம் மறந்தார்கொல்—இல்வாழ்வார்கள் தவத்தினை மறந்தார்களோ?

**அகலம்.** இல்வாழ்வாரும் தவத்தினைக் கைக்கொள்ளத் தக்க வராயிருக்க, அவர் அதனைக் கைக்கொள்ளாம விருப்பதைக் கண்டித்த வாறு. கொல் என்பது ஈண்டுக் குறிப்பு வினைப் பொருளில் வந்தது.

**கருத்து.** இல்வாழ்வாரும் தவத்தினைக் கைக்கொள்க. 233.

௪. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும்.

**பொருள்.** ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்—பகை வரை அழித்தலும் நட்பினரை ஆக்குதலும், தவத்தால் எண்ணின் வரும்—தவத்தோடு (கூடி நின்று) நினைப்பின் (உடனே) எய்தும்.

**அகலம்.** ஆக்குதல்—செல்வம் முதலியவற்றை உடையவராக் குதல். 'ஆன்' உருபு 'ஒடு' உருபுப் பொருளில் வந்தது.

**கருத்து.** ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும் தவத் தினர் நினைத்த மாத்திரத்தில் நிகழும். 234.

ரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

**பொருள்.** *வேண்டிய வேண்டிய ஆங்கு எய்தலான்*—(*தாம்*) *விரும்பியவற்றை விரும்பிய வாறு அடைதலால்*; *செய் தவம் ஈண்டு முயல படும்*—(*அறிஞர்*) *செய்யும் தவத்தை இப் பிறப்பின்கண்* (*செய்தற்கு ஒவ்வொருவரும்*) *முயல வேண்டும்.*

**அகலம்.** *வேண்டிய ஆங்கு என்பது அகரம் கெட்டு நின்றது. செய் தவம் என்பதிலுள்ள செய் என்பதனைத் துணைவினையாகக் கொள்ளினும் அமையும்.*

**கருத்து.** *விரும்பியவற்றை யெல்லாம் தவம் தருமாகலான், அதனை விரைந்து செய்க.* 235.

சு தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

**பொருள்.** *தவம் செய்வாரே தம் கருமம் செய்வார்*—*தவத்தைச் செய்பவரே தமது கருமத்தைச் செய்பவர்; அல்லார் ஆசையுள் பட்டு அவம் செய்வார்*—*தவஞ் செய்யாதார் ஆசையுட் சிக்கி வீண் கருமம் செய்பவர்.*

**அகலம்.** *கருமம்—வினை. செய்வாரே என்பதன் ஏகாரம் செய்யுள் விகாரத்தால் தொக்கது. ' மற்று ' அசை.* **தருமர், நச்சர்** *பாடம் ' ஆசையுட் பட்டு '. மற்றை மூவர் பாடம் ' ஆசையிற் பட்டு '.*

**கருத்து.** *தவஞ் செய்வாரே தம் கருமம் செய்தவராவர்.* 236.

எ. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

**பொருள்.** *துன்பம் சுட சுட நோற்கிற்பவர்க்கு*—(*தம்மைத்*) *துன்பம் வருத்த வருத்தத் தவஞ் செய்ய வல்லார்க்கு, சுட சுடரும்*

பொன்போல் ஒளி மிகும்—சுடுங் காலையில் ஒளிரும் பொன்போல (அறிவாகிய) ஒளி மிகும்.

அகலம். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'ஒளிவிடும் மணக்குடவர் பாடம் 'சுடச்சுடப் பொன்போல'. 'ஒளிவிடும் என்பதினும் 'ஒளிமிகும்' என்பது மிகப் பொருத்தமான பொருளைத் தருதலான், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

கருத்து. தவம் செய்வார்க்கு அறிவு வளரும். 237.

அ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

பொருள். தன் உயிர் தான் அற பெற்றானை—தனது உயிர் தான்' என்பது நீங்கப் பெற்றவனை, ஏனைய மன் உயிர் எல்லாம் தொழும்—மற்றைய நிலை பேறுடைய உயிர்களெல்லாம் வணங்கும்.

அகலம். தான்—'தான்' என்று அகங்கரித்தல். 'தன் உயிர் தான் அறப் பெற்றானை' என்பதற்குத் 'தன் உயிரைத் தான் தனக்கு உரித்தாகப் பெற்றவனை' என்ற உரை பொருந்தாது.

கருத்து. அகங்காரம் நீங்கப் பெற்றவன் கடவுளாகப் போற்றப் படுவான். 238.

க. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு.

பொருள். நோற்றலின் ஆற்றல் தலைப்பட்டவர்க்கு—தவம் இழைத்தலின் வலிமையை அடைந்தார்க்கு, கூற்றம் குதித்தலும் கைகூடும்—கூற்றத்தைக் (கடந்து) குதித்தலும் எய்தும்.

அகலம். கூற்றத்தைக் கடந்து குதித்தலாவது, கூற்றத்தினின்று தப்புதல். கூற்றம்—எமன்.

கருத்து. தவத்தைச் செய்தவர் மரணத்தைக் கடப்பர். 239.

௰. இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.

**பொருள்.** இலர் பலர் ஆகிய காரணம் நோலாதவர் பலர்—(இவ் வுலகின்கண்) வறிஞர் பலராயதற்குக் காரணம் (முன்) தவம் இழையாதார் பலர்; (உளர் சிலர் ஆகிய காரணம்) நோற்றார் சிலர்—(இவ் வுலகின்கண்) செல்வந்தர் சிலர் ஆயதற்குக் காரணம் (முன்) தவம் இழைத்தார் சிலர்.

**அகலம்.** 'உளர் சிலர் ஆகிய காரணம்' என்பது சொல்லெச்சம். ஆகியதற்குக் காரணத்தை ஆகிய காரணம் என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'நோற்பார்'. 'ஆகிய காரணம்' என்று ஆசிரியர் கூறியிருத்தலான், 'நோற்றார்' என்பதே அவர் பாடம் என்று கொள்க.

**கருத்து.** தவம் செய்தலும் அது செய்யாமையும் முறையே செல்வத்திற்கும் வறுமைக்கும் காரணம். 240.

## உ௰௫-ம் அதி:—கூடா வொழுக்கம்.

அஃதாவது, பொருந்தாத ஒழுக்கம்.

க. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும்.

**பொருள்.** வஞ்ச மனத்தான் படிறு ஒழுக்கம்—வஞ்சக மனத்தை யுடையவனது பொய்யான(தவ)ஒழுக்கத்தை, பூதங்கள் ஐந்தும் அகத்தே நகும்—உடம்போடு பொருந்திய பொறிகள் ஐந்தும் உள்ளே சிரிக்கும்.

**அகலம்.** படிறு + ஒழுக்கம்=படிற்றொழுக்கம். படிறு—பொய். பூதங்கள் என்பது ஆகு பெயர், அவற்றைத் தன்மாத்திரையாக வுடைய பொறிகளுக்கு ஆயினமையால். பொறி—அறிகருவி. ஐம்பொறி

களாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்பவற்றிற்கு முறையே மண், நீர், தீ, காற்று, ஆகாயம் தன் மாத்திரைகள். அதனால், பொறிகளைப் பூதங்கள் என்றார்.

**கருத்து.** பொய்யொழுக்கம் உடையானை அவன் மனச்சான்றே வருத்தும். 241.

உ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றம் படின்.

**பொருள்.** தன் நெஞ்சம் தான் அறி குற்றம் படின்—தனது மனம் தான் அறிந்த குற்றத்தின்கண் பொருந்தின், வான் உயர் தோற்றம் எவன் செய்யும்—வான்போல் உயர்ந்த தவவேடம் யாது பயனைச் செய்யும்? (ஒரு பயனையுஞ் செய்யாது.)

**அகலம்.** மணக்குடவர், தாமத்தர் பாடம் 'குற்றம் படின் மற்றை மூவர் பாடம் ' குற்றப் படின் '

**கருத்து.** தீய ஒழுக்க முடையானுக்கு அவன் தவ வேடம் யாதொரு பயனையும் தாராது. 242

௩. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

**பொருள்.** வலி இல் நிலைமையான் வல் உருவம் (கொள்ளல்)—(தீய நெறிகளில் செல்ல விடாது மனத்தை அடக்கும்) வலிமை யில்லாத நிலைமையை யுடையவன் வலிய தவ வேடத்தைக் கொள்ளுதல், பெற்றம் புலியின் தோல் போர்த்து மேய்ந்து அற்று—பசு புலியினுடைய தோலை (த்தன் மீது) போர்த்துக்கொண்டு (பைங் கூழை) மேய்ந்தாற் போலும்.

**அகலம்.** மேய்ந்து என்றமையால், பைங்கூழ் என்பது வருவித்து உரைக்கப்பட்டது. மேய்ந்தற்று என்பது வினைத் தொகை.

அது மேய்ந்தால் அற்று என விரியும். கொள்ளல் என்பது அவாய் நிலையான் வந்தது.

**கருத்து.** மனத்தை அடக்கும் வலி இல்லாதான் தவ வேடம் புனைதல் உலகத்தாரை வஞ்சித்தற்காகவே. 243.

ச. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

**பொருள்.** தவம் மறைந்து அல்லவை செய்தல்— (ஒருவன்) தவ வேடத்தின்கண் மறைந்து (நின்று) மறங்களைச் செய்தல், வேட்டுவன் புதல் மறைந்து புள் சிமிழ்த்து அற்று—வேடன் புதலின் கண் மறைந்து (நின்று) பறவைகளைப் பிணித்தாற் போலும்.

**அகலம்.** தவம் என்பது ஆகு பெயர், தவ வேடத்திற்கு ஆயி னமையால். புதல்—நாணல், புல். புள் என்பது சாதி ஒருமைப் பெயர். சிமிழ்த்தற்று என்பது வினையெச்சத் தொகை.

**கருத்து.** தவவேடம் புனைந்து பாவம் புரிதல் கொலை செய்தலை ஒக்கும். 244.

ரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
றேதம் பலவுந் தரும்.

**பொருள்.** பற்று அற்றேம் என்பார் படிறு ஒழுக்கம்—(அகத் தின்கண் யாதொரு பற்றினின்றும் நீங்காதாரா யிருக்கப் புறத்தில்) பற்றுக்களினின்று நீங்கினேம் என்று கூறும் துறவு வேடத்தவரது பொய் யொழுக்கம், எற்று எற்று என்ற ஏதம் பலவும் தரும்—கொல் வெட்டு என்று சொல்லுதற்குக் காரணமாய குற்றங்கள் பலவற்றை யும் கொடுக்கும்.

**அகலம்.** எற்று எற்று என்பது துறவு வேடத்தான் தீயன புரிதற்காகப் பிறன் இல்லின்கண் சென்று பிறன் கைப்பட்டபொழுது

அப் பிறன் தன் பக்கத்தில் நிற்பானைப் பார்த்துக் கூறும் கூற்று. என்ற ஏதம் என்பது செய்யுள் விகாரத்தால் அகரங் கெட்டு என்றே தம் என்று ஆயிற்று. தருமர் பாடம் 'பற்றற்றே மென்பான்'.. தாமத்தர் பாடம் 'பற்றற்றே மென்பான்'. நச்சர் பாடம் 'பற்றற்றே மென்பார்'.

**கருத்து.** தவவேடம் புனைந்து தீயன புரிவோர் கொலையுண்டு இறப்பர். 245

அ. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

**பொருள்.** நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வாரின்—மனத்தில் (ஒரு பொருளினின்றும்) துறவாதவராய் (எல்லாப் பொருள்களினின்றும்) துறந்தவர் போல (உலகத்தாரை) வஞ்சித்து வாழ்வாரினும், வன் கண்ணார் இல்—கொடுமையாளர் (வேறு) இல்லை.

**அகலம்.** வன் கண்ணார் என்பது ணகர வொற்றுக் கெட்டு நின்றது.

**கருத்து.** அவ்வாறு வாழ்பவர் மிக மிகக் கொடியர். 246.

எ. புறங்குன்றிக் கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.

**பொருள்.** புறம் குன்றி கண்டு அனையர் எனும்—புறத்தில் குன்றி உருண்டை(யின் செம்மை நிறத்தை) ஒப்பவரேனும், அகம் குன்றி மூக்கின் கரியார் உடைத்து—அகத்தில் குன்றி மூக்கைப் போலக் கரிய தன்மையை யுடையவரை (இவ் வுலகம்) உடையது.

**அகலம்.** நூற் கண்டு என்பது போலக் குன்றிக் கண்டு என்பது குன்றி உருண்டை என்று பொருள் தந்து நின்றது. கரிய தன்மை—

—மறங்கள் நிறைந்த தன்மை. குன்றிக் கண்டு என்பது ஆகு பெயர், அதன் நிறத்திற்கு ஆயினமையால். தருமர், தாமத்தர் பாடம் 'புறங்குன்றிக் கண்டனையர்'. மற்றை மூவர் பாடம் 'புறங்குன்றி கண்டனையர்'.

**கருத்து.** ஒருவனை அவனது புற வேடத்தாற் கொள்ளற்க.

அ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.

**பொருள்.** மனத்தது மாசு ஆக—மனத்திலுள்ளது குற்றமாயிருக்க, மாண்டார் நீர் ஆடி—மாட்சிமைப்பட்ட தவத்தினர் (மூழ்கும் தூய) ஆறுகளில் மூழ்கி, மறைந்து ஒழுகும் மாந்தர் பலர் (உண்டு)—ஒளித்து ஒழுகும் மாந்தர் பலர் (இவ் வுலகத்தின்கண்) உண்டு.

**அகலம்.** நீர் என்பது ஆகுபெயர், அதனையுடைய ஆற்றுக்கு ஆயினமையால். ஒளித்து ஒழுகலாவது, தீய வினைகளைப் பிறர் அறியாமல் செய்தல். தூய ஆறுவது, தன்கண் மூழ்கினவரைத் தூயராக்கும் ஆறு. அஃதாவது, கங்கை போன்ற புண்ணிய நதி.

**கருத்து.** ஒருவனை அவனது புறச் செயல்களால் கொள்ளற்க.

க. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்.

**பொருள்.** கணை கொடிது—அம்பு (உருவத்தால் நேரியதாயினும் செயலால்) கொடியது; யாழ்கோடு செவ்விது—யாழின் கோடு (உருவத்தால் கோடிய தாயினும் செயலால்) நேரியது; ஆங்கு அன்ன—அவ்வாறு போல, வினை படு பாலால் கொள்ளல்—(ஒவ்வொருவரையும் அவரவர்) வினைகள் படும் பகுதியால் கொள்க.

**அகலம்.** கொள்ளல் என்பது ளகர வொற்றுக் கெட்டு நின்றது நேரியது—நல்லது. கோடு—கொம்பு. அஃதாவது, யாழின் நரம்பின்

குச்சுகள் செறுகப்பட்டிருக்கும் தலைப் பாகம்.

**கருத்து.** தீய வினை யுடையாரைத் தீய ரென்றும், தூய வினை யுடையாரைத் தூய ரென்றும் அவரவர் வினைகளை நோக்கி ஒவ் வொருவரையுங் கொள்க. 249.

ய. மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின்.

**பொருள்.** உலகம் பழித்தது ஒழித்து விடின்—உயர்ந்தோர் பழித்ததாகிய தீய ஒழுக்கத்தை ஒழித்து விட்டால், மழித்தலும் நீட்டலும் வேண்டா—(ஒருவன்) மொட்டை யடித்தலும் சடை வளர்த்தலும் வேண்டா.

**அகலம்.** மழித்தலும் நீட்டலும் துறவிகள் பூணும் வேடமாக லான், அவை ஈண்டுக் கூறப்பட்டன. "உலக மென்பது உயர்ந்தோர் மாட்டே" என்ப வாகலான், உலகம் என்பதற்கு உயர்ந்தோர் எனப் பொருள் உரைக்கப்பட்டது. **தருமர்** பாடம் 'வழித்தலும்'.

**கருத்து.** தவத்திற்கு வேடம் இன்றி யமையாத தன்று; தீய ஒழுக்கத்தை விடுதலே இன்றி யமையாதது. 250.

## உயகூ-ம் அதி:— வெஃகாமை.

அஃதாவது, பிறரது பொருளை விரும்பாமை.

க. நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றுங்
குற்றமு மாங்கே தரும்.

**பொருள்.** நடுவு இன்றி நன் பொருள் வெஃகின்—(ஒருவன்) நடுவு நிலைமை இல்லாமல் (பிறரது) நல்ல பொருளை (க்கவர) விரும் பின், (அது) குடி பொன்றும் குற்றமும் தரும்—அது தனது குடும்பத் தோடு அழிவதற்கு ஏதுவாகும் குற்றமும் தரும்.

அகலம். குற்றமும் என்பதன் உம்மை இழிவுசிறப்பு. குடி பொன்றுவதற்கு ஏதுவாய குற்றத்தைக் குடிபொன்றும் குற்றம் என்றார். 'ஆங்கு, ஏ என்பன அசைகள். தருமர் பாடம் 'நடு வன்றி'. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'குடிபொன்றி.' இப் பாடத்தை ஆசிரியர் பாடமாகக் கொண்டு, பொன்றி என்னும் தன் வினை பொன்றுவித்து என்னும் பிறவினைப் பொருள் தந்து நின்றது என்பர் தொல்காப்பியச் சூத்திர விருத்திகாரர்.

**கருத்து.** பிறர் பொருளைக் கவர விரும்புவோன் தன் குடும்பத் தோடு அழிவன். 251.

உ. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவின்மை நாணு பவர்.

**பொருள்.** நடுவு இன்மை நாணுபவர்—நடுவு நிலைமை யின்மை க்கு அஞ்சுகின்றவர், படு பயன் வெஃகி பழி படுவ செய்யார்—அழி யும் பயனை விரும்பிப் பழியின்கண் படுஞ் செயல்களைச் செய்யார்.

அகலம். தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் 'நடு வன்மை'. முந்திய குறளில் 'நடுவின்றி' என ஆசிரியர் கூறி யிருத் தலின், 'நடுவின்மை' என்பதே அவர் பாடம் எனக் கொள்ளப் பட்டது.

**கருத்து.** நடுவு நிலைமையைக் கைக்கொண்டவர் பிறரது பொரு ளை வெஃகார். 252.

ங. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

**பொருள்.** சிறு இன்பம் வெஃகி அறன் அல்ல செய்யார்— (பொருளால் வரும்) சிற்றின்பத்தை அவாவி அறம் அல்லாத செயல் களைச் செய்யார், மற்று இன்பம் வேண்டுபவர்—பேரின்பத்தை அவாவுகின்றவர்.

**அகலம்.** அறம் அல்லாத செயல்கள்—மறங்கள். சிறிது நேரத்தில் கழியும் இன்பத்தைச் சிற்றின்பம் என்றார். சிறு+இன்பம்=சிற்றின்பம். ஏகாரம் ஈற்றசை. தருமர் பாடம் 'சிற்றின்பம் வேண்டி'.

**கருத்து.** சிற்றின்பங்களை வெஃகி மறங்கள் செய்யார் பேரின்பம் வேண்டுபவர். 253.

> ச. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
> புன்மையில் காட்சி யவர்.

**பொருள்.** புலம் வென்ற புன்மை இல் காட்சியவர்—ஐம் புலங்களையும் வென்ற புன்மை இல்லாத மெய்யறிவுடையார், இலம் என்று வெஃகுதல் செய்யார்—(யாம் பொருள்) இல்லேம் என்று (பிறர் பொருளை) விரும்புதல் செய்யார்.

**அகலம்.** ஐம் புலங்களாவன:—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

**கருத்து.** வறுமை காரணமாகப் பிறர் பொருளை வெஃகார் மெய்யறி வுடையார். 254.

> ரு. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
> வெஃகி வெறிய செயின்.

**பொருள்.** வெஃகி யார்மாட்டும் வெறிய செய்யின்—பொருளை விரும்பி எவரிடத்தும் வெறிச் செயல்களைச் செய்யின், அஃகி அகன்ற அறிவு என் ஆம்—நுண்ணியதாய் (நூல்களிற் சென்று) விரிந்த அறிவு யாது பயனைச் செய்யும்? (ஒரு பயனையும் செய்யாது.)

**அகலம்.** வெறிச் செயல்கள்—மூர்க்கச் செயல்கள். தருமர் பாடம் 'வெரிய செயின்'.

**கருத்து.** பிறர் பொருளை வெஃகி வெறிச் செயல்களைச் செய்தல் அறிவில்லாதார் செயல். 255.

௬. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

**பொருள்.** அருள் வெஃகி ஆற்றின்கண் நின்றான்—அருளை (அடைய) விரும்பி (அதற் குரிய துறவு) நெறியின்கண் நின்றவன், பொருள் வெஃகி பொல்லாத சூழ கெடும்—(பிறன்) பொருளை (அடைய) விரும்பித் தீய வினைகளை எண்ணக் கெடுவான்.

**கருத்து.** துறவி பிறன் பொருளை வெஃகின் அழிவன். 256.

௭. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.

**பொருள்.** வெஃகி ஆம் ஆக்கம் வேண்டற்க—(ஒருவன் பிறன் பொருளை) விரும்பி (அதனால்) ஆகும் செல்வத்தை விரும்பற்க, விளைவயின் ஆம் பயன் மாண்டற்கு அரிது—(வெஃகல்) விளையும் இடத்து உண்டாகும் பயன் மாட்சிமைப் படுதற்கு அரியது (ஆகலான்).

**அகலம்.** மாட்சிமைப் படுதற்கு அரியது—பெருமைப்படுதற்கு முடியாதது.

**கருத்து.** பிறன் பொருளைக் கவர விரும்புதல் பின்னர்ச் சிறுமையைத் தரும். 257.

௮. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.

**பொருள்.** செல்வம் அஃகாமைக்கு (வழி) யாது என்னின்—செல்வம் சுருங்காமைக்கு வழி யாது என்றால், பிறன் கை பொருள் வெஃகாமை வேண்டும்—பிறனது கைப் பொருளைக் கவர விரும்பா திருத்தல் வேண்டும்.

**அகலம்.** செல்வத்திற்கு என்பதி லுள்ள நான்காம் வேற்றுமை யுருபைப் பிரித்து, அஃகாமை என்பதனுடன் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. வழி என்பது அவாய்நிலையான் வந்தது.

**கருத்து.** பிறன் பொருளை வெஃகாதான் செல்வம் மேன் மேலும் வளரும்.

258

௯. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

**பொருள்.** அறன் அறிந்து வெஃகா (த) அறிவுடையார்—அற நூலை அறிந்து (பிறன் பொருளை) விரும்பாத அறிவுடையவரை, திறன் அறிந்து திரு சேரும்—(அவர்) செவ்வி தெரிந்து திருமகள் சேர்வள்.

**அகலம்.** செவ்வி—சமயம். ஆங்கு, ஏ என்பன அசைகள்.

**கருத்து.** பிறன் பொருளை வெஃகாரைத் திருமகள் சேர்வள்.

௰. இறலீனு மெண்ணாது வெஃகல் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

**பொருள்.** எண்ணாது வெஃகல் இறல் ஈனும்—(பின் விளையும் பயனை) எண்ணாமல் (பிறன் பொருளைக்) கவர விரும்புதல் அழிவைக் கொடுக்கும்; வேண்டாமை என்னும் செருக்கு விறல் ஈனும்—(பிறன் பொருளை) விரும்பாமை என்னும் செருக்கு வெற்றியைக் கொடுக்கும்.

**அகலம்.** தருமர் பாடம் 'இறலீனு மின்னாத'. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'வெஃகின்'. வெஃகின் என்னும் பாடத்தைக் கொள்ளுங்கால், 'அது' என்னும் தோன்றா எழுவாயை வருவிக்க வேண்டிய திருத்தலானும், 'வேண்டாமை யென்னுஞ் செருக்கு விறலீனும்' என்று கூறியிருத்தல்போல 'வெஃகல் இறலீனும்' என்று கூறுதலே பொருத்த மாகலானும், வெஃகல் என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** பிறன் பொருளை வெஃகுதல் அழிவைத் தரும்; வெஃகாமை வெற்றியைத் தரும்.

260.

## உயஎ-ம் அதி:—பயனில சொல்லாமை.

அஃதாவது, பயன் இல்லாத சொற்களைச் சொல்லாமை.

க. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும்.

**பொருள்.** பல்லார் முனிய பயன் இல சொல்லுவான்—(அறிஞர்) பலர் வெறுக்கும்படியாகப் பயன் இல்லாத சொற்களைச் சொல்லுபவன், எல்லாரும் எள்ள படும்—எல்லாராலும் இகழப் படுவன்.

**அகலம்.** தருமர் பாடம் 'பயனில்சொல்'. எல்லாரும் என்பது மூன்றும் வேற்றுமைத் தொகை.

**கருத்து.** பயன் இல்லாத சொற்களைச் சொல்பவன் எல்லாராலும் இகழப் படுவன். 261.

உ. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது.

**பொருள்.** பல்லார்முன் பயன் இல சொல்லல்—பலர்முன் பயன் இல்லாத சொற்களைச் சொல்லுதல், நட்டார்கண் நயன் இல செய்தலின் தீது—நட்பினர்மாட்டு (அவர்க்கு) விருப்பம் இல்லாத செயல்களைச் செய்தலினும் தீது.

**கருத்து.** பலர் முன் பயன் இல்லாத சொற்களைச்சொல்லுதல் நட்டார் விரும்பாத செயல்களைச் செய்தலினும் தீது. 262.

ந. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.

**பொருள்.** பயன் இல பாரித்து உரைக்கும் உரை—பயன் இல்லாத சொற்களை விரித்துப் பேசும் பேச்சு, நயன் இலன் என்பது சொல்லும்—(அவ்வாறு பேசுவோன்) நன்மை இல்லாதவன் என்பதைக் கூறும்.

**கருத்து.** பயனில சொல்லுவான் நல்லவன் அல்லன் என்று கருதப்படுவான். 263.

ச. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.

**பொருள்.** பல்லார் அகத்து பயன் சாரா(த) பண்புஇல் சொல்—பலர் நடுவில் (சொல்லிய) பயன் பொருந்தாத குணமற்ற சொற்கள், நயன் சாரா நன்மையின் நீக்கும்—இன்பம் பொருந்தாதனவாய் (அச் சொற்களைச் சொல்லியவனை) அறத்தினின்று நீக்கும்.

**அகலம்.** சொல்லிய என்பது அவாய்நிலையான் வந்தது. தருமர், தாமத்தர் பாடம் 'நயஞ்சாரா'. நச்சர் பாடம் 'நயஞ்சாரா நன்மையு நீங்கும் பயஞ்சாரா'. மணக்குடவர் பாடம் 'நீங்கும்'.

**கருத்து.** பயனில சொல்வார் அறமும் இன்பமும் இழப்பர். 264.

ரு. சீர்மை சிறப்பொடு னீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

**பொருள்.** நீர்மை யுடையார் பயன் இல சொல்லின்—(துறவுத்) தன்மையை யுடையார் பயன் இல்லாத சொற்களைச் சொல்லின், சீர்மை சிறப்பொடு நீங்கும்—(அவருடைய) சீரிய ஒழுக்கமும் பெருமையும் (அவரை விட்டு) நீங்கும்.

**அகலம்.** 'ஒடு' உம்மைப் பொருளில் வந்தது.

**கருத்து.** துறவிகள் பயனில சொல்லின் தமது ஒழுக்கத்தையும் பெருமையையும் இழப்பர். 265.

சா. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

**பொருள்.** பயன் இல் சொல் பாராட்டுவானை—பயன் இல்லாத சொற்களைப் பாராட்டுவானை, மகன் என்னல்—மனிதன் என்று சொல்லற்க; மக்கள் பதடி என்னல்— மனிதரில் பதர் என்று சொல்லுக.

# பயனில சொல்லாமை.

அகலம். பாராட்டுதல்—கொண்டாடுதல். அஃதாவது, பிரியமாகப் பேசுதல். என்னல் இரண்டும் னகர வொற்றுக் கெட்டு நின்றன.

கருத்து. பயனில சொல்லுவான் மக்களுட் பதர். 266.

எ. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

பொருள். சான்றோர் நயன் இல சொல்லினும் சொல்லுக—(அறவொழுக்கங்களால்) நிறைந்தோர் இன்பம் இல்லாத சொற்களைச் சொல்லினும் சொல்லுக; பயன் இல சொல்லாமை நன்று—பயன் இல்லாத சொற்களைச் சொல்லாதிருத்தல் நன்மை.

கருத்து. துறவிகள் பயனில சொல்லற்க. 267.

அ. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

பொருள். அரு பயன் ஆயும் அறிவினார்—(ஆராய்தற்கு) அரிய பொருளை ஆராயும் அறிவை யுடையவர், பெரு பயன் இல்லாத சொல் சொல்லார்—பெரிய பயன் இல்லாத சொற்களைச் சொல்லார்.

அகலம். அரிய பொருளாவது, மெய்ப்பொருள்.

கருத்து. மெய்ப்பொருளை ஆராய்வார் பயனில சொல்லற்க.

கூ. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

பொருள். மருள் தீர்ந்த மாசு அறு காட்சி அவர்—மயக்கம் தீர்ந்த குற்றமற்ற அறிவினை யுடையார், பொருள் தீர்ந்த பொச்சாந்தும் சொல்லார்—பயன் நீங்கிய சொற்களை மறந்தும் சொல்லார்.

அகலம். தருமர் பாடம் 'பொய்ச்சார்ந்தும்'. நச்சர் பாடம் 'பொய்ச்சாந்தும்'. 'அறு' என்பது வினைத்தொகை.

**கருத்து.** மெய்யறிவுடையார் மறந்தும் பயனில சொல்லார்.

௰. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

**பொருள்.** சொல்லின் பயன் உடைய சொல்லுக—(ஒருவன்) பேசின் பயனுடைய சொற்களைச் சொல்லுக; சொல்லில் பயன் இல்லா(த) சொல் சொல்லற்க—சொற்களுள் பயன் இல்லாத சொற்களைச் சொல்லற்க.

**அகலம்.** 'இல்லாத' என்பது ஈறும் லகரவொற்றும் கெட்டு நின்றது.

**கருத்து.** பயனில சொல்லற்க; பயனுடைய சொல்லுக. 270.

உ௰உம்-அதி:— வெகுளாமை.

அஃதாவது, வெகுளாதிருத்தல். வெகுளல்—கோபித்தல்.

க. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கிலென் காவாக்கா லென்.

**பொருள்.** செல் இடத்து காப்பான் சினம் காப்பான்—(வெகுளி) செல்லும் இடத்து (செல்ல விடாது) காப்பவன் வெகுளியைக் காப்பவன் (ஆவான்); அல் இடத்து காக்கில் என் காவா(த) கால் என்—(வெகுளி) செல்லாத விடத்து (வெகுளியைக்) காத்தால் யாது பயன்? காவாத பொழுது யாது பயன்? (ஒரு பயனும் இல்லை.)

**அகலம்.** செல்லிடமாவது, வெகுளி செல்லக்கூடிய இடம். அஃதாவது, தம்மின் மெலியாரிடம். செல்லாத விடத்து வெகுளியைக் காத்ததாகச் சொல்லல் முடியாது, அவ் விடத்து வெகுளியைச் செலுத்தின் அது தடுக்கப்பட்டுப் போமாகலான். செல்லாத இடம்—தம்மின் வலியாரிடம். தருமர் பாடம் 'செல்லிடத்திற்'; 'அல்லிடத்திற்'. மற்றை நால்வர் பாடம் 'காக்கினென்'. மணக்

குடவர் பாடம் 'காக்கி லென்'. 'காவாக்கா லென்' என்று பின்னர்க் கூறியிருத்தலான், 'காக்கிலென்' என்னும் மணக்குடவர் பாடமே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** மெலியாரிடத்து வெகுளியைக் காக்கக் கடவர். 271.

உ. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற.

**பொருள்.** செல்லா (த) இடத்து சினம் தீது—செல்லாத இடத்து(த்தன்) வெகுளி (தனக்கு இம்மையில்) தீமையை விளைக்கும்; செல் இடத்தும் அதனின் தீய பிற இல்—செல்லும் இடத்தும் அது போல (த்தனக்கு மறுமையில்) தீமையைத் தருவன பிற இல்லை.

**அகலம்.** தன்னின் வலியவனிடத்துச் சினத்தைச் செலுத்தின், அவனால் இம்மையில் தனக்குத் தீங்கு விளையும் எனவும், தன்னின் மெலியவனிடத்துச் சினத்தைச் செலுத்தின், அதனால் மறுமையில் தனக்குத் தெய்வ தண்டனை கிடைக்கும் எனவும் கூறிய வாறு.

**கருத்து.** தன்னின் மெலியவனிடத்தாயினும், வலியவனிடத்தாயினுஞ் செலுத்தப்படும் வெகுளி தனக்குத் தீங்கு பயக்கும். 272.

ஙா. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.

**பொருள்.** யார்மாட்டும் வெகுளியை மறத்தல்—(ஒருவன்) எவரிடத்தும் வெகுளியை மறக்கக் கடவன்; அதனான் தீய பிறத்தல் வரும்—வெகுளியால் தீய செயல்கள் பிறத்தல் உண்டாம் (ஆகலான்).

**கருத்து.** வெகுளி தீமையைத் தருதலான், எவரிடத்தும் வெகுளி கொள்ளற்க. 273.

நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற.

**பொருள்.** நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்—(ஒருவனது) முகச் சிரிப்பையும் அகக் களிப்பையும் அழிக்கும் வெகுளியைப் போல, பிற பகையும் உளவோ—மற்றைய பகைகளும் உள்ளனவோ? (இல்லை.)

**கருத்து.** வெகுளி தனது சிரிப்பையும் களிப்பையும் கெடுக்கும். 274.

ரு. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம்.

**பொருள்.** தான் தன்னை காக்கின் சினம் காக்க—ஒருவன் தன்னைக் காக்க விரும்பின் (தன்னிடம்) வெகுளி (வராமல்) காக்கக் கடவன், காவா(த)கால் சினம் தன்னையே கொல்லும்—காவாத பொழுது வெகுளி தன்னையே அழிக்கும் (ஆகலான்).

**அகலம்.** காக்க விரும்பின் என்பதைக் காக்கின்என்றார்.

**கருத்து.** ஒருவன் வெகுளி அவனைக் கொல்லும். 275.

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்.

**பொருள்.** சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி—வெகுளி என்று சொல்லப்படும் தீ, இனம் என்னும் ஏம புணையை சுடும்—சுற்றம் என்று சொல்லப்படும் காப்புத் தோணியை எரிக்கும்.

**அகலம்.** தான் சேர்ந்த பொருளை அழித்தலால் ‘ தீ சேர்ந்தாரைக் கொல்லி ’ என்ற பெயர் பெற்றது. கொல்லி என்பது வினையாலணையும் பெயர். இத் தீ ஏனைய தீப் போலல்லாமல் தன்னைச் சேர்ந்தாரையும் தன்னைச் சேராதாரையும் ஒருங்கு அழிக்கும் என்றார்.

**கருத்து.** வெகுளி யுடையானை விட்டு அவன் சுற்றத்தாரும் நீங்குவர். 276.

# வெகுளாமை.

எ. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

**பொருள்.** சினத்தை பொருள் என்று கொண்டவன் கேடு—வெகுளியை (க் கொள்ளத் தக்க) பொருள் என்று கொண்டவன் அழிவுறுதல், நிலத்து அறைந்தான் கை பிழையாது அற்று—நிலத்தின்கண் (கையால்) அடித்தவனுடைய கை பிழையாதாற் போலும்.

**அகலம்.** பிழையாதற்று என்பது எதிர்மறை வினையெச்சத் தொகை. அது பிழையாதால் அற்று என விரியும். மணக்குடவர் பாடம் 'நிலத்தெறிந்தான்

**கருத்து.** வெகுளியைக் கொண்டவன் அழிதல் திண்ணம்.

அ. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.

**பொருள்.** எரி இணர் தோய்வு அன்ன இன்னா செய்யினும்—தீயின் சுடர்கள் சுடுதல் போன்ற துன்பங்களை (ஒருவன்) செய்யினும், புணரின் வெகுளாமை நன்று—கூடுமாயின் வெகுளா திருத்தல் நன்மை.

**அகலம்.** இணரெரி தோய்வால் உளதாகும் இன்னா வன்ன இன்னாவை இணரெரி தோய் வன்ன இன்னா என்றார். புணரின் என்பதற்கு அவ் வின்னாவைச் செய்தவர் தன்பால் வந்து சேரின் என்று உரைப்பினும் அமையும்.

**கருத்து.** தனக்குத் தீங்கு செய்தார்பாலும் வெகுளாதிருத்தல் நன்று. 278.

கூ. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்.

**பொருள்.** உள்ளத்தால் வெகுளி உள்ளான் என்னின்—(ஒரு வன்) மனத்தால் சினத்தை நினையான் என்றால், உள்ளிய எல்லாம் உடன் எய்தும்—(அவன்) நினைத்தன வெல்லாம் உடனே வந்து சேரும்.

**அகலம்.** மனத்தால் நினைத்தல், வாயாற் சொல்லல் என்பன உலக வழக்கு. தாமத்தர், நச்சர் பாடம் 'உள்ளிய தெல்லாம்'.

**கருத்து.** வெகுளி இல்லாதான் விரும்பிய எல்லாவற்றையும் அடைவன். 279.

ய. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

**பொருள்.** சினத்தை இறந்தார் இறந்தார் அனையர்—சினத்தின்கண் அளவு கடந்தார் செத்தாரை ஒப்பர்; சினத்தை துறந்தார் துறந்தார் துணை—வெகுளியை விடுத்தவர் துறந்தாரை ஒப்பர்.

**அகலம்.** சினத்தை என்பது சிங்க நோக்காக ஈண்டு வைக்கப் பட்டிருக்கின்றமையால், அதனை முன்னரும் பின்னரும் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. முன்னர்க் கூட்டிய விடத்து அதனை வேற்றுமை மயக்கமாகக் கொள்க.

**கருத்து.** வெகுளியை விட்டார் துறவிகளை ஒப்பர். 280.

உயகூ-ம் அதி :—இன்னா செய்யாமை.

அஃதாவது, பிற உயிர்களுக்குத் துன்பங்கள் செய்யா திருத்தல்.

க. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

**பொருள்.** மாசு அற்றார் கோள்—குற்றம் அற்றவரது கோட் பாடு, சிறப்பு ஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கு இன்னா செய்யாமை

## இன்னா செய்யாமை.

—வீட்டினை நல்கும் செல்வத்தைப் பெறினும் பிறர்க்குத் துன்பங் கள் செய்யா திருத்தல்.

**கருத்து.** *பிறர்க்கு இன்னா செய்யாமை நல்லவரது கடமை.*

உ. *கறுத்தின்னா செய்தவற் கண்ணு மறுத்தின்னா*
*செய்யாமை மாசற்றார் கோள்.*

**பொருள்.** *மாசு அற்றார் கோள்—குற்றம் அற்றவரது கோட்பாடு, கறுத்து இன்னா செய்தவன்கண்ணும் மறுத்து இன்னா செய்யாமை—வெகுண்டு (தமக்குத்) துன்பங்கள் செய்தவனுக்கும் திரும்பித் துன்பங்கள் செய்யா திருத்தல்.*

அகலம். தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் '*செய்தவற் கண்ணும்*'. பரிமேலழகர், நச்சர் பாடம் '*செய்தவக் கண்ணும்*'. *அகரச் சுட்டு வேண்டாத தொன் றாகலானும், மறுத்து எனப் பின்னர்க் கூறுதலானும், முந்திய மூவர் பாடமே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. செய்தவற்கண்ணும் என்பது வேற்றுமை மயக்கம், ஏழாம் வேற்றுமை யுருபு நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்தமையால்.*

**கருத்து.** *தமக்குத் துன்பஞ் செய்தவனுக்கும் தாம் துன்பஞ் செய்ய லாகாது.* 282.

௩. *செய்யார்மற் செற்றார்க்கு மின்னாத செய்தபி*
*னுய்யா விழுமந் தரும்.*

**பொருள்.** *செற்றார்க்கும் இன்னாத செய்யார்—(அறிவுடையார்) பகைவர்க்கும் துன்பந் தரும் செயல்களைச் செய்யார், செய்த பின் உய்யா விழுமம் தரும்—(இன்னாத) செய்த பின்னர் (அச் செயல்) தப்ப முடியாத துன்பத்தைத் தரும் (ஆகலான்).*

**அகலம்.** மன் என்பது அசை. **பரிமேலழகர்** பாடம் 'செய் யாமற்'. **தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர்** பாடம் 'செய்யாமை'. துறந்தார் பிறர்க்கு இன்னா செய்யார் என்பது யாவ ரும் அறிந்த உண்மை. அதனைச் 'செய்யாமல்' என்று விதந்து கூற வேண்டா. பிறர்க்கு யாதொரு தீங்கும் செய்யா திருக்கத் துறந்தார்மேல் பிறர் செற்றங் கொள்வது இயற்கைக்கு மாறு. ஆக லான், 'செய்யார்மன்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க. உய்ய முடியாத விழுமத்தை உய்யா விழுமம் என்றார்.

**கருத்து.** பிறர்க்கு இன்னா செய்யின், தமக்கு இன்னா வரும். 283.

ச. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.

**பொருள்.** இன்னா செய்தாரை ஒறுத்தல்—தமக்குத் துன்பஞ் செய்தவரை ஒறுத்தல், அவர் நாண நல் நயம் செய்துவிடல்—அவர் நாணும்படியாக நல்ல இன்பம் தருஞ் செயல்களைச் செய்து (அவரை விட்டு) நீங்குதல்.

**அகலம்.** நயம் தருஞ் செயல்களை நயம் என்றார். ஒறுத்தல்— தண்டித்தல். **தாமத்தர்** பாடம் 'நன்மையே'.

**கருத்து.** இன்னா செய்தார்க்கும் இனியவே செய்க. 284.

ரு. அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.

**பொருள்.** பிறிதின் நோய் தம் நோய் போல் போற்றா(த)கடை —(அறிவுடையார்) பிறிது (ஓர்) உயிரின் துன்பத்தைத் தமது துன் பம் போல் (கருதிக்) காவாத விடத்து, அறிவினான் ஆகுவது உண்டோ —(அவரது) அறிவுடைமையினால் ஆகும் பயன் உண்டோ? (இல்லை.)

**அகலம்** மணக்குடவர், தாமத்தர் பாடம் 'தன்னோய்போல்.'

# இன்னா செய்யாமை.

**கருத்து.** *அறிவுடைமைக்கு அழகு பிற உயிர்க்கு இன்னா செய்யாமை.* 285.

கூ. *இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை*
*வேண்டும் பிறன்கட் செயல்.*

**பொருள்.** *இன்னா என தான் உணர்ந்தவை—துன்பங்கள் எனத் தான் உணர்ந்தவற்றை, பிறன்கண் செயல் துன்னாமை வேண்டும்—பிறன்மாட்டுச் செய்தலைப் பொருந்தாமை வேண்டும்.*

**அகலம்.** "*தனக்கின்னா வின்னா பிறர்க்கு*".—பழமொழி நானூறு.

**கருத்து.** *தனக்குத் துன்பந் தரும் செயல்களைத் தாம் பிறர்க்குச் செய்யற்க.* 286.

எ. *எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானு*
*மாணாசெய் யாமை தலை.*

**பொருள்.** *எனைத்தானும் எ ஞான்றும் யார்க்கும்—எவ்வளவேனும் எந் நாளும் யார்க்கும், மாணா மனத்தானும் செய்யாமை தலை—துன்பந் தரும் செயல்களை உள்ளத்தாலும் செய்யாதிருத்தல் தலையாய துறவறம்.*

**அகலம்.** *தலை என்பது ஆகு பெயர், தலையாய துறவறத்திற்கு ஆயினமையால்.* **நச்சர், பரிமேலழகர்** *பாடம் 'மனத்தாலும்'. மற்றை மூவர் பாடம் 'மனத்தானும்'. மனத்தாலும் என்பது பொருத்தமான பொரு ளொன்றையும் தாராமையின், மனத்தானும் என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.*

**கருத்து.** *மனத்தானும் பிற உயிர்க்குத் துன்பஞ் செய்யாமை தலையாய துறவறம்.* 287.

அ. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்.

**பொருள்.** தன் உயிர்க்கு இன்னாமை தான் அறிவான்—(பிறன் செய்யும் இன்னா)தன் உயிர்க்குத் துன்பம் தருதலைத் தான் உணர்பவன், மன் உயிர்க்கு இன்னா செயல் என்?—(மற்றை) நிலைபேறுடைய உயிர்களுக்குத் துன்பஞ் செய்தல் யாது காரணம்?

**அகலம்.** கொல், ஓ என்பன அசைகள்.

**கருத்து.** துன்பம் எனத் தான் உணர்ந்தவற்றைப் பிற உயிர்க்குச் செய்தல் மடமையே. 288.

கூ. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றனக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

**பொருள்.** பிறர்க்கு இன்னா முற் பகல் செய்யின்—(ஒருவன்) பிறர்க்குத் துன்பந் தரும் செயல்களை முற்பகலின்கண் செய்யின், தனக்கு இன்னா தாமே பிற்பகல் வரும்—தனக்குத் துன்பங்கள் தாமேயாகப் பிற்பகலின்கண் வரும்.

**அகலம்.** ஞாயிறு தோன்றியது முதல் பத்து நாழிகை வரையில் முற் பகல் எனவும், அப் பத்து நாழிகை முதல் இருபது நாழிகை வரையில் பகல் எனவும், அவ் விருபது நாழிகை முதல் ஞாயிறு படும் வரையில் பிற் பகல் எனவும் சொல்லப்படும். மணக்குடவர், பரிமேலழகர் பாடம் 'தமக்கின்னா'. தருமர், மணக்குடவர், தாமத்தர் பாடம் 'தானே வரும்'. "முன்பகல் கண்டான் பிறன்கேடு தன்கேடு, பின்பகல் கண்டு விடும்".—பழமொழி நானூறு. 'தமக்கு' என்னும் சொல்லால் குறிக்கப்படுவோர் யாவரெனச் சொல்லல் இயலாமையின், தனக்கு என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** பிறர்க்குத் துன்பஞ் செய்யின், தனக்குத் துன்பம் தானே வரும். 289.

௰. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

**பொருள்.** நோய் எல்லாம் நோய் செய்தார் மேல ஆம்—துன் பங்க ளெல்லாம் (பிற உயிர்களுக்குத்) துன்பங்கள் செய்தார் மேலன வாம்; நோய் இன்மை வேண்டுபவர் நோய் செய்யார்—(ஆகலான், தமக்குத்) துன்ப மின்மையை விரும்புபவர் பிற உயிர்களுக்குத்) துன்பம் செய்யார்.

**அகலம்.** தருமர் பாடம் 'நோயெல்லா நோய்செய்வார்'

**கருத்து.** துன்பமுற வேண்டாதார் பிற உயிர்களுக்குத் துன் பம் செய்யற்க. 290.

## ௩௰-ம் அதி:—கொல்லாமை.

அஃதாவது, (ஓர் உயிரையும்) கொல்லாதிருத்தல்.

௧. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

**பொருள்.** அற வினை யாது என்னின் கொல்லாமை—அறச் செயல் யாது என்றால் (ஓர் உயிரையும்) கொல்லாதிருத்தல்; கோறல் பிறவினை எல்லாம் தரும்—கொல்லுதல் மறச் செயல் எல்லாவற்றை யும் கொடுக்கும்.

**அகலம்.** கொலையையே செய்யத் துணிந்தவன் மற்றைய பாவங்களை யெல்லாம் செய்வா னாகலான், கோறல் பிறவினை யெல் லாந் தரும் என்றார். பிற வினை எல்லாம் என்பதற்குப் பாவங்கள் எல்லாவற்றின் பயன்களையும் என்று உரைப்பாரும் உளர்.

**கருத்து.** ஓர் உயிரையும் கொல்லாதிருத்தலே உயர்ந்த அறம்.

௨. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

**பொருள்.** பகுத்து உண்டு பல் உயிர்(உம்) ஓம்புதல்—(தம் உணவைப் பிற உயிர்களுக்குப்) பகுந்து கொடுத்து (த்தாம்) உண்டு பல உயிர்களையும் பேணுதல், நூலோர் தொகுத்தவற்றுள் எல்லாம் தலை—(அற) நூலோர் (சிறந்த அறங்களென எடுத்துத்) தொகுத்துச் சொல்லியவற்றுளெல்லாம் தலையாய அறம்.

**அகலம்.** தலையாய அறத்தைத் தலை என்றார். தொகுத்தல்—ஒன்று சேர்த்தல். தொகுத்துச் சொல்லுதலைத் தொகுத்தல் என்றார். முற்றும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

**கருத்து.** பகுத்து உண்டு பல உயிரையுங் காத்தல் தலையாய அறம். 292.

ந. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

**பொருள்.** ஒன்றாக நல்லது கொல்லாமை—ஒப்பற்றதாக (நிற்கும்) நல்வினை (ஓர் உயிரையும்) கொல்லாதிருத்தல்: அதன்பின் சார பொய்யாமை நன்று—கொல்லாமையின்பின் நிற்கப் பொய்யாமை நன்று.

**அகலம்.** தள்ள வேண்டிய மறங்களுள் கொலை முதலாவதென்றும், பொய் இரண்டாவதென்றும் ஈண்டுக் கூறினார். கொள்ள வேண்டிய அறங்களுள் வாய்மை முதலாவதென்று "யாமெய்யாக் கண்டவற்றுள்" என்னும் தொடக்கத்துக் குறளில் கூறினார். மற்று என்பது அசை. **தருமர்** பாடம் 'பின் சாரல்'.

**கருத்து.** ஒழுக்கங்களில் உயர்ந்தது கொல்லாமை; அதற்கு அடுத்தது பொய்யாமை. 293.

ச. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

**பொருள்.** நல் ஆறு என படுவது யாது என்னின்—நல்ல நெறி என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது யாது என்றால், யாது ஒன்றும் கொல்லாமை சூழும் நெறி—யாதானும் ஓர் உயிரையும் கொல்லாதிருத்தலைச் சூழும் நெறி.

**அகலம்.** சூழ்தல்—எண்ணுதல்.

**கருத்து.** ஓர் உயிரையும் கொல்லாதிருத்தலே வீட்டினை அடைதற்கு நல்ல நெறி. 294.

ரு. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை.

**பொருள்.** நிலை அஞ்சி நீத்தாருள் எல்லாம்—(இல் வாழ்க்கை) நிலையை அஞ்சித் துறந்தாரு ளெல்லாம், கொலை அஞ்சி கொல்லாமை சூழ்வான் தலை—கொலையை அஞ்சி (ஓர் உயிரையும்) கொல்லாதிருத்தலை எண்ணுபவன் தலையானவன்.

**அகலம்.** துறவு நிலையின்கண் நிற்பான் பெறும் பேறுகளை யெல்லாம் இல் வாழ்க்கை நிலையின்கண் நிற்பான் பெறுவன் என மேலே கூறியிருத்தலானும், இல்வாழக்கையை நடாத்தும் திறமை இல்லாத காரணத்தாலேயே பெரும்பாலார் துறத்தலானும், 'இல் வாழ்க்கை நிலையை அஞ்சி' எனப் பொருள் உரைக்கப்பட்டது.

**கருத்து.** ஓர் உயிரையும் கொல்லாதவன் துறவிகளுள் உயர்ந்தவனாவன். 295.

சா. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று.

**பொருள்.** உயிர் உண்ணும் கூற்று—உயிரை உண்ணும் கூற்றம், கொல்லாமை மேல் கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல் செல்

லாது—கொல்லாமையாகிய நோன்பைக் கைக்கொண்டு ஒழுகுபவன் வாழும் நாளின்மேல் செல்லாது.

அகலம். கூற்றை வென்றவர் மார்க்கண்டன், நந்திகேசுரன், சிவேதன். இவர்கள் கூற்றை வென்ற விவரங்களை முறையே கந்த புராணத்திலும், இலிங்க புராணத்திலும், கூர்ம புராணத்திலும் காண்க. கூற்று—எமன்—மரணம்.

கருத்து. கொல்லாமையைக் கைக்கொண்டவனைக் கூற்றுவன் கொல்லான். 296.

எ. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

பொருள். தன் உயிர் நீப்பினும்—(பிறிது ஓர் உயிரை நீக்காத வழி அது) தன் உயிரை நீக்குமாயினும், தான் பிறிது இன் உயிர் நீக்கும் வினை செய்யற்க—தான் பிறிது (ஒரு) பிராணியின் இனிய உயிரை நீக்கும் செயலைச் செய்யற்க.

அகலம். தற் காப்பு நிமித்தமும் துறவி பிற உயிரை நீக்க லாகா தென்ற வாறு.

கருத்து. தன்னுயிரைக் கொல்ல வரினும் மன்னுயிரைக் கொல்லற்க. 297.

அ. நன்றாகு மாக்கம் பெறுமெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை.

பொருள். நன்று ஆகும் ஆக்கம் பெறும் என்னினும்—(கொலையால்) நன்கு வளரும் செல்வத்தைப் பெறுவர் என்றாலும், சான்றோர்க்கு கொன்று ஆகும் ஆக்கம் கடை—சால்புடையார்க்குப் பிற உயிரைக் கொன்று ஆகும் செல்வம் கடைப்பட்டது.

அகலம். கடைப்பட்டதனைக் கடை என்றார். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'பெரிதெனினும்'. நன்றாகு மாக்கம் பெரி

தெனினும் என்பது பொருத்தமான பொருளைத் தாராமையானும், 'பெறுமெனினும்' என்பது ஈண்டு இன்றியமையாது வேண்டப் படுவதாகலானும், பெறுமெனினும் என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. 'சான்றோர் பெறும்' என்பது "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில், செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே" என்னும் நன்னூற் சூத்திரத்திற்கு மாறுபடாதோ எனின், அச் சூத்திரம் "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை, அவ்வயின் மூன்று நிகழுங் காலத்துச், செய்யு மென்னுங் கிளவியொடு கொள்ளா" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தின் பொருளை உள்ளவாறு உணராது செய்யப்பட்டது என்க. என்னை? தன்மை, முன்னிலை, படர்க்கைப் பன்மைச் சொற்கள் நிகழுங்காலத்துச் செய்யும் என்னும் சொல்லோடு பொருந்தா என்று தொல்காப்பியனார் கூறியிருத்தலான், அம் மூன்றிடத்துப் பன்மைச் சொற்களும் இறந்தகாலத்துச் செய்யும் என்னும் சொல்லோடும், எதிர்காலத்துச் செய்யும் என்னும் சொல்லோடும் பொருந்தும் என்பதை நன்னூலார் உணராது போயினர். செய்யும் என்னும் சொல் தன்மைப் பன்மைச் சொல்லைக் கொண்டு முடிந்ததற்கு உதாரணம்:—"வையமகளை" என்று தொடங்கும் புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுளில் "என்னும்...யாம்". என்பது. ("என்னும் யாம்" என்று சொல்லுவம் யாங்கள்.)-முன்னிலைப் பன்மையில் வந்ததற்கு உதாரணம்:—"முதுமறை யந்தணிர் முன்னிய துரைமோ". (உரைமோ—உரையுமோ.).— மணிமேகலை—காதை ௰௩—வரி௫௯. படர்க்கைப் பன்மையில் வந்ததற்கு உதாரணம்:— "அறிந்தார் வீடெய்தும்".—"எந்நூற்கள்" என்னும் தொடக்கத்து அறநெறிச்சாரச் செய்யுள். இவை தவிர இன்னும் எத்தனையோ உதாரணங்கள் உள்ளன. நன்னூலைப் பேரிலக்கணமாகக் கொண்டு கற்ற நூற்பதிப்பாசிரியர் பலர் மேற்கண்ட நன்னூற் சூத்திரத்திற்கு இயையு மாறு பல நூற் பாடங்களைத் திருத்தி யுள்ளனர். இது மிக வருந்தத்

தக்கது.

கருத்து. கொலையால் ஆக்கம் வருமெனினும் கொலையினைச் செய்யற்க. 298.

௯. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

பொருள். கொலை வினையர் ஆகிய மாக்கள்—கொலைத் தொழி லின ராகிய மாக்கள், புன்மை தெரிவார் அகத்து வினை புலையர்—கீழ்மைத் தன்மையை அறிவாருள் தொழிற் புலையர் (ஆவர்).

அகலம். புலை வினையர்—என்பதை வினைப்புலையர் எனக் கொண்டு பொருள் உரைக்கப்பட்டது. இவரை உலகத்தார் கன்ம சண்டாளர் என்பர். மாக்கள் என்றமையால், கொலை வினையர் வடி வால் மக்களே ஆயினும், செயலால் விலங்கை ஒப்பர் என்று கொள்க.

கருத்து. கொலைத் தொழில் புரிபவர் புலைய ராவர். 299.

ம. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

பொருள். செயிர் உடம்பின் செல்லா(த) தீ வாழ்க்கை யவர்—குற் றம் உடம்பினின்று நீங்காத (இரந்துண்ணும்) தீய வாழ்க்கையை உடையவரை, உடம்பின் உயிர் நீக்கியார் என்ப (ஆன்றோர்)—(முற் பிறப்பில்) உடம்பினின்று உயிரை நீக்கியவர் என்பர் ஆன்றோர்.

அகலம். செயிர்—உறுப்புக் குறைவு அல்லது குட்டம். மணக் குடவர் பாடம் 'உயிருடம்பு நீக்கியார்'; 'செயிருடம்பூண் செய்யாத வாழ்க்கையவர்'.

கருத்து. இப் பிறப்பில் குட்ட நோய் கொண்டு இரப்பவர் முற் பிறப்பில் கொலை செய்தவர். 300.

துறவறவியல் முற்றிற்று.

## வீட்டியல்.

அஃதாவது, முத்தியின் இயல்பு. இதுமுதல் முத்திக்கு நேர் நெறியாகிய ஞானத்தைக் கூறுகின்றார்.

### ௩௰௪ம் அதி:—நிலையாமை.

அஃதாவது, (உலகப் பொருள்களின்) நிலையாத தன்மை.

க. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

**பொருள்.** *நில்லாதவற்றை—(நிலையாக)நில்லாத பொருள்களை, நிலையின என்று உணரும்—நிலையுடையவை என்று அறியும், புல் அறிவு ஆண்மை—அற்ப அறிவை ஆளுதல், கடை—கடைப்பட்ட செயல் (ஆம்).*

**அகலம்.** *நிலையாக நில்லாத பொருள்கள், உலகப் பொருள்கள். கடைப் பட்ட செயலைக் கடை என்றார்.*

**கருத்து** *நிலை யில்லாத பொருள்களை நிலையின வென்று உணர்தல் மடமை.* 331.

உ. கூத்தாட் டவைகுழீஇ யற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

**பொருள்.** பெரும் செல்வம் கூத்து ஆடு அவை குழீஇ அற்று—பெருஞ் செல்வம் (வருதல்) கூத்தாட்டு அவை கூடினாற் போலும்; போக்கும் அது விளிந்து அற்று—(பெருஞ் செல்வம்) போதலும் கூத்தாட்டு அவை (கூத்து முடிந்தவுடன்) போயினாற் போலும்.

**அகலம்.** குழுவி யற்று என்பது இன்னிசை நோக்கிக் குழீஇ யற்று என நின்றது. குழீஇயற்று, விளிந்தற்று என்பன வினை

யெச்சத் தொகைகள். அவை முறையே குழீஇயினு லற்று, விளிந் தா லற்று என விரியும். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'அவைக் குழாத் தற்றே'. அவைக் குழாத்தற்றே என்பது பொருத்தமான பொருள் தாராமையானும், பின்னர் விளிந்தற்று என வருதலானும், குழீஇயற்று என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

**கருத்து.** செல்வம் வருதலும் போதலும் கூத்தாட்டவை குழுவுதலும் போதலும் போலாம். 302.

ங. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

**பொருள்.** செல்வம் அற்கா (த) இயல்பிற்று—செல்வம் (நிலையாக) நில்லாத தன்மையை யுடைத்து; அது பெற்றால் ஆங்கே அற்குப செயல்—(ஒருவன்) செல்வத்தைப் பெற்றால் (அதனைப் பெற்ற) அப்பொழுதே (நிலையாக) நிற்கும் அறங்களைச் செய்க.

**அகலம்.** அற்குதல்—தங்குதல்—நிலை பெறுதல்.

**கருத்து.** செல்வம் நிலை யில்லாதது. அது பெற்றால் உடனே அறஞ் செய்க. 303.

ச. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

**பொருள்.** நாள் என ஒன்றுபோல் காட்டி—நாள் என ஒரு பொருள்போல் தோற்றிக்கொண்டிருப்பது, உயிர் ஈரும் வாள்—உயிரை (உடம்பினின்று) பிரிக்கும் வாள், அஃது உணர்வார்ப் பெறின்—நாள் என்பது அறிவுடையாரது ஆராய்ச்சியைப் பெறுமாயின்.

**அகலம்.** காட்டி என்பது வழி காட்டி என்பதுபோல வினை யாலணையும் பெயர். நாள் என ஒன்றுபோல் காட்டி என்றமையால், நாள் என்று ஒரு பொருள் இல்லை என்பதும், அது மனத்தின் கற்

பனையே என்பதும் பெற்ரும். அஃது என்பது செய்யுள் விகாரத்தால் ஆய்தம் தொக்கு நின்றது. உணர்வாரது ஆராய்ச்சியைப் பெறின் என்பதனை உணர்வார்ப் பெறின் என்ருர். அறிவுடையார் ஆராய்ச்சியில் நாள் என்பது ஒரு பொருள் அன்று என்பதும், அது மனத்தின் கற்பனையே என்பதும் விளங்குமாகலான்,உணர்வார்ப்பெறின்என்ருர். "தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலுங், கூற்ற மளந்துநுந் நாளுண்ணும்" என்ருர் நாலடியார். மணக்குடவர் பாடம் 'நாளென்ப தொன்றுபோல்'. 'நாள் என ஒன்றுபோல் காட்டி ஈரும் வாளது உயிர்' என்று கொண்டு கூட்டி, அதற்கு 'நாள் என்று அறுக்கப்படுவதொரு காலவரையறை போலத் தன்னைக் காட்டி ஈர்ந்து செல்கின்ற வாளின் வாயது உயிர்' என்று விளக்கமும் பொருத்தமும் இல்லாதவாறு பொருள் உரைப்பாரும் உளர். அவர் 'காட்டி' என்பதை வினையாலணையும் பெயராகக் கொள்ளாமல் வினையெச்சமாகக் கொண்டும், 'அஃது' என்பது செய்யுள் விகாரத்தால் ஆய்தம் கெட்டு நின்றது என்று கொள்ளாமல் 'அது' என்பது குற்றிய லுகரம் அன்றெனஉரைத்தும் இடர்ப்படுவ ராயினர்.

**கருத்து.** நாள் உயிரை அறுக்கும் வாள். 304.

கு. நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

**பொருள்.** நா செற்று விக்குள் மேல் வாரா (த) முன்–(பேசாதவாறு) நாவைச் செறுத்து விக்கல் மேலே வாராத முன்னர், மேல் சென்று நல்வினை செய்ய படும்— (ஒருவன்) விரைந்து நல்ல வினையைச் செய்ய வேண்டும்.

அகலம். மேற் செல்லல்—விரைதல். செறுத்தல்—அடக்குதல். வாராத என்பது ஈறு கெட்டு நின்றது.

**கருத்து.** இளமையிலேயே அறஞ் செய்க. 305.

௬. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

**பொருள்.** நெருநல் உளன் ஒருவன் இன்று இல்லை என்னும் பெருமை—நேற்று உள்ளான் ஒருவன் இன்று இல்லை என்று சொல்லும் பெருமையை, இ உலகு உடைத்து—இவ் உலகம் உடையது.

**அகலம்.** உளன் என்பது குறிப்பு வினையாகலான், அது நேற்று உளன் இன்று' உளன்', 'நாளை உளன்' என முக் காலத்திலும் வரும். தருமர் பாடம் 'பெருமை பிறங்கிற் றுலகு

**கருத்து.** உயிர் நிலையற்றது; ஒரு கணத்தில் நீங்குவது. 306.

௭. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல.

**பொருள்.** ஒரு பொழுதும் வாழ்வது அறியார் கருதுப—(தாம்) ஒருபொழுதும் வாழ்தலை அறியாதார் எண்ணுவன, கோடியும் அல்ல பல—கோடியும் அல்ல (அவற்றிற்கு மேலும்) பல (எண்ணங்கள்).

**அகலம்.** "எண்பது கோடிநினைந் தெண்ணுவன" என்றார் ஔவையார். ஒருபொழுதும் வாழ்வ தறியார் (தம் வாழ்நாள் களைக்) கோடியும் அல்ல (அதற்கு மேலும்) பல என்று கருதுவர் என்றும், ஒருபொழுதும் வாழ்வதறியார் கோடியு மன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினைப்பர் என்றும் உரைப்பார் சிலர்.

**கருத்து.** ஒருபொழுதும் உடம்போடு கூடி உயிர் வாழ்தல் உறுதி இல்லை. 307.

௮. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
யுடம்போ டுயிரிடை நட்பு.

**பொருள்.** உடம்போடு உயிரிடை நட்பு—உடம்புடன் உயிரிடை (உண்டாய) நட்பு (நிலையாமை), குடம்பை தனித்து ஒழிய

புள் பறந்தற்று—கூடு (மரத்தின்கண்) தனித்துக் கிடக்கப் பறவை (அதினின்று) பறந்தாற் போலும்.

**அகலம்.** "கூடு புள்ளுடன் தோன்றாமையானும், அதன்கண் அது மீண்டு புகுத லுடைமையானும் உடம்பிற்கு உவமை யாகாமை யறிக" என்று கூறிக் குடம்பை என்பதற்கு முட்டை எனப் பொருள் உரைப்பாரும் உளர். அவர் இவ் வதிகாரம் "நிலையாமை" என்பதையும், இக் குறள் உடம்பைவிட்டு உயிர் நீங்கும் தன்மையையே கூறுகின்ற தென்பதையும், உடம்போடு உயிர் தோன்றுதலையாவது, உடம்பினுள் உயிர் மீண்டு புகாமை யையாவது கூற வந்த தில்லை யென்பதையும் நோக்கிலர். அன்றியும், முட்டையை விட்டு வெளிப்படும் உயிரை அப் பருவத்தில் பார்ப்பு என்று சொல்லுதல் வழக்கே யன்றிப் புள் என்று சொல்லுதல் வழக் கன்று. மேலும், முட்டையை விட்டு வெளிப்பட்ட வுடன் பறக்கும் பார்ப்பை நாம் கண்டது மில்லை; கேட்டது மில்லை. "கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி, வாழாதே போவரான் மாந்தர்கள்—வாளாதே, சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல யாக்கை தமர்க்கொழிய நீத்து."—நாலடியார்.

**கருத்து.** உயிர் நினைத்த மாத்திரத்தில் உடம்பை விட்டு நீங்கி விடும். 308.

கூ. உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

**பொருள்.** சாக்காடு உறங்குவது போலும்—இறத்தல் உறங்குதலை ஒக்கும்; பிறப்பு உறங்கி விழிப்பது போலும்—பிறத்தல் உறங்கி விழித்தலை ஒக்கும்.

**கருத்து.** இறப்பும் பிறப்பும் மாறி மாறி வரும். 309.

ய. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

**பொருள்.** உடம்பினுள் துச்சில் இருந்த உயிர்க்கு—(வளி, அனல், நீர் இம் மூன்றற்கும் சொந்தமாய) உடம்பினுள் ஒதுக்குக் குடியாயிருந்த உயிருக்கு, புகு இல் அமைந்(த) தின்றோ—(நிலையாகப்) புகுந்திருக்கு)ம் இல்லம் அமைந்த தின்றோ.

**அகலம்.** வளி, அனல், நீர் என்பனவற்றை வடநூலார் முறையே வாதம், பித்தம், சிலேற்பனம் என்பர். அம் மூன்றில் ஒன்று வெகுளவே, உயிர் உடம்பை விட்டு ஓடிப்போம் என்ற வாறு. கொல் என்பது அசை. அமைந்த தின்று என்பது செய்யுள் விகாரத் தால் தகரம் கெட்டு நின்றது. அடு+இல்=அட்டில் என்றாயது போல, புகு+இல்=புக்கில் என்றாயது.

**கருத்து.** வாத பித்த சிலேற்பனங்களில் ஒன்று மிகுந்தால், உடனே உயிர் போய்விடும். 310.

## ௩௰௨-ம் அதி:—துறவு.

*அஃதாவது, (அகப் புறப் பற்றுக்களை) விடுதல்.*

க. யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன்.

**பொருள்.** யாதனின் யாதனின் நீங்கியான்—(ஒருவன்) எதி னின்று எதினின்று நீங்கினானோ, அதனின் அதனின் நோதல் இலன் —அதனால் அதனால் துன்புறுதல் இலன்.

**அகலம்.** ஒரு பொருளினின்று நீங்கலாவது, அப் பொருளின் பற்றினை விடுதல். தாமத்தர் பாடம் 'அதனி னிலை'. அதனின் அத னின் என்பன வேற்றுமை மயக்கம், ஐந்தாம் வேற்றுமை யுருபு மூன்றாம் வேற்றுமைப் பொருளில் வந்தமையால்.

**கருத்து.** ஒரு பொருளின் மீதுள்ள பற்றை விட்டால், அப் பொருளால் உண்டாகும் துன்பம் இல்லை. 311.

## துறவு.

வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

**பொருள்.** துறந்தபின் ஈண்டு இயல் பால பல—(அகப்பற்றுப் புறப்பற்றுக்களை) விடுத்தபின் இவ் வுலகில் பொருந்தல் பகுதியன பல; உண்டாக வேண்டின் துறக்க—(அவை) உண்டாக (ஒருவன்) விரும்பின் துறக்கக் கடவன்.

**அகலம்.** அகப்பற்று—யாக்கையின் பற்று. புறப்பற்று—பொருளின் பற்று. பொருந்தற் பகுதியன, பெருமை, பேரின்பம், முதலியன. தாமத்தர் பாடம் 'துறந்ததற்பின்'.

**கருத்து.** துறவால் பல நன்மைகள் உண்டாம்; ஒருவன் அவற்றை அடைய விரும்பின் துறக்கக் கடவன். 312.

௩. அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு.

**பொருள்.** ஐந்தன் புலத்தை அடல் வேண்டும்—துறவு நெறி நிற்போர்) ஐம்பொறிகளின் புலங்களை வெல்லல் வேண்டும்; வேண்டிய எல்லாம் ஒருங்கு விடல் வேண்டும்—(அதற்கு வழி) ஐம்பொறிகள் விரும்பியன எல்லாவற்றையும் ஒன்றாக விடல் வேண்டும்.

**அகலம்.** ஐம்பொறிகளாவன:—மெய், வாய், கண், மூக்கு, செவி. அவற்றின் புலங்களாவன:—ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை. மணக்குடவர், தாமத்தர் பாடம் 'ஐந்தின்'.

**கருத்து.** பொறிகளை வெல்வதற்கு வழி புலங்களை விட்டு நீங்குதல். 313.

இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து.

**பொருள்.** நோன்பிற்கு ஒன்று(ம்) இன்மை இயல்பு ஆகும்—(துறவிகளின்) தவத்திற்கு ஒரு பொருட்பற்றும் இல்லாதிருத்தல் இயல்பு ஆகும்; உடைமை மற்றும் பெயர்த்து மயல் ஆகும்—(யாதானும் ஒரு பொருட் பற்றினை) உடைமையால் துறவும் நீங்கி மயக்கம் உண்டாம்.

**அகலம்.** ஒன்றின் பற்றினை ஒன் றென்றார். மற்று என்பது துறவைக் குறித்து நின்றது. உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. முந்திய உரையாசிரியர்கள் 'பாடம்' 'பெயர்த்து'. 'மயல் ஆகும்' என்று ஆசிரியர் கூறியிருத்தலான், உடைமை என்பதை மூன்றும் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு பொருளுரைக்க வேண்டியதாயிருக்கிறது. அவ்வாறு பொருளுரைக்குங்கால். 'பெயர்த்து' என்பதே பொருத்தமான பொருளைத் தருதலான், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** ஒரு பொருட் பற்றும் இல்லாமை தவத்திற்கு இயல்பு. 314.

௫. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.

**பொருள்.** பிறப்பு அறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை—பிறப்பினை ஒழித்தலைப் பொருந்தியவர்க்கு உடம்பின் பற்றும் மிகுதி, மற்றும் தொடர்ப்பாடு எவன்—வேறு பொருளையும் பற்றி நிற்றல் யாது காரணம்?

**அகலம்.** 'கொல்' அசை. 'உடம்பு' ஆகு பெயர்.

**கருத்து.** தவஞ் செய்வார்க்கு உடம்பின் பற்றே மிகை. 315.

௬. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

**பொருள்.** யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்—யான் எனது என்னும் மயக்கினை ஒழிப்பவன், வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்—தேவர்க்கும் எட்டாத வீட்டுலகின்கண் புகுவன்.

**அகலம்.** யான் என்பது அகப் பற்று. எனது என்பது புறப் பற்று. சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

**கருத்து.** 'யான்', 'எனது' நீத்தவர் வீடு பெறுவர். 316.

எ. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

**பொருள்.** பற்றினை பற்றி விடாதவர்க்கு—(அகப் புறப்) பற்றுக் களைப் பற்றிக்கொண்டு விடாதவரை, இடும்பைகள் பற்றி விடா—துன்பங்கள் பற்றிக்கொண்டு விடா.

**அகலம்.** விடாதவர்க்கு என்பது வேற்றுமை மயக்கம், நான்காம் வேற்றுமை யுருபு இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்தமையால். அளபெடை இசை நிறைக்க வந்தது.

**கருத்து.** பற்றுக்களை விடாதவரைத் துன்பங்கள் விடா. 317.

அ. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

**பொருள்.** தீர துறந்தார் தலை பட்டார்—முற்றத் துறந்தார் கடவுளை அடைந்தார்; மற்றையவர் மயங்கி வலை பட்டார்—முற்றத் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையின்கண் சிக்கினர்.

**அகலம்.** தலை—தலைவன்—கடவுள். கடவுளை அடைந்தார்க்கு பிறப்பில்லை என்பது ஒருதலையாகலான், தலை என்பதற்குக் கடவுள் எனப் பொருள் உரைக்கப்பட்டது. தலைப்பட்டார் என்பதற்கு (வீட்டினை) அடைந்தார் என்று உரைப்பினும் அமையும்.

**கருத்து.** முற்றத் துறந்தார் வீட்டினை அடைந்தார். 318.

பற்றற்ற கண்ணே பிறப்பறு மற்று
நிலையாமை காணப் படும்.

**பொருள்.** பற்று அற்ற கண்ணே பிறப்பு அறும்—(அகப் புறப்) பற்று நீங்கிய விடத்தே பிறப்பு நீங்கும்; மற்று நிலையாமை(யும்) காணப்படும்—பற்று நீங்காத விடத்து (பிறப்பு மாத்திரமன்று) இறப்பும் காணப்படும்.

**அகலம்.** நிலையாமையே இறப்பாகலான், இறப்பினை நிலையாமை என்றார். நிலையாமை என்பதற்குப் பிறப்பு மாறி மாறி வருதல் என்று உரைப்பாரும் உளர். ஏகாரம் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. இறந்தது தழீஇய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'பிறப்பறுக்கும்'. பிறப்பறுக்கும் என்பதற்கு எழுவாயாக வருவிக்கும் சுட்டுப் பெயர் 'கண்ணே' என்ற பொருட் பொருத்த மற்ற சொல்லையே சுட்டு மாகலானும், பற்று அறாத இடத்தே நிலையாமை காணப்படும் என்று கூறியிருத்தலானும், 'பிறப்பறும்' என்பதே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

**கருத்து.** பற்று இல்லார்க்குப் பிறப்பு இல்லை. 319.

ம. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

**பொருள்.** (பற்று கொளற்கு) பற்று அற்றான் பற்றினை பற்றுக—(வேண்டிய) பொருள்களை அடைவதற்குப் பற்று அற்று நிற்பவனது பற்றுக்கோட்டினைப் பற்றுக: பற்று விடற்கு(ம்) அப் பற்றை(யே) பற்றுக—உலகப் பொருள்களின் பற்றை விடுவதற்கும் அப் பற்றுக்கோட்டினையே பற்றுக.

**அகலம்.** பற்றுக் கோடு—பற்றும் கொம்பு. அப் பற்றையே என்பதன் ஏகாரமும், விடற்கும் என்பதன் உம்மையும் செய்யுள்

விகாரத்தால் தொக்கன. அப் பற்றை என்றமையால், 'பற்றுக் கொளற்கு' என்பது சொல்லெச்சமாகக் கொள்ளப்பட்டது. துற வதிகாரத்தின்கண்ணே பொருள்களைக் கொள்ளுதலைக் கூறுவா னேன் என்னின், பொருளில்லாதார் துறவார், துறத்தற்கு அவர்பால் ஒன்றும் இன்மையான். பொருள் இல்லாதார் துறக்கவேண்டின், அவர் துறப்பதற்குரிய பொருள்களை முன்னர்க் கொள்ளல் வேண்டும். பற்று என்னும் சொல் மீண்டும் மீண்டும் வருதலால் இது சொற் பொருட்பின்வரு நிலையணி.

**கருத்து.** பொருட்பற்றை விடுதற்கும் பொருளைக் கொள்ளு தற்கும் கடவுளைப் பற்றுக. 320.

## ௩௬-ம் அதி:—மெய் யுணர்தல்.

அஃதாவது, மெய்ப்பொருளை உணர்தல்.

க. பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு.

**பொருள்.** மாணா(த) பிறப்பு—மாட்சிமை யில்லாத பிறப்பு, பொருள் அல்லவற்றை பொருள் என்று உணரும் மருளான் ஆம்—மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்று அறியும் மயக்கத்தால் உண்டாம்.

**அகலம்.** பிறப்புப் பல துன்பங்களைப் பொருந்தியிருத்தலா னும், இறப்புப் பின்னர் எய்தலானும் அதனை மாணாப் பிறப்பு என்றார். மெய்ப்பொருள்—உண்மையான பொருள்—என்றும் உள்ள பொருள். அழிதல் மாலையனவாகிய உலகப் பொருள்களை அழியாமல் என்றும் நிலை நிற்கும் பொருள்க ளென்று கொள்ளுதல் மயக்க உணர்வு எனவும், அவ்வுணர் வுடைமையால் பிறப்பு உளதாகும் எனவும் கூறினார்.

**கருத்து.** உலகப் பொருள்களை உள்ள பொருள்களாகக் கருதல் பிறப்புக்குக் காரணம். 321.

உ. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

**பொருள்.** மருள் நீங்கி மாசு அறு காட்சி அவர்க்கு—மயக்கத்தினின்றும் நீங்கிக் குற்றம் அற்ற அறிவினை யுடையவர்க்கு, இருள் நீங்கி இன்பம் பயக்கும்—(நரகம் என்னும்) துன்பம் நீங்கி வீடு என்னும் இன்பம் உண்டாம்.

**அகலம்.** குற்றமற்ற அறிவாவது, மெய்ப்பொருளை மெய்ப் பொருளாகக் காணும் அறிவு. அவ் வறிவினை உடையார்க்குத் துன்பமே இல்லை எனவும், இன்பமே உண்டு எனவும் கூறினூர். "பூத்தலும் பயத்தலும் உண்டாதற்பொருள்" என்று சேந்தன் திவாகரம் கூறுகின்றமையால், பயக்கும் என்பதற்கு உண்டாம் என்று பொருள் உரைக்கப்பட்டது. இத் திவாகரத்தை அறியாதார் இருள் நீக்கி என்பதன் ககர ஒற்றுத் தொடை நோக்கி மெலிந்தது என உரைப்பர்.

**கருத்து.** மெய்யறிவு துன்பத்தை நீக்கி இன்பத்தை நல்கும்.

ந. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து.

**பொருள்.** ஐயத்தின் நீங்கி தெளிந்தார்க்கு—ஐயத்தினின்று நீங்கி (மெய்ப்பொருளைத்) தெளிந்தவர்க்கு, வானம் வையத்தின் நணியது உடைத்து—வீட்டுலகம் பூவுலகைப்போல அணித்தாதலை யுடையது.

**அகலம்.** 'மெய்ப்பொருளை' என்பது அதிகாரத்தால் கொள்ளப்பட்டது. ஐயம்—சந்தேகம். அணித்தாதல்—சமீபமாதல். தெளிதலாவது, பொய்ப் பொருளைப் பொய்ப்பொருளாகக் கண்டு. நீக்கி,

## மெய்யுணர்தல்.

மெய்ப்பொருளை மெய்ப்பொருளாக அறிதல். மணக்குடவர் பாடம் 'நீங்கித் துணிந்தார்க்கு'.

**கருத்து.** மெய்ப்பொருளுணர்ந்தார் வீட்டினை அடைவர். 323

ச. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

**பொருள்.** மெய் உணர்வு இல்லாதவர்க்கு—மெய்ப்பொருளின் உணர்வு இல்லாதவர்க்கு, ஐ உணர்வு எய்தியக் கண்ணும் பயம் இன்று—ஐந்து உணர்வுகள் எய்திய இடத்தும் பயன் இல்லை.

**அகலம்.** ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. ஐயுணர்வுகள் எய்தலாவது, தேச காலங்களால் தடுக்கப்படாது ஐம்புலங்களையும் ஐம்பொறிகள் அறிதல். அஃதாவது, கண் மூன்று காலங்களிலும் எல்லாத் தேசங்களிலும் உள்ள பொருள்களைக் காண்டல்; அவ்வாறே செவி, மூக்கு, மெய், வாய் என்னும் மற்றைய நான்கு பொறிகளும் முறையே மூன்று காலங்களிலும் எல்லாத் தேசங்களிலும் உள்ள ஓசை, நாற்றம், ஊறு, சுவை என்னும் மற்றைய நான்கு புலங்களையும் அறிதல். இதற்குப் பிறரெல்லாம் பொருட் பொருத்தம் இல்லாதபடி உரைத்தார். தாமத்தர் பாடம் 'பயனின்றே'.

**கருத்து.** மெய்யுணர்வு இல்லாதவர்க்கு ஐயுணர்வு எய்திய வழியும் பயன் இல்லை. 324.

ரு. எப்பொருள் ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

**பொருள்.** எ பொருள் எ தன்மைத்து ஆயினும்—எப் பொருள் எத் தன்மையை யுடையதாயினும், அ பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு—அப் பொருளின்கண் மெய்ப்பொருளைக் காண்பது அறிவு.

அகலம். உலகப் பொருள்களின் நாம ரூபங்களை விடுத்து, அவற்றிற்கு ஆதாரமான உண்மைப் பொருளைக் காண்டல் அறிவு. நாமம்—பெயர். ரூபம்—உருவம். இக் குறளால் உலகப் பொருள்கள் மூலமாக மெய்ப்பொருளைக் காணும் வழியைக் கூறினார்.

கருத்து. உலகப் பொருள்களுக்கு ஆதாரமா யுள்ளது மெய்ப் பொருள். 325.

சு. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

பொருள். கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார்—(கற்கத் தக்க நூல்களைக்) கற்று இவ்வுலகின்கண் மெய்ப்பொருளைக் கண்டவர், மற்று ஈண்டு வாரா(த) நெறி தலைப்படுவர் — திரும்பி இவ் வுலகிற்கு வாராத வழியை அடைவர்.

அகலம். மெய்ப்பொருளைக் காண்டற்குக் கல்வி இன்றியமையாத தென்பதைக் குறிப்பதற்காகக் கற்று என்றார். கற்கத் தக்க நூல்களாவன, அறநூலும் ஆன்ம நூலும். இவ் வுலகத்தைவிட்டு வேறு உலகத்தில் மெய்ப் பொருளைக் காணலாகுமோ என்று நினைப் பாரைக் கருதி, இவ் வுலகின்கண்ணேயே மெய்ப்பொருளைக் காண லாகும் என்றார். மெய்ப்பொருளைக் கண்டார் பிறப்பு இறப்புக்களி னின்று நீங்குவர் என்பது ஒரு தலையாகலின், மற்று ஈண்டு வாரா நெறி தலைப்படுவர் என்றார். வாராத என்பது செய்யுள் விகாரத் தால் ஈறு கெட்டு நின்றது. இக் குறளால் மெய்ப்பொருளை இவ் வுலகத்தின்கண்ணே காணலாகும் என்றார்.

கருத்து. மெய்ப் பொருளைக் கண்டார் பிறப்பினை அடையார்.

எ. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

## மெய்யுணர்தல்.

**பொருள்.** *ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின்—(அகத்துள் நோக்கி) ஆராய்ந்து உள்ளத்தின்கண் உள்ளதாகிய மெய்ப்பொருளை உணரின், ஒருதலையா(க) பேர்த்து பிறப்பு உள்ள வேண்டா—உறுதி யாகத் திரும்பிப் பிறப்பினை நினைக்க வேண்டா.*

**அகலம்.** *இக் குறளால் அகத்தினுள்ளே மெய்ப்பொருளைக் காணும் வழியைக் கூறினர். உள்ளத்தின்கண் உள்ளதாகிய மெய்ப் பொருளாவது, உள்த்தாலும், பொறிகளாலும் உயிர் செய்வனவற்றை யெல்லாம் சான்றாகக் கண்டுகொண்டிருக்கும் அறிவு. ஈண்டும் மெய்ப் பொருளைக் கண்டார்க்குப் பிறப்பு இறப்புக்கள் இல்லை யென்பதை வற்புறுத்தினர். ஒருதலையாக என்பது ஈறு கெட்டு நின்றது.*

**கருத்து.** *உள்ளத்தின்கண் உள்ளதாகிய அறிவை உணர்ந்தார்க் குப் பிறப்பு இல்லை.* 327.

அ. *பிறப்பினும் பேதைமை நீங்கிச் சிறப்பினுஞ்*
*செம்பொருள் காண்ப தறிவு.*

**பொருள்.** *பிறப்பு எனும் பேதைமை நீங்கி—பிறப்பை நல்கும் மடமையினின்று நீங்கி, சிறப்பு எனும் செம்பொருள் காண்பது அறிவு— வீட்டை நல்கும் செவ்விய பொருளைக் காண்பது அறிவு.*

**அகலம்.** *பிறப்புக்குக் காரணம் மடமை என்பதும், அதனை நீக்க வல்லது மெய்யறிவே என்பதும் இக் குறளால் கூறப்பட்டன. செவ்விய பொருள்—குற்றம் இல்லாத பரம் பொருள்.* **தருமத்தர்** *பாடம் 'பிறப்பினும்'; 'நீங்கி'; 'சிறப்பினும்'. மற்றை நால்வர் பாடம் 'சிறப்பென்னும்'; 'நீங்க'; 'பிறப்பென்னும்'.* **தாமத்தர்** *பாடமே நேரிய பொருளைத் தருகின்றமையான், அவர் பாடமே ஆசிரி யர் பாடம் எனக் கொள்ளப்பட்டது. 'பேதைமை' ஐந்தாம் வேற் றுமைத் தொகை.*

**கருத்து.** *மெய்ப்பொருளைக் காண்டலே மெய்யறிவு.* 328.

௯. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

**பொருள்.** சார்பு உணர்ந்து சார்பு கெட ஒழுகின்—(எல்லாவற்றிற்கும்) ஆதாரமாயிருக்கிற மெய்ப்பொருளை உணர்ந்து தனது (அகப்புறப்) பற்றுக்கள் ஒழிய ஒருவன் ஒழுகின், சார்தரும் நோய் மற்று அழித்து சார்தரா—(மேல்) சாரக் கடவனவாய துன்பங்கள் அவ்வொழுக்கத்தை அழித்துச் சார மாட்டா.

**அகலம்.** அவ்வொழுக்கம் அழிந்தாலன்றித் துன்பங்கள் வாரா வென்பதும், துன்பங்கள் அவ்வொழுக்கத்தை அழிக்கும் வலி யுடையன அல்ல என்பதும் இதனால் கூறப் பெற்றன. **தருமர்** பாடம் 'சார்வுணர்ந்து சார்வு'

**கருத்து.** மெய்யுணர் வுடையார்க்குத் துன்பங்கள் இல்லை. 329.

௰. காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

**பொருள்.** காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாம(மு)ம் கெட—காமமும் கோபமும் மயக்கமும் (ஆகிய) இவை மூன்றினுடைய பெயர்களும் கெட, நோய் கெடும்—துன்பங்களெல்லாம் அழியும்.

**அகலம்** இறந்தது தழீஇய எச்ச உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது; அவ்வும்மை காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக் குற்றங்களையும் தழுவி நின்றது.

**கருத்து.** இவை மூன்றும் கெடவே, மெய்யுணர்வு உண்டாம்; மெய்யுணர்வு உண்டாகவே, முன் வினைப் பயன்களாகிய துன்பங்களெல்லாம் ஒழிந்து போம். 330.

## ௩௰௪-ம் அதி:—அவா வறுத்தல்.

அஃதாவது, ஆசையை ஒழித்தல்.

க. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து.

பொருள். அவா எல்லா உயிர்க்கும் எ ஞான்றும் தவா(த)பிறப்பு ஈனும் வித்து—ஆசை எல்லா உயிர்களுக்கும் எந் நாளும் கெடாத பிறப்பினைக் கொடுக்கும் வித்து.

அகலம் 'என்ப' அசை. அளபெடை ஈண்டு இசை நிறைக்க வந்தது.

கருத்து. பிறப்புக்கு வித்து அவா. 331.

உ. வேண்டுங்கால் வேண்டல் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

பொருள். வேண்டுங்கால் பிறவாமை வேண்டல்—(ஒருவன்) விரும்புங்கால் பிறவாமையை விரும்புக; அது வேண்டாமை வேண்ட வரும்—பிறவாமை விரும்பாமையை விரும்ப வரும்.

அகலம். 'மற்று' அசை. விரும்பாமையாவது, உலகப் பொருளொன்றையும் விரும்பாதிருத்தல். முந்திய உரையாசிரியர்கள் பாடம் 'வேண்டுங்கால் வேண்டும்'. வேண்டும் என்பது பொருத்தமான பொருளைத் தாராமையானும், 'வேண்டல்' என்பதே பொருத்தமான பொருளைத் தருதலானும், அதுவே ஆசிரியர் பாடம் எனக் கொள்ளப்பட்டது.

கருத்து. அவா இல்லார்க்குப் பிறப்பு இல்லை. 332.

ந. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில்.

**பொருள்.** வேண்டாமை அன்ன விழு செல்வம் ஈண்டு இல்லை—விரும்பாமையை ஒத்த மேலான செல்வம் இவ் வுலகில் இல்லை; யாண்டும் அஃது ஒப்பது இல்—(வேறு) எவ் வுலகிலும் விரும்பாமையை ஒத்த (மேலான) செல்வம் இல்லை.

**அகலம்.** நச்சர், பரிமேலழகர் பாடம் 'ஆண்டும்'. மற்றை மூவர் பாடம் 'யாண்டும்'.

**கருத்து.** அவா இல்லாமைக்கு ஒப்பான செல்வம் எங்கும் இல்லை. 333.

௪. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.

**பொருள்.** தூய்மை என்பது அவா இன்மை—தூய்மை என்று (சிறப்பித்துச்) சொல்லப்படுவது ஆசை யில்லாமை; அது வாய்மை வேண்ட வரும்—ஆசையில்லாமை வாய்மையைக் கைக்கொள்ள வரும்.

**அகலம்.** வேண்ட என்பதனைக் கொள்ள என்னும் பொருளிற் கூறினார். மற்று என்பது அசை.

**கருத்து.** அவா வின்மை அகத் தூய்மையை நல்கும். 334.

௫. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர்.

**பொருள்.** அவா அற்றார் அற்றவர் என்பார்—ஆசையினின்று நீங்கினார் (பிறப்பு) அற்றவர் என்று சொல்லப்படுவர்; மற்றையார் அற்றாக அற்றது இலர்—ஆசையை நீங்காதார் அத்தன்மையாக (ப்பிறப்பு) நீங்கினமை இலர்.

**அகலம்.** தாமத்தர், நச்சர் பாடம் 'அற்றவ ரென்பர். 'அவா' ஐந்தாம் வேற்றுமைத் தொகை.

கருத்து. அவா வற்றவரே பிறப் பற்றவர். 335.

சு. அஞ்சுவ தோரு மவாவே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா.

பொருள். அவா ஒருவனை வஞ்சிப்பது—ஆசை ஒருவனை வஞ்சிப்பது; அவாவே அஞ்சுவது—(ஆகலான்,) அவாவே அஞ்சத் தக்கது.

அகலம். 'ஓரும்' இரண்டும், ஏகாரமும் அசைகள். தாமத்தர் பாடம் 'அஞ்சுவ தோரு மவாவே.' நச்சர் பாடம் 'அஞ்சுவ தோரு மறிவே'. தாமத்தர் பாடமே ஆசிரியர் பாடம் எனக் கொள்க.

கருத்து. அவாவினை விடுதலே மக்கள் கடமை. 336.

எ. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.

பொருள். அவாவினை ஆற்ற அறுப்பின்—(ஒருவன்) ஆசையை முற்ற ஒழிப்பின், தவா வினை தான் (த) வேண்டும் ஆற்றான் வரும்—கெடாத வினைகள் தான் விரும்பிய நெறியால் வரும்.

அகலம். கெடாத வினைகள்—அறங்கள்.

கருத்து அவாவினை விட்டார் அறங்களைப் புரிவர். 337.

அ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

பொருள். அவா இல்லார்க்கு துன்பம் இல்லாகும்—ஆசை இல்லாதார்க்குத் துன்பம் இல்லையாகும்; அஃது உண்டேல் தவாது மேன்மேல் வரும்—ஆசை உண்டாயின் (துன்பம்) கெடாது மேல் மேல் வரும்.

அகலம். "ஆசைப் படப்பட வாய்வருந் துன்பங்கள்" திரு மந்திரம்.

கருத்து. அவா இல்லார்க்குத் துன்பம் இல்லை. 338.

௬. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

பொருள். அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின்—ஆசை என்னும் துன்பத்துள் மிகுந்த துன்பம் அழியின், இன்பம் இடை அறாது ஈண்டும்—இன்பம் இடையில் நீங்காது பெருகும்.

அகலம். அவா என்னும் காரணத்தைத் துன்பம் என்னும் காரியமாக உபசரித்தார்.

கருத்து. அவா இல்லார் இன்பம் அடைவர். 339.

௰. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

பொருள். ஆரா(த)இயற்கை அவா நீப்பின்-நிரம்பாத இயல்பை யுடைய ஆசையை நீக்கின், அ நிலையே பேரா(த) இயற்கை தரும்—அந் நிலைமையே (என்றும்) ஒரே தன்மையான இயல்பினைத் தரும்.

அகலம். அவாவை நிறைவேற்ற நிறைவேற்ற அது வளர்ந்து கொண்டே போகும் இயல்பிற்றாகலின், ஆரா வியற்கை அவா என்றார். அந் நிலைமை, அவாவை நீத்த நிலைமை. ஒரே தன்மையான இயல் பாவது, பிறப்பின்றி என்றும் ஒரு படித்தா யிருக்கும் நிலைமை. பேராத—வேறுபடாத—ஒரே தன்மையான.

கருத்து. அவாவினை விட்டார்க்குப் பிறப்பு இறப்பு இல்லை. 340.

வீட்டியல் முற்றிற்று.

## ஊழியல்.

அஃதாவது, விதியின் இயல்பு.

## ௩௰௮-ம் அதி:—ஊழ்.

அஃதாவது, விதி.

க. ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

**பொருள்.** கை பொருள் ஆகு ஊழால் அசைவு இன்மை தோன்றும்—கைப் பொருள் ஆகும் விதியால் சோம்பலின்மை தோன்றும்; கை பொருள் போகு ஊழால் மடி தோன்றும்—கைப் பொருள் போகும் விதியால் சோம்பல் தோன்றும்.

**அகலம்.** கைப் பொருள் என்பது சிங்க நோக்காக நிற்றலின், அது முன்னரும் பின்னரும் கூட்டி உரைக்கப்பட்டது. கை என்பது துணைப் பெயர். 'ஆகு' 'போகு' வினைத் தொகைகள்.

**கருத்து.** நல் விதிக்கு அடையாளம் சோம்ப லின்மை. 341.

உ. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை.

**பொருள்.** இழவு ஊழ் (உற்ற கடை) பேதை படுக்கும்—(கைப் பொருளை) இழத்தற்கு உரிய விதி உற்ற இடத்து (அஃது ஒருவனை) அறிவிலனாகச் செய்யும்; ஆகல் ஊழ் உற்ற கடை அறிவு அகற்றும்—(கைப் பொருள்) ஆகுதற்கு உரிய விதி உற்ற இடத்து (அஃது அவனது) அறிவைப் பெருக்கும்.

**அகலம்.** 'உற்றக் கடை' என்பது முன்னுங் கூட்டி உரைக்கப்பட்டது. இழவூழ், ஆகலூழ் என்பன நான்காம் வேற்றுமையின் குவ் வுருபும் தகுதிப் பொருளும் உடன்தொக்க தொகைகள்.

**கருத்து.** நல் விதி வந்தக்கால் அறிவு வளரும்; தீ விதி வந்தக் கால் அறிவு குறையும். 342.

௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்.

பொருள். நுண்ணிய நூல் பல கற்பினும்—(ஒருவன்) நுண்ணிய (பொருள்களை யுடைய) நூல்கள் பலவற்றைக் கற்பினும், மற்றும் தன் உண்மை அறிவே மிகும்—பின்னும் தனது விதியின் அறிவே மிகுந்து நிற்கும்.

கருத்து. ஒருவனுக்கு விதியின் அறிவே மிகுந்து நிற்கும். 343.

௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு

பொருள். உலகத்து இயற்கை இரு வேறு—உலகத்தின்கண் விதி இரண்டு வேறு (வகைப்பட்டது); திரு (வினர் ஆதல்) வேறு தெள்ளியர் ஆதலும் வேறு—செல்வத்தை உடையவராதற்கு (உரிய விதி) வேறு; அறிவை உடையவராதற்கு (உரிய விதி) வேறு.

அகலம். பின்னர்த் 'தெள்ளியராதல்' என்று கூறுகின்றமை யான், முன்னர்த் திருவினர் ஆதல் என்று கொண்டு பொருள் உரைக் கப்பட்டது. 'ஆதல்' இரண்டும் உருபும் பொருளும் உடன் தொக்க தொகைகள்.

கருத்து. செல்வவந்தராதற்கும் அறிவுடையராதற்கும் உரிய விதிகள் வெவ் வேறு. 344.

௫. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

பொருள். செல்வம் செயற்கு தீயவும் நல்ல ஆம்—செல்வத்தை ஆக்குதற் குரிய விதிக்குத் தீய செயல்களும் நல்ல செயல்களாம்; (செல்வம் அழித்தற்கு) நல்லவை எல்லாம் தீய ஆம்—செல்வத்தை அழிப்ப தற் குரிய விதிக்கு நல்ல செயல்களெல்லாம் தீய செயல்கள் ஆம்.

அகலம். நல்லவை எல்லாம் தீய வாம் என்றமையால், செல்வம் அழித்தற்கு என்பதைச் சொல்லெச்சமாகக் கொண்டு பொருள் உரைக்

கப்பட்டது. செயல் என்பதும், சொல்லெச்சமாகக் கொள்ளப்பட்ட அழித்தல் என்பதும் ஆகுபெயர்கள், முறையே அவற்றின் விதிகளுக்கு ஆயினமையால்.

**கருத்து.** நல்ல விதி யுற்ற விடத்துச் செய்வன எல்லாம் நல்லனவாம்; தீய விதி யுற்ற விடத்துச் செய்வன எல்லாம் தீயவாம். 345

௬. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம.

**பொருள்.** பால் அல்ல பரியினும் ஆகா வாம்—விதியால் (தம்முடையன) அல்லாத பொருள்கள் முயன்று வருந்தினும் உண்டாகா வாம்; தம உய்த்து சொரியினும் போகா—(விதியால்) தம்முடைய பொருள்கள் (சேய்மைக்கண்) கொண்டுபோய் எறியினும் போகா

**அகலம்.** "வருந்தி யழைத்தாலும் வாராத வாரா; பொருந்துவன போமினென்றாற் போகா".—நல்வழி.

**கருத்து.** விதிப்படி தமக்குரியன தம்மைவிட்டு நீங்கா. 346.

௭. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

**பொருள்.** வகுத்தான் வகுத்த வகை அல்லால்—(அவரவர் வினைப் பயனை அவரவர்க்கு) வகுத்த இறைவன் வகுத்தபடி அல்லாமல், கோடி தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது—கோடிப் பொருள் ஈட்டினார்க்கும் துய்த்தல் இல்லை.

**அகலம்** துய்த்தல்—அனுபவித்தல். வகுத்தல் — பிரித்தல். ஈட்டல்—சேமித்தல். தாமத்தர் பாடம் 'தொகுத்தாலும்'.

**கருத்து.** தம் விதிக்குத் தக்கபடியே இன்பம் துய்ப்பர். 347.

௮. துறப்பார்மற் றப்புர வில்லா ருறற்பால
வூட்டா கழியு மெனின்.

**பொருள்.** உறல் பால ஊட்டா(து) கழியும் என்னின்—பொருந் தற் பகுதியனவாகிய விதிகள் (தமது பயன்களைக்) கொடாமல் நீங்கும் என்றால், துப்புரவு இல்லார் துறப்பார்—செல்வம் இல்லாதவர் துறப் பார்.

**அகலம்.** விதிகள் தமது பயன்களைக் கொடாமல் நீங்குதலும் இல்லை, வறிஞர் துறக்கப் போவதும் இல்லை என்றவாறு. இக் குறள் பொய்த்தற் குறிப்பணி. 'மன்' அசை. துப்புரவு — நுகர்ச்சிப் பொருள்கள்.

**கருத்து.** விதிகள் தமது பயன்களைக் கொடாமல் நீங்கா. 348.

௯. நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

**பொருள்.** நன்று ஆம் கால் நல்லவா(க) காண்பவர்—(தாம் முன் செய்த) நல் வினைகள் விளையுங்கால் இன்பங்களாக உணர்பவர், அன்று ஆம் கால் அல்லல் படுவது எவன்—(தாம் முன் செய்த) தீவினைகள் விளையுங் கால் துன்பம் உறுவது யாது காரணம்?

**அகலம்.** நன்று, அன்று என்பன சாதி யொருமைப் பெயர்கள்.

**கருத்து.** இன்பமும் துன்பமும் தம் முன் வினைப் பயன்களே.

௰. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

**பொருள்.** ஊழின் பெரு வலி யா உள—விதியைப் போலப் பெரிய வலியை யுடையவை எவை உள்ளன? மற்று ஒன்று சூழி னும் தான் முந்து உறும்—விதியை மாற்றும் ஒன்றை எண்ணினும் அவ் விதியே முற்பட்டுப் பொருந்தும்.

**அகலம்.** ஒருவன் விதைத்த வித்தின் விளைவை விட்டு வேறு வித்தின் விளைவை அடைய முடியாதது போல, ஒருவன் செய்த

வினையின் பயனை விட்டு வேறொரு வினையின் பயனை அடைய முடியா தென்றார். அஃதாவது, ஒருவன் ஒரு வினையைச் செய்து அதன் பயன் அவனைப் பொருந்தும் காலையில் அப் பயனை மாற்றுதற்கு அவன் விரும்பின், அவனால் அதனை மாற்ற முடியாது. அப் பயனை மாற்றத் தக்க வேறு ஒரு வினையைச் செய்து, அதன் விளைவாகிய வேறு ஒரு விதியை ஆக்கி, அதனால் அப் பயனை மாற்றவேண்டும். வலியை யுடையவற்றை வலி என்றார்.

கருத்து. விதியைப் போல வலி யுடையது வேறு யாதொன் றும் இல்லை. 350.

ஊழியல் முற்றிற்று.

அறப்பால் முற்றிற்று.

# திருக்குறள்—சிறப்புப்பாயிரம்.

## செய்யுள் முதற்குறிப் பகராதி.

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

# செய்யுள் முதற் குறிப்பகராதி.

# செய்யுள் முதற்குறிப் பகராதி.

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

# திருக்குறள்—அறப்பால்.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| VI | 4 & 5 | 12 & 5 | 22 & 12 |
| 5 | 20 | உயையாசிரியர்கள் | உரையாசிரியர்கள் |
| 16 | 23 | இ—ன் | இ—ள் |
| 26 | 14 | அதிசார | அதிகார |
| 37 | 18 | நரிவெருத்தலையார் | நரிவெரூஉத்தலையார் |
| 40 | 24 | தைந்தாற் றளிய | தைந்தாற் றெளிய |
| 45 | 10 | யுண்டாககிக் | யுண்டாக்கிக் |
| 46 | 22 | ஒதும் | ஓதும் |
| 48 | 2 | கிசை, வண்ணம், | கிசைவண்ணம், |
| ,, | 12-13 | கலைநிரம்பி...எனினும் | கலைநிரம்பி |
| ,, | 15 | ஆராய்ச்சி | நோக்குதற்கு ஆராய்ச்சி |
| ,, | 17 | தன்மை | தண்மை |
| 51 | 10 | பாணிபூதனார் | மாணிபூதனார் |
| 55 | 19 | குறள் நாயனாது | குறள்—நாயனாது |
| 56 | 23 | விரிவு | அகலம் |
| 61 | 4 | பிழைகளை | எழுத்துப் பிழைகளை |
| 68 | 21-22 | பின்வருகிறபடி | அச்சிடச் |
| 69 | 22 | புாாணங் | புராணங் |
| 70 | 12 | யவாது | வாது |
| 76 | 7 | தேவனுடைய | தேவன் |
| 79 | 19 | எற்றுப் திரை புனல் | எற்று திரை புனல் |
| 80 | 1 | வென்றேன், | வென்றேன்— |
| ,, | 24 | விடையத்தில்— | விடையத்தில்... |
| 93 | 25 | என்று சொல்ல | என்று |
| 96 | 10 | வெளிர்க்ச | வெளிர்க்க |
| 99 | 2 | திரண்ட . கல் | திரண்ட கல் |
| 99 | 10 | கோதனங்கள்.... | கோதனங்கள்— |
| 110 | 4 | தழீய | தழீஇய |
| 113 | 17 | ஐம்புலன்களையும் | ஐம்புலன்களையும் |
| 118 | 2 | மறத்தலினாங் கில்லை | மறத்தலி னாங்கில்லை |

